بسم الله الرحمن الرحيم

# الفقه الميسر

في ضوء الكتاب والسنة

تأليف نبذة من العلماء حفظهم الله




குர்ஆன், சுன்னா ஒளியில்

# இலகுவான மார்க்க சட்டம்

## كِتَابُ الصَّلَاةِ

## ஸலாஹ் - தொழுகை

அரபியில் :
அறிஞர்களின் குழு

தமிழில் :
குர்ஆன், சுன்னா பணியாளர்
உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்



# About This Book


| | |
|---|---|
| Book Name in Arabic | : كتاب الصلاة الفقه الميسر |
| Book Name in English | : BOOK OF SOLAH - PRAYER |
| Book Name in Tamil | : தொழுகை |
| Language | : Tamil |
| Author | : Group of Scholars (KSA) |
| Translator in Tamil | : Omar Sheriff Ibnu Abdul Salam |
| Proof Readers | : O.M. Kaja Mohaideen Rabbani, A. Abdul Kader Rabbani, |
| Layout & Cover Design | : Z. Abdul Bari Sadaqi |
| Date of Publication | : February 2019 |
| Edition | : 2nd (February 2020) |
| Total Pages | : 260 |
| Copies | : 2000 |
| Paper | : 70 GSM |
| Reference No. | : DH-TML 2056 |
| **Price** | **: Rs. 150/-** |

Published by:



**DARUL HUDA**

Quality Islamic Book Publishers

# 211 (102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai-600001.

Phone : +91-44-25247866, | darulhuda.chennai@gmail.com

Mobile : +91-98401 74121 | www.darulhuda.net

# உள்ளே...

**பாடம் 1** : ஸலாஹ் பொருள், சிறப்பு ........ 7

**பாடம் 2** : அதான், இகாமத் ........ 13

**பாடம் 3** : தொழுகையின் நேரங்கள் ........ 21

**பாடம் 4** : தொழுகையின் ஷர்த்துகள் மற்றும் ருக்னுகள் ........ 27

**பாடம் 5** : நஃபில் தொழுகைகள் ........ 71

**பாடம் 6** : மறதிக்கான ஸஜ்தா, ஓதுவதற்கான ஸஜ்தா, நன்றிக்கான ஸஜ்தா ........ 89

**பாடம் 7** : ஜமாஅத் தொழுகை ........ 104

**பாடம் 8** : தொழுகைக்கு இமாமத் செய்வது ........ 123

**பாடம் 9** : தகுந்த காரணம் உள்ளவர்களின் தொழுகை ........ 143

**பாடம் 10** : ஜும்முஆ தொழுகை ........ 163

**பாடம் 11** : அச்சத் தொழுகை ........ 189

**பாடம் 12** : இரு பெருநாள் தொழுகைகள் ........ 194

**பாடம் 13** : மழைத் தொழுகை ........ 205

**பாடம் 14** : கிரகணத் தொழுகை ........ 213

**பாடம் 15** : ஜனாஸா தொழுகை மற்றும் சட்டங்கள் ........ 220




நம்பிக்கையாளர்கள் நிச்சயமாக வெற்றி அடைந்து விட்டனர். அவர்கள் மிக்க உள்ளச்சத்தோடு தொழுவார்கள். (23:1,2)

# பதிப்புரை

**الحمد لله والصلاة والسلام على رسول الله وعلى آله وصحبه أجمعين**

அல்லாஹ்வின் அருளால், அல்ஃபிக்ஹுல் முயஸ்ஸர் என்ற பெயரில் திறமை வாய்ந்த மார்க்க அறிஞர்கள் குர்ஆன் மற்றும் ஸுன்னாவின் அடிப்படையில் தொகுத்த கிரந்தத்தினுடைய தூய்மை அத்தியாயத்தை தொடர்ந்து இந்த தொழுகை அத்தியாயத்தை வெளியிடுகின்றோம்.

மார்க்க கல்வி கற்ற ஆலிம்களுக்கும் கல்வி கற்கின்ற மாணவர்களுக்கும் பொதுமக்களுக்கும் இந்நூல் இன் ஷா அல்லாஹ் பயனுள்ளதாக இருக்கும். இந்த அத்தியாயத்தை தொடர்ந்து இபாதத் மற்றும் முஆமலாத் (-வணக்க வழிபாடுகள் மற்றும் பொருளாதாரம்) தொடர்பான அத்தியாயங்களும் விரைவில் வெளிவர இருக்கின்றன இன் ஷா அல்லாஹ்...

இந்நூலில் ஏதேனும் குறைகளை தாங்கள் கண்டால் எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். அடுத்த பதிப்பில் திருத்தி வெளியிடுகிறோம்.

இந்நூல் வெளிவருவதற்கு உதவியாக இருந்த தாருல் ஹுதாவின் பணியாளர்கள் எல்லோருக்கும் இம்மை மறுமை நற்பாக்கியங்களை அல்லாஹ் தந்தருள்வானாக! ஆமீன்.

இந்நூலை அல்லாஹ் அங்கீகரித்து மக்களெல்லாம் பயன்பெறும்படி செய்வானாக! ஆமீன். தொடர்ந்து பயன்தருகின்ற நல்ல நூல்களை வெளியிடுவதற்கு அல்லாஹ் உதவி செய்வானாக!

மார்க்க பணியாளன்
*உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்*
தாருல் ஹுதா, சென்னை 600001.

முதல் பாடம்

# الباب الأول في تعريف الصلاة وفضلها ووجوب الصلوات الخمس

# ஸலாஹ் உடைய பொருள், சிறப்பு மற்றும் ஐந்து நேரத் தொழுகைகள் கடமையாகுதல்

இதில் பதினைந்து பாடங்கள் உள்ளன.

**صلاة** - ஸலாஹ்[1] என்ற பதத்தின் பொருள், அதன் சிறப்பு, மற்றும் ஐந்து நேரத் தொழுகை கட்டாயக் கடமையாக இருப்பது.

1). **صلاة** - ஸலாஹ் என்ற பதத்தின் பொருள்

**صلاة** - ஸலாஹ் என்ற பதத்தின் அகராதி பொருள் துஆ - பிரார்த்தனை ஆகும். மார்க்கத்தில் ஸலாஹ் என்றால் குறிப்பிட்ட சொற்களையும் செயல்களையும் உள்ளடக்கிய ஓர் இறை வணக்கமாகும். இதை "அல்லாஹு அக்பர்" என்று கூறி ஆரம்பிக்கப்படும். "அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ்" என்று கூறி முடிக்கப்படும்.

இதன் விளக்கம் இன் ஷா அல்லாஹ் பின் வருகின்ற பாடங்களில் வர இருக்கின்றது.

**2). صلاة - ஸலாஹ் தொழுகையின் சிறப்பு:**

இரண்டு ஷஹாதாவிற்குப் பின்னர் இஸ்லாமிய கடமைகளில் மிகவும்

1. அரபியில் ஸலாஹ் என்று அழைக்கப்படுகின்ற இஸ்லாமிய இறை வணக்கத்தை தமிழில் தொழுகை என்று அறிஞர்கள் அழைக்கின்றார்கள்.

வலியுறுத்தப்பட்ட கடமை தொழுகையாகும். இது இஸ்லாமிய மார்க்கத்தின் தூண் ஆகும். நபி ﷺ அவர்களுடைய மிஃராஜ் இரவில் ஏழு வானங்களுக்கு மேல் இந்த தொழுகையை அல்லாஹ் கடமையாக்கினான். ஒரு முஸ்லிமுடைய வாழ்க்கையில் தொழுகை எவ்வளவு முக்கியமானது என்பதற்கு இதுவே போதுமான ஆதாரமாகும்.

عَنْ حُذَيْفَةَ ﵁ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ إِذَا حَزَبَهُ أَمْرٌ صَلَّى رواه أبو داود برقم ١١٢٤

நபி ﷺ அவர்களுக்கு ஏதாவது ஒரு பிரச்சனை ஏற்பட்டால் அவர்கள் தொழுவார்கள்.[2]

தொழுகையின் சிறப்புகளை விவரிக்கின்ற பல நபிமொழிகள் உள்ளன.

நபிமொழி 1:

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يَقُولُ الصَّلَوَاتُ الْخَمْسُ وَالْجُمْعَةُ إِلَى الْجُمْعَةِ وَرَمَضَانُ إِلَى رَمَضَانَ مُكَفِّرَاتٌ مَا بَيْنَهُنَّ إِذَا اجْتَنَبَ الْكَبَائِرَ رواه مسلم برقم ٢٣٣

நபி ﷺ அவர்கள் கூறுவார்கள்: ஒருவர் பெரும் பாவங்களை விட்டு விலகி இருந்தால் (அவருடைய) ஐந்து நேரத் தொழுகைகள், ஜுமுஆ முதல் ஜுமுஆ வரை மற்றும் ரமழான் முதல் ரமழான் வரை இவை அனைத்தும் அவற்றுக்கு மத்தியில் (அவர் மூலமாக) நிகழ்ந்த பாவங்களை போக்கி விடுகின்றன.[3]

நபிமொழி 2:

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ أَرَأَيْتُمْ لَوْ أَنَّ نَهَرًا بِبَابِ أَحَدِكُمْ

2. அறிவிப்பாளர்: ஹுதைஃபா ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 1124

3. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 233

يَغْتَسِلُ مِنْهُ كُلَّ يَوْمٍ خَمْسَ مَرَّاتٍ هَلْ يَبْقَى مِنْ دَرَنِهِ شَيْءٌ قَالُوا لَا يَبْقَى مِنْ دَرَنِهِ شَيْءٌ قَالَ فَذٰلِكَ مَثَلُ الصَّلَوَاتِ الْخَمْسِ يَمْحُو اللّٰهُ بِهِنَّ الْخَطَايَا

رواه مسلم برقم ١٦٦٧

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: “உங்களில் ஒருவருடைய வீட்டின் வாசலுக்கருகில் ஒரு நதி ஓடுகிறது. அவர் அதில் ஒவ்வொரு நாளும் ஐந்து முறை குளிக்கின்றார். அவருடைய உடலில் அழுக்கு ஏதும் மீதம் இருக்குமா?” அவர்கள் கூறினார்கள்: “அவருடைய அழுக்குகளில் ஏதும் மீதம் இருக்காது.” நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: இதுதான் ஐந்து நேரத் தொழுகைகளின் உதாரணமாகும். அவற்றின் மூலம் அல்லாஹ் பாவங்களை அழித்து விடுகின்றான்.[4]

### 3). صلاة - ஸலாஹ் உடைய மார்க்க சட்டம்

ஐந்து நேரத் தொழுகைகள் ஃபர்ழ் என்ற கட்டாயக் கடமையாகும். தொழுகை 'ஃபர்ழ்' என்பது குர்ஆன், சுன்னா மற்றும் ‘இஜ்மா’வின் படி மார்க்கத்தில் நிரூபணமாகியுள்ளது.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَأَقِيمُوا الصَّلَاةَ

நீங்கள் தொழுகையை நிலை நிறுத்துங்கள்! (அல்குர்ஆன் 2:43)

அல்லாஹ் கூறுகின்றான்:

قُلْ لِعِبَادِيَ الَّذِينَ آمَنُوا يُقِيمُوا الصَّلَاةَ

நபியே! எனது அடியார்களுக்கு கூறுவீராக! அவர்கள் தொழுகையை நிலை நிறுத்தட்டும்! (அல்குர்ஆன் 14:31)

4. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: முஸ்லிம், எண்: 667

இன்னும் பல வசனங்கள் தொழுகையின் கட்டாயத்தை வலியுறுத்துகின்றன. அவ்வாறே, ஐந்து நேரத் தொழுகைகள் ஃபர்ழ் என்பதை பல நபிமொழிகளும் உணர்த்துகின்றன.

மிஃராஜ் உடைய இரவில் ஐம்பது நேரத் தொழுகையை அல்லாஹ் கடமையாக்கினான். பிறகு, மூஸா ﵇ அவர்களை நபி ﷺ அவர்கள் சந்திக்க அவர்கள், நீங்கள் அல்லாஹ்விடம் திரும்பச் சென்று இந்த எண்ணிக்கையை குறைக்கும்படி வேண்ட கூறினார்கள். இவ்வாறு நபி ﷺ அவர்கள் திரும்பச் சென்று அல்லாஹ்விடம் கேட்டு ஐந்து ஐந்தாக குறைத்து (அல்லது பத்து பத்தாக குறைத்து) இறுதியில் ஐந்து நேரத் தொழுகைகளாக அல்லாஹ் குறைத்தான். அதற்குப் பிறகு, அல்லாஹ் கூறினான்:

**قَالَ يَا مُحَمَّدُ إِنَّهُنَّ خَمْسُ صَلَوَاتٍ كُلَّ يَوْمٍ وَلَيْلَةٍ لِكُلِّ صَلَاةٍ عَشْرٌ فَذٰلِكَ خَمْسُونَ صَلَاةً رواه مسلم برقم ٢٣٤**

முஹம்மதே! இவை ஒவ்வொரு இரவிலும், பகலிலும் நிறைவேற்ற வேண்டிய ஐந்து நேரத் தொழுகைகள் ஆகும். ஒவ்வொரு தொழுகைக்கும் பத்து நேரத் தொழுகையின் நன்மை கிடைக்கும். ஆகவே, இவை ஐம்பது நேரத் தொழுகைகள் (போன்றே) ஆகும்.[5]

**عن طَلْحَةَ بْنَ عُبَيْدِ اللّٰهِ ﵁ يَقُولُ جَاءَ رَجُلٌ إِلَى رَسُولِ اللّٰهِ ﷺ فَإِذَا هُوَ يَسْأَلُهُ عَنِ الْإِسْلَامِ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ خَمْسُ صَلَوَاتٍ فِي الْيَوْمِ وَاللَّيْلَةِ فَقَالَ هَلْ عَلَيَّ غَيْرُهَا قَالَ لَا إِلَّا أَنْ تَطَّوَّعَ رواه البخاري برقم ٤٦**

தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் ﵁ கூறுகிறார்கள்: ஒருவர் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் வந்தார். அப்போது, அவர் இஸ்லாமைப் பற்றி நபி ﷺ அவர்களிடம் கேட்டார். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஐந்து நேரத் தொழுகைகள் பகலிலும் இரவிலும் (உன் மீது கடமையாகும்). அவர் கூறினார்: இவற்றைத்

5. அறிவிப்பாளர்: அனஸ் ﵁, நூல்: முஸ்லிம், எண்: 234

தவிர வேறு தொழுகைகள் என் மீது கடமையா? நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: (கடமை) இல்லை, நீ உபரியாக தொழுதாலே தவிர.[6]

**தொழுகை யார் மீது ஃபர்ழ் - கட்டாயக் கடமையாகும்?**

வயது வந்த, புத்தி சுவாதீனமுள்ள முஸ்லிம் மீது ஐந்து நேரத் தொழுகை 'ஃபர்ழ்' - கட்டாயக் கடமையாக இருக்கின்றது.

ஆகவே, காஃபிர் (-இஸ்லாமிய மார்க்கத்தை ஏற்காதவர்), சிறுவர், பைத்தியக்காரர் ஆகியோர் மீது தொழுகை ஃபர்ழ் - கடமை ஆகாது.

**عَنْ عَلِيٍّ رَضِيَ اللهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ رُفِعَ الْقَلَمُ عَنْ ثَلَاثَةٍ عَنِ الْمَجْنُونِ الْمَغْلُوبِ عَلَى عَقْلِهِ حَتَّى يَفِيقَ وَعَنِ النَّائِمِ حَتَّى يَسْتَيْقِظَ وَعَنِ الصَّبِيِّ حَتَّى يَحْتَلِمَ رواه أبو داود برقم ٣٨٢٣**

நபி ﷺ கூறினார்கள்: மூன்று நபர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டு விட்டது. தனது அறிவை இழந்த பைத்தியக்காரர் அவர் தெளிவடைகின்றவரை, தூங்குபவர் விழிக்கின்ற வரை, குழந்தை பருவ வயதை அடைகின்றவரை அவர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டு விட்டது (அகற்றப்பட்டுவிட்டது).[7]

என்றாலும், குழந்தைகள் ஏழு வயதை அடையும்போது, தொழும்படி அவர்களுக்கு கட்டளை இடவேண்டும். பத்து வயதை அடைந்த பின்னர் அவர்கள் தொழுகையை விட்டால் அவர்களை அதற்காக அடிக்க வேண்டும். இது நபி ﷺ அவர்களின் வழிகாட்டலாகும்.

**عَنْ سَبْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ مُرُوا الصَّبِيَّ بِالصَّلَاةِ إِذَا بَلَغَ سَبْعَ سِنِينَ وَإِذَا بَلَغَ عَشْرَ سِنِينَ فَاضْرِبُوهُ عَلَيْهَا رواه أبو داود برقم ٤١٧**

குழந்தைகள் ஏழு வயதை அடைந்தால் தொழும்படி ஏவுங்கள்!

6. நூல்: புகாரி, எண்: 46
7. அறிவிப்பாளர்: அலி ؓ, நூல்: அபூ தாவூத், எண்: 3823.

அவர்கள் பத்து வயதை அடைந்துவிட்டால் அதற்காக (தொழாமல் இருந்ததற்காக) அவர்களை அடியுங்கள்![8]

யார் இந்த தொழுகை 'ஃபர்ழ்' என்பதை ஏற்க மறுப்பாரோ அல்லது தொழுகையை வேண்டுமென்றே விடுவாரோ அவர் காஃபிர் - இறைமறுப்பாளர் ஆகிவிடுவார். மேலும் அவர் இஸ்லாமிய மார்க்கத்தை விட்டு வெளியேறிவிடுவார்.

**عَنْ جَابِرٍ ﵁ قَالَ سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَقُولُ إِنَّ بَيْنَ الرَّجُلِ وَبَيْنَ الشِّرْكِ وَالْكُفْرِ تَرْكَ الصَّلَاةِ رواه مسلم برقم ١٣٤**

ஜாபிர் ﵁ கூறுகிறார்: மனிதனுக்கு மத்தியிலும் ஷிர்க்[9], இன்னும் 'குஃப்ரு'க்கு மத்தியிலும் தொழுகையை விடுவதுதான் (தடையாக) இருக்கிறது.[10]

**عَنْ بُرَيْدَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ الْعَهْدَ الَّذِي بَيْنَنَا وَبَيْنَهُمُ الصَّلَاةُ فَمَنْ تَرَكَهَا فَقَدْ كَفَرَ رواه النسائي برقم ٤٥٩**

புரைதா ﵁ கூறுகிறார்கள்: "நிச்சயமாக நமக்கு மத்தியிலும் அவர்களுக்கு மத்தியிலும் உள்ள அடையாளம் தொழுகையாகும். யார் தொழுகையை விடுவாரோ அவர் காஃபிர் - இறைமறுப்பாளராக ஆகிவிடுவார்.[11]

-----------------------

8. அறிவிப்பாளர்: சப்ரா ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 417
9. ஷிர்க் - இணைவைத்தல், குஃப்ர் - இறை நிராகரிப்பு.
10. நூல்: முஸ்லிம், எண்: 134
11. அறிவிப்பாளர்: புரைதா ﵁, நூல்: நசாயி, எண்: 459

<u>இரண்டாவது பாடம்</u>

# الباب الثاني الأذان والإقامة

## அதான், இகாமத்

அதான் - தொழுகையின் நேரத்தை அறிவித்தல், இகாமத் - தொழுகை ஆரம்பிக்க அழைத்தல்

இந்த பாடத்தில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்டவிளக்கம்**

## அதான், இகாமத் உடைய பொருள், விளக்கம், மற்றும் அவை இரண்டின் சட்டம்

1). அகராதியில், அதான் என்றால் அறிவித்தல் என்று பொருள்.

அல்லாஹ் கூறுகின்றான்

وَأَذَانٌ مِّنَ اللَّهِ وَرَسُولِهِ

அல்லாஹ் இன்னும் அவனது தூதரின் புறத்திலிருந்து அதான் - அறிவிப்பாகும். (அல்குர்ஆன் 9:3)

மார்க்கத்தில் அதான் என்றால் தொழுகையின் நேரம் வந்துவிட்டதை குறிப்பிட்ட வாசகங்களின் மூலம் அறிவிப்பதாகும்.

அகராதியில் இகாமத் என்றால் நிற்க வைத்தல் என்று பொருள்.

மார்க்கத்தில் தொழுகைக்கு தயாராகும்படி குறிப்பிட்ட வாசகங்களின் மூலம் அறிவிப்பு செய்தல் என்று பொருள் ஆகும்.

2). அதான், இகாமத் உடைய சட்டம்

ஐந்து நேரத் தொழுகைக்காக அதான், இகாமத் சொல்வது ஆண்களுக்கு மிக முக்கியமான மார்க்கக் கடமையாகும். இது ஃபர்ழுல் கிஃபாயா என்ற வகையைச் சேர்ந்ததாகும். அதாவது சிலர் இதை நிறைவேற்றினால் மற்றவர்களும் குற்றத்திலிருந்து தப்பிவிடுவார்கள்.

முஸ்லிம்கள் மஸ்ஜித்களில் அதான் கூறுவது இஸ்லாமின் அடையாள சின்னங்களில் உள்ளவையாகும். ஆகவே, அதான் கூறுவதை விடுவதோ, புறக்கணிப்பதோ கூடாது.

(ஃபர்ழு அல்லாத) மற்ற தொழுகைக்கு அதான் மற்றும் இகாமத் கூறக்கூடாது. பெண்கள் ஜமாஅத்தாக தொழுதாலும் அல்லது தனியாக தொழுதாலும் அதான், இகாமத் கூறவேண்டிய கட்டாயமில்லை.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## அதான், இகாமத் நிபந்தனைகள்

அதான், இகாமத் சரியாகுவதற்கு உள்ள நிபந்தனைகள்

1). இதை நிறைவேற்றுபவர் முஸ்லிமாக இருக்க வேண்டும். காஃபிர் இவற்றை நிறைவேற்றினால் அது சரியாகாது.

2). புத்தி சுவாதீனம் இருக்க வேண்டும். ஆகவே, பைத்தியக்காரர், போதையால் புத்தி பேதலித்தவர், மற்றும் தம்யீஸ் - பக்குவமற்ற குழந்தை அதான், இகாமத் சொல்வது சரியாகாது.

3). அதான், இகாமத் சொல்பவர் ஆணாக இருக்க வேண்டும். மஸ்ஜிதில் பெண் அல்லது அரவாணி அதான், இகாமத் சொல்வது கூடாது.

பெண்ணின் குரலால் அங்கு விரும்பத்தகாத செயல்கள் நிகழலாம். அரவாணியை அவர் ஆண்தான் என்று முடிவு செய்ய முடியாது.

4). தொழுகைக்கான நேரம் வந்தவுடன்தான் அதான் கூறவேண்டும். தொழுகையின் நேரம் வருவதற்கு முன்னர் அதான் கூறுவது சரியாகாது. என்றாலும், ஃபஜ்ர் - அதிகாலை தொழுகை, ஜுமுஆ தொழுகை இவை இரண்டுக்கும் முதல் அதான் அவற்றின் நேரம் வருவதற்கு முன்னர் கூறலாம். இமாம் மஸ்ஜிதுக்குள் வந்தவுடன், தொழுகையை நிறைவேற்ற நேரம் வந்தவுடன் இகாமத் கூறவேண்டும்.

5). அதானுடைய வாசகங்களையும் இகாமத்துடைய வாசகங்களையும் நபிமொழிகளில் வந்துள்ளது போன்று தொடர்ச்சியாகவும், வரிசையாகவும் கூறவேண்டும்.

6). அதான், இன்னும் இகாமத் அரபி மொழியில்தான் இருக்க வேண்டும். ஹதீஸில் வந்துள்ள வாசகங்களைத்தான் அதான், இன்னும் இகாமத்தில் கூறவேண்டும்.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

# முஅத்தின் - அதான் கூறுபவர் எப்படி இருக்க வேண்டும்?

1). அதல் - நீதவானாக -நல்லொழுக்கம் உள்ளவராக, அமீன் - நம்பிக்கைக்குரியவராக இருக்க வேண்டும். ஏனெனில், அதானை வைத்துதான் தொழுகையின் நேரத்தையும் நோன்பின் நேரத்தையும் மக்கள் ஆரம்பிக்கவும் செய்வார்கள், முடிக்கவும் செய்வார்கள்.

2). பருவ வயதை அடைந்தவராக, புத்தி சுவாதீனம் உள்ளவராக இருக்க வேண்டும். அதேநேரத்தில் தம்யீஸ் - பிரித்தறிகின்ற பக்குவமுள்ள சிறுவர் அதான் கூறினால் அந்த அதான் சரியானதுதான்.

3). தொழுகையின் நேரங்களை அறிந்தவராக இருக்க வேண்டும். நேரத்தை கவனிக்கக்கூடிய அறிவு திறமை இல்லை என்றால் அவர் தவறான நேரத்தில் அதான் கூறுவார். அல்லது சிறப்பான முதல் நேரத்தை தவற விட்டுவிடுவார்.

4). மக்களுக்கு அவருடைய சப்தம் சென்று சேருகின்ற அளவு நல்ல உரத்த குரல் வளமுள்ளவராக இருக்க வேண்டும்.

5). சிறுதொடக்கு, இன்னும் பெருந்தொடக்கு ஆகியவற்றிலிருந்து நீங்கி சுத்தமானவராக இருக்க வேண்டும்.

6). நின்றவராக, கிப்லாவை முன்னோக்கியவராக அதான் கூற வேண்டும்.

7). தனது இரண்டு விரல்களை இரு காதுகளிலும் வைக்க வேண்டும். **حَيَّ عَلَى الصَّلَاةِ** ஹைய்ய அலஸ் ஸலாஹ் கூறும்போது வலது பக்கமும், **حَيَّ عَلَى الْفَلَاحِ** ஹைய்ய அலல் ஃபலாஹ் கூறும்போது இடது பக்கமும் திரும்ப வேண்டும்.

8). அதான் கூறும்போது நீட்டி, நிதானமாகவும், இகாமத் கூறும்போது விரைவாகவும் சுருக்கமாகவும் கூற வேண்டும்.

**நான்காவது சட்டவிளக்கம்**

## அதான் இன்னும் இகாமத் கூறுவதின் விளக்கம்

அதானுடைய வாசகங்கள்

اَللّٰهُ أَكْبَرُ اللّٰهُ أَكْبَرُ

اَللّٰهُ أَكْبَرُ اللّٰهُ أَكْبَرُ

أَشْهَدُ أَن لَّا إِلٰهَ إِلَّا اللّٰهُ

أَشْهَدُ أَن لَّا إِلٰهَ إِلَّا اللّٰهُ

أَشْهَدُ أَنَّ مُحَمَّدًا رَّسُولُ اللّٰهِ

أَشْهَدُ أَنَّ مُحَمَّدًا رَّسُولُ اللّٰهِ

حَيَّ عَلَى الصَّلَاةِ

حَيَّ عَلَى الصَّلَاةِ

حَيَّ عَلَى الْفَلَاحِ

حَيَّ عَلَى الْفَلَاحِ

اَللّٰهُ أَكْبَرُ اَللّٰهُ أَكْبَرُ

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ

இகாமத்துடைய வாசகங்கள்

اَللّٰهُ أَكْبَرُ اللّٰهُ أَكْبَرُ

أَشْهَدُ أَن لَّا إِلٰهَ إِلَّا اللّٰهُ

أَشْهَدُ أَنَّ مُحَمَّدًا رَّسُولُ اللّٰهِ

حَيَّ عَلَى الصَّلَاةِ

حَيَّ عَلَى الْفَلَاحِ

قَدْ قَامَتِ الصَّلَاةُ

قَدْ قَامَتِ الصَّلَاةُ

اَللّٰهُ أَكْبَرُ اللّٰهُ أَكْبَرُ

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ

இது பற்றிய நபிமொழிகளை அபூ தாவூத், திர்மிதி, இப்னு மாஜா போன்ற ஹதீஸ் நூல்களில், அதானுடைய பாடத்தில் பார்க்கவும்.

**عَنْ أَنَسٍ ﷺ قَالَ أُمِرَ بِلَالٌ أَنْ يَشْفَعَ الْأَذَانَ وَأَنْ يُوتِرَ الْإِقَامَةَ إِلَّا الْإِقَامَةَ**

**رواه البخاري برقم ٦٠٥**

அனஸ் ﵁ கூறுகிறார்கள்: அதானை (-அதானின் வாசகங்களை) இருமுறை கூறுவதற்கும், கத்காமத்திஸ் ஸலாஹ் என்ற வாசகத்தைத் தவிர இகாமத்தின் வாசகங்களை ஒரு முறை கூறுவதற்கும் பிலால் ﵁ அவர்களுக்கு கட்டளை இடப்பட்டது.[12]

அதான் மற்றும் இகாமத் கூறுவதில் மேற்கூறப்பட்ட முறை சிறந்த, விரும்பத்தக்க முறையாகும். பிலால் ﵁ அவர்கள் நபி ﷺ அவர்களுடன் உள்ளூரிலும் வெளியூரிலும் இருந்தார்கள். நபி ﷺ அவர்களின் மரணம் வரை அவர்களுடன் பிலால் அவர்கள் எல்லா நிலையிலும் உடனிருந்தார்கள். ஆகவே, பிலால் ﵁ அவர்கள் மூலமாக வந்துள்ள அதான் இன்னும் இகாமத்துடைய வாசகங்கள்தான் மிக ஏற்றமானதாகும்.

ஒருவர் அதான் கூறும்போது **ترجيع** - தர்ஜீஃ செய்தால், இகாமத் கூறும்போது இரண்டு இரண்டு முறை கூறினால் அது தவறல்ல.

தர்ஜீஃ என்றால் முதலில் இரண்டு ஷஹாதாவின் வாசகங்களையும் இரு முறை, இரு முறை தாழ்ந்த குரலில் கூறிவிட்டு, பிறகு உரத்த குரலில் அவற்றை இரு முறை இரு முறை கூறுவது.[13]

இகாமத் கூறும்போது இரண்டு இரண்டு முறை கூறுவது என்றால் அதான் கூறியதைப் போல் இகாமத்தை கூறுவது.[14]

ஃபஜ்ருடைய அதானில் ஹைய்ய அலல் ஃபலாஹ் என்று கூறிய பின்னர்,

---

12. நூல்: புகாரி, எண்: 605
13. அறிவிப்பாளர்: அபூ மஹ்தூரா ﵁ நூல்: அபூ தாவூத், ஹதீஸ் எண்: 422
14. அறிவிப்பாளர்: அபூ மஹ்தூரா ﵁, நசாயி, ஹதீஸ் எண்: 629

اَلصَّلَاةُ خَيْرٌ مِّنَ النَّوْمِ

اَلصَّلَاةُ خَيْرٌ مِّنَ النَّوْمِ

என்று கூற வேண்டும்.[15]

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## அதானுடைய பதிலும் துஆவும்

அதானுடைய ஒவ்வொரு வாசகத்தை செவியுரும்போதும் அதுபோலவே நாமும் திரும்பச் சொல்ல வேண்டும்.

ஆனால், ஹய்ய அலஸ் ஸலாஹ், ஹய்ய அலல் ஃபலாஹ் என்று முஅத்தின் கூறும்போது, ஒவ்வொரு முறையும் நாம்,

لَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللّٰهِ

என்று கூற வேண்டும்.

இவ்வாறு ஒருவர் தனது உள்ளத்தில் இருந்து[16] அதானுக்கு பதில் கூறினால் அவர் சொர்க்கம் செல்வார் என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்.[17]

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رضي الله عنه أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ إِذَا سَمِعْتُمُ النِّدَاءَ فَقُولُوا مِثْلَ مَا يَقُولُ الْمُؤَذِّنُ رواه البخاري برقم ٦٢١

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: நீங்கள் (தொழுகைக்கான) அழைப்பை செவியுற்றால் முஅத்தின் கூறுவதைப்போல நீங்களும் கூறுங்கள்.[18]

---

15. நூல்: அபூ தாவூத், எண்: 422, இப்னு மாஜா, எண்: 708
16. அதாவது அதானுடைய அர்த்தங்களை உணர்ந்து அவற்றை உள்ளத்தில் நம்பிக்கை கொண்டு மனப்பூர்வமாக அதானுக்கு பதில் கூறுவது.
17. அறிவிப்பாளர்: உமர் رضي الله عنه, நூல்: அபூ தாவூத், எண்: 443
18. அறிவிப்பாளர்; அபூ சயீது அல்குத்ரி رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 621

முஅத்தின் அதிகாலைத் தொழுகையில் "அஸ்ஸலாத்து கைரும் மினன்னவ்ம்" என்று கூறும்போது அதையே நாமும் திரும்ப கூற வேண்டும்.

அதிகாலைத் தொழுகையின் இகாமத்தில் "அஸ்ஸலாத்து கைரும் மினன்னவ்ம்" என்ற இந்த வாசகம் இடம்பெறாது.

அதானுக்கு பதில் கூறியவுடன் (அதான் கூறி முடித்தவுடன்) நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத் கூற வேண்டும். பிறகு பின்வருகின்ற துஆவை ஓத வேண்டும்:

**اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلَاةِ الْقَائِمَةِ آتِ مُحَمَّدًا الْوَسِيلَةَ وَالْفَضِيلَةَ وَابْعَثْهُ مَقَامًا مَحْمُودًا الَّذِي وَعَدْتَهُ**

அல்லாஹ்வே! இந்த பரிபூரண அழைப்பின் அதிபதியே! நிறைவேற்றப்படுகின்ற தொழுகையின் அதிபதியே! முஹம்மது அவர்களுக்கு வஸீலாவையும் சிறப்பையும் கொடுப்பாயாக! நீ அவர்களுக்கு வாக்களித்த "மகாம் மஹ்மூத்" என்ற ஸ்தானத்தில் அவர்களை நீ எழுப்புவாயாக!

அதானை செவியுற்ற பின்னர் யார் இந்த துஆவை ஓதுவாரோ அவருக்கு தனது சிபாரிசு கண்டிப்பாக கிடைக்கும் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[19]

-------------------------

19. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ؓ, நூல்: புகாரி 614.

மூன்றாவது பாடம்

# الباب الثالث في مواقيت الصلاة

# தொழுகையின் நேரங்கள்

பகலிலும் இரவிலும் ஃபர்ழான - கட்டாயக் கடமையான தொழுகைகள் ஐந்தாகும். அவற்றில் ஒவ்வொரு தொழுகைக்கும் மார்க்கம் நிர்ணயித்த குறிப்பிட்ட நேரம் உண்டு.

அல்லாஹ் கூறுகின்றான்:

إِنَّ الصَّلَاةَ كَانَتْ عَلَى الْمُؤْمِنِينَ كِتَابًا مَوْقُوتًا

நிச்சயமாக தொழுகை நம்பிக்கையாளர்கள் மீது நேரம் குறிக்கப்பட்ட கடமையாக இருக்கின்றது. (அல்குர்ஆன் 4:103)

ஆகவே, எந்த ஒரு தொழுகையையும் அதன் நேரம் வருவதற்கு முன்னர் நிறைவேற்றுவது கூடாது.

عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ عَمْرٍو ﵁ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ وَقْتُ الظُّهْرِ إِذَا زَالَتْ الشَّمْسُ وَكَانَ ظِلُّ الرَّجُلِ كَطُولِهِ مَا لَمْ يَحْضُرْ الْعَصْرُ وَوَقْتُ الْعَصْرِ مَا لَمْ تَصْفَرَّ الشَّمْسُ وَوَقْتُ صَلَاةِ الْمَغْرِبِ مَا لَمْ يَغِبْ الشَّفَقُ وَوَقْتُ صَلَاةِ الْعِشَاءِ إِلَى نِصْفِ اللَّيْلِ الْأَوْسَطِ وَوَقْتُ صَلَاةِ الصُّبْحِ مِنْ طُلُوعِ الْفَجْرِ

مَا لَمْ تَطْلُعْ الشَّمْسُ فَإِذَا طَلَعَتْ الشَّمْسُ فَأَمْسِكْ عَنِ الصَّلَاةِ فَإِنَّهَا تَطْلُعُ بَيْنَ قَرْنَيْ شَيْطَانٍ رواه مسلم برقم ٦١٢

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: ளுஹ்ர் (-மதியத் தொழுகை) உடைய நேரம் சூரியன் (நடு வானிலிருந்து) சாய்ந்து விட்டால் (ஆரம்பமாகி விடும்). ஒரு மனிதரின் நிழல் அவருடைய உயரத்தைப் போன்று ஆகிவிட்டால் அஸ்ர் (மாலை நேரத் தொழுகை) உடைய நேரம் வந்துவிடும். சூரியன் மஞ்சளிக்கின்ற வரை அஸ்ர் உடைய நேரம் நீடிக்கும். மக்ரிபுடைய நேரம் (சூரியன் மறைந்ததிலிருந்து) செம்மேகம் மறைகின்ற வரை ஆகும். இஷா உடைய நேரம் இரவின் நடு பாதி வரை ஆகும். ஸுப்ஹுடைய நேரம் அதிகாலை உதயத்திலிருந்து சூரியன் உதிக்கின்ற வரை ஆகும். சூரியன் உதித்துவிட்டால் நீ தொழுவதை நிறுத்திக்கொள்! நிச்சயமாக அது ஷைத்தானின் இரண்டு கொம்புகளுக்கு மத்தியில் உதிக்கின்றது.[20]

சூரியன் நடுவானிலிருந்து மேற்கு திசையின் பக்கம் சற்று சாய்ந்து விட்டால் ளுஹ்ருடைய நேரம் ஆரம்பமாகிவிடும். அதிலிருந்து அஸ்ர் உடைய நேரம் வரை அது நீடித்திருக்கும். தொழுகையின் நேரம் வந்தவுடன், அதன் முதல் நேரத்தில் அந்த தொழுகையை நிறைவேற்றுவது சிறப்பாகும். ஆனால், வெப்பம் கடுமையாக இருந்தால் வெப்பம் குறைகின்ற வரை ளுஹ்ர் தொழுகையை தாமதப்படுத்துவது சிறப்பாகும்.

عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ رضي الله عنهما عَنْ رَسُولِ اللهِ ﷺ أَنَّهُ قَالَ إِذَا اشْتَدَّ الْحَرُّ فَأَبْرِدُوا عَنِ الصَّلَاةِ فَإِنَّ شِدَّةَ الْحَرِّ مِنْ فَيْحِ جَهَنَّمَ رواه البخاري برقم ٥٣٣

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: வெப்பம் கடுமையாகி விட்டால் தொழுகையை குளுமைப்படுத்துங்கள் (குளுமை ஏற்படுகின்ற வரை

---

20. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் رضي الله عنهما, நூல்: முஸ்லிம், எண்: 612

தாமதப்படுத்துங்கள்)! நிச்சயமாக வெப்பத்தின் கடுமை நரகத்தின் கொதிப்பினால் ஏற்படுகின்றது.[21]

ளுஹ்ர் உடைய நேரம் முடிந்ததிலிருந்து அஸ்ர் உடைய நேரம் ஆரம்பமாகிறது. அதாவது ஒரு பொருளுடைய நிழல் அதே அளவிற்கு வந்துவிட்டால் ளுஹ்ர் உடைய நேரம் முடிந்து அஸ்ர் உடைய நேரம் ஆரம்பமாகி விடுகின்றது. அஸ்ர் உடைய நேரம் சூரியன் மறையும்போது முடிந்துவிடும். சூரியன் மஞ்சள் நிறத்தில் மாறுவதற்கு முன்பாக அஸ்ர் தொழுகையை நிறைவேற்றுவது அவசியம். முதல் நேரத்தில் தீவிரப்படுத்தி தொழுவது சுன்னாவாகும்.

அஸ்ர் தொழுகையைத்தான் குர்ஆனில் اَلصَّلَاةُ الْوُسْطَى – அஸ்ஸலாத்துல் உஸ்த்தா என்று கூறப்பட்டுள்ளது.

அல்லாஹ் கூறுகின்றான்

حَافِظُوا عَلَى الصَّلَوَاتِ وَالصَّلَاةِ الْوُسْطَى وَقُومُوا لِلَّهِ قَانِتِينَ

நீங்கள் எல்லாத் தொழுகைகளையும் அஸ்ஸலாத்துல் உஸ்த்தாவையும் பேணுங்கள்! அல்லாஹ்விற்கு முன் பணிவானவர்களாக நில்லுங்கள்! (அல்குர்ஆன் 2:238)

عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ الَّذِي تَفُوتُهُ صَلَاةُ الْعَصْرِ كَأَنَّمَا وُتِرَ أَهْلَهُ وَمَالَهُ رواه البخاري برقم ٥٥٢

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: எவருக்கு அஸ்ர் உடைய தொழுகை தவறுகின்றதோ அவருடைய நிலை அவருடைய குடும்பம் கொல்லப்பட்டு, அவருடைய செல்வம் (எதிரியால்) அபகரிக்கப்பட்டத்தைப் போன்றாகும்.[22]

21. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﵁, நூல்: புகாரி, எண்: 533.
22. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﵁, நூல்: புகாரி, எண்: 552

عَنْ بُرَيْدَةَ ﵁ قَالَ بَكِّرُوا بِصَلَاةِ الْعَصْرِ فَإِنَّ النَّبِيَّ ﷺ قَالَ مَنْ تَرَكَ صَلَاةَ الْعَصْرِ فَقَدْ حَبِطَ عَمَلُهُ رواه البخاري برقم ٥٥٣

புரைதா ﵁ கூறினார்கள்: "நீங்கள் அஸ்ர் தொழுகையை விரைந்து (-நேரம் வந்தவுடன், முதல் நேரத்தில்) நிறைவேற்றுங்கள்! ஏனெனில், "யார் அஸ்ர் தொழுகையை விட்டாரோ அவருடைய அமல்கள் அழிந்துவிட்டன என்று நிச்சயமாக நபி ﷺ அவர்கள் கூறி இருக்கிறார்கள்."[23]

மக்ரிப் தொழுகையின் நேரம் சூரியன் மறைந்ததிலிருந்து செம்மேகம் மறைகின்ற வரை நீடிக்கும்.

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்

وَوَقْتُ صَلَاةِ الْمَغْرِبِ مَا لَمْ يَغِبْ الشَّفَقُ رواه مسلم برقم ١٧٣

மக்ரிப் தொழுகையின் நேரம் செம்மேகம் மறைகின்ற வரையாகும்.[24]

மக்ரிபு தொழுகையை விரைந்து நிறைவேற்றுவது சுன்னாவாகும்.

عَنِ الْعَبَّاسِ بْنِ عَبْدِ الْمُطَّلِبِ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا تَزَالُ أُمَّتِي عَلَى الْفِطْرَةِ مَا لَمْ يُؤَخِّرُوا الْمَغْرِبَ حَتَّى تَشْتَبِكَ النُّجُومُ رواه ابن ماجة برقم ٦٨١

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: "நட்சத்திரங்கள் ஒன்றோடு ஒன்று பின்னிக்கொள்கின்ற வரை (-நட்சத்திரங்கள் அதிகமாக வெளிப்படுகின்ற வரை) எனது உம்மத் (-சமுதாயம்) மக்ரிபை தாமதப்படுத்தவில்லையென்றால் அவர்கள் நேரிய இயற்கை நெறியில்[25] இருப்பார்கள்.[26]

மேற்கூறப்பட்ட இந்த சட்டத்திலிருந்து ஒரு விதிவிலக்கு

23. நூல்: புகாரி, எண்: 553
24. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் ﵁, நூல்: முஸ்லிம், எண்: 173
25. அதாவது இஸ்லாமிய மார்க்கத்தின் அடிப்படைகளில் இருந்து விலகாமல் இருப்பார்கள்.
26. அறிவிப்பாளர்: அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிப் ﵁, நூல்: இப்னு மாஜா, எண்: 681

இருக்கிறன்றது. அதாவது, ஹஜ்ஜு செய்பவர் அரஃபாவில் சூரியன் மறைந்தவுடன் மக்ரிப் தொழுகையை நிறைவேற்றாமல் முஸ்தலிஃபா புறப்பட்டுச் சென்று அங்கு மக்ரிப் தொழுகையை இஷா தொழுகையுடன் நிறைவேற்றுவார்.

இஷா தொழுகையின் நேரம் செம்மேகம் மறைந்ததிலிருந்து இரவின் நடுப்பகுதி வரை நீடிக்கும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்

وَوَقْتُ صَلَاةِ الْعِشَاءِ إِلَى نِصْفِ اللَّيْلِ الْأَوْسَطِ

இன்னும், இஷா உடைய நேரம் இரவின் நடு பாதி வரை ஆகும்.[27]

சிரமம் இல்லையென்றால் இஷா தொழுகையை இறுதி நேரம் வரை பிற்படுத்துவது சிறப்பாகும். இஷா தொழுகையை நிறைவேற்றும் முன்பு தூங்குவதும் இஷா தொழுகைக்கு பின்பு தேவை இல்லாத பேச்சுகளில் ஈடுபடுவதும் வெறுக்கப்பட்ட செயல்களாகும்.

عَنْ أَبِي بَرْزَةَ رضي الله عنه أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يَكْرَهُ النَّوْمَ قَبْلَ الْعِشَاءِ وَالْحَدِيثَ بَعْدَهَا رواه البخاري برقم ٥٢٧

இஷாவிற்கு முன்பு தூங்குவதையும் அதற்கு பின்பு பேசுவதையும் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் வெறுப்பவர்களாக இருந்தார்கள்.[28]

ஃபஜ்ர் தொழுகையின் நேரம் உண்மையான அதிகாலை உதித்ததிலிருந்து ஆரம்பமாகி சூரியன் உதிக்கின்ற வரை நீடிக்கிறது. அதிகாலை உதித்து விட்டது என்று உறுதியாக தெரிந்தவுடன் ஃபஜ்ர் தொழுகையை விரைந்து நிறைவேற்றுவது சிறப்பாகும்.

மேற்கூறப்பட்ட நேரங்களில்தான் தொழுகைகளை நிறைவேற்ற வேண்டும். ஒவ்வொரு தொழுகையையும் அதற்குரிய நேரத்தில் தொழவேண்டும். இந்த நேர நிர்ணயங்களுக்கு கட்டுப்பட்டுதான்

---

27. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 173
28. அறிவிப்பாளர்: அபு பர்ஸா رضي الله عنه, நூல்: புகாரி, 527

முஸ்லிம்கள் தொழுகைகளை நிறைவேற்ற வேண்டும். இதில் அலட்சியம் செய்வதும் கவனக்குறைவாக இருப்பதும் கூடாது.

அல்லாஹ் கூறுகின்றான்

فَوَيْلٌ لِلْمُصَلِّينَ (٤) الَّذِينَ هُمْ عَنْ صَلَاتِهِمْ سَاهُونَ

தங்கள் தொழுகையை மறந்து இருக்கின்ற தொழுகையாளிகளுக்கு கேடு உண்டாகட்டும். (அல்குர்ஆன் 107:3,4)

மேலும், அல்லாஹ் கூறுகின்றான்

فَخَلَفَ مِنْ بَعْدِهِمْ خَلْفٌ أَضَاعُوا الصَّلَاةَ وَاتَّبَعُوا الشَّهَوَاتِ فَسَوْفَ يَلْقَوْنَ غَيًّا

அவர்களுக்குப் பின்னர் ஒரு கூட்டம் தோன்றினர். அவர்கள் தொழுகையை பாழாக்கினார்கள். மன இச்சைகளை பின் பற்றினார்கள். அவர்கள் (மறுமையில்) அழிவைத்தான் எதிர்கொள்வார்கள். (அல்குர்ஆன் 19:59)

ஒவ்வொரு தொழுகையையும் அதன் அதன் நேரத்தில் நிறைவேற்றுவது மிக சிறப்பானதும் அல்லாஹ்விற்கு மிக விருப்பமானதும் ஆகும்.

عَنْ عَبْدِ اللهِ ﵁ قَالَ سَأَلْتُ النَّبِيَّ ﷺ أَيُّ الْعَمَلِ أَحَبُّ إِلَى اللهِ قَالَ الصَّلَاةُ عَلَى وَقْتِهَا رواه البخاري برقم ٥٢٧

அப்துல்லாஹ் (இப்னு மஸ்வூத்) ﵁ கூறுகிறார்கள், "அமல்களில் அல்லாஹ்விற்கு மிக விருப்பமானது எது? என்று நபி ﷺ அவர்களிடம் நான் கேட்டேன். அதற்கு நபி ﷺ கூறினார்கள்: உரிய நேரத்தில் நிறைவேற்றப்படுகின்ற தொழுகை ஆகும்.[29]

-----------------------

29. நூல்: புகாரி, எண்: 527

*நான்காவது பாடம்*

# الباب الرابع في شروط الصلاة وأركانها

# தொழுகையின்
# ஷர்த்துகள் மற்றும் ருக்னுகள்

ஓர் இபாதத்தை செய்வதற்கு முன்பாக அவசியம் நிறைவு செய்திருக்க வேண்டிய செயல்களை ஷர்த் - நிபந்தனை என்றும் இபாதத்துக்குள் கண்டிப்பாக நிறைவேற்றவேண்டிய செயல்களை ருக்ன் என்றும் கூறப்படும்.

இந்தப் பாடத்தில் தொழுகையின் ஷர்த்துகள் - நிபந்தனைகள், அதன் ருக்னுகள், அவற்றின் ஆதாரங்கள், இன்னும் தொழுகையை விடுபவரைப் பற்றி மார்க்கச் சட்டம் ஆகியவற்றை நாம் அறிய இருக்கின்றோம்.

இந்த பாடத்தில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்டவிளக்கம்**

## ஃபர்ழ் தொழுகைகளின் எண்ணிக்கை

கட்டாயக் கடமையான பர்ழ் தொழுகைகள் ஐந்தாகும். ஃபஜ்ர் - அதிகாலை, ளுஹ்ர் - மதியம், அஸ்ர் - மாலை, மக்ரிப் - சூரிய மறைவு, இஷா - இரவு ஆகிய தொழுகைகள் கட்டாயக் கடமைகள் என்பதில் அனைவரும் ஒருமித்த கருத்தில் இருக்கின்றனர்.

عَنْ طَلْحَةَ بْنَ عُبَيْدِ اللّٰهِ ﵁ يَقُولُ جَاءَ رَجُلٌ إِلَى رَسُولِ اللّٰهِ ﷺ فَإِذَا هُوَ يَسْأَلُهُ عَنِ الْإِسْلَامِ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ خَمْسُ صَلَوَاتٍ فِي الْيَوْمِ وَاللَّيْلَةِ فَقَالَ هَلْ عَلَيَّ غَيْرُهَا قَالَ لَا إِلَّا أَنْ تَطَّوَّعَ رواه البخاري برقم ٢٤٨١

தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் ﵁ கூறுகிறார்கள்: ஒருவர் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் வந்தார். அப்போது, அவர் இஸ்லாமைப் பற்றி நபி ﷺ அவர்களிடம் கேட்டார். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: பகலிலும் இரவிலும் ஐந்து நேரத் தொழுகைகள் (உன் மீது கடமையாக்கப்பட்டுள்ளன). அவர் கூறினார்: “இவற்றைத் தவிர வேறு தொழுகைகள் என் மீது கடமையா?” நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “இல்லை, நீ உபரியாக செய்தாலே தவிர.”[30]

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﵁ قَالَ نُهِينَا أَنْ نَسْأَلَ رَسُولَ اللّٰهِ ﷺ عَنْ شَيْءٍ فَكَانَ يُعْجِبُنَا أَنْ يَجِيءَ الرَّجُلُ مِنْ أَهْلِ الْبَادِيَةِ الْعَاقِلُ فَيَسْأَلَهُ وَنَحْنُ نَسْمَعُ فَجَاءَ رَجُلٌ مِنْ أَهْلِ الْبَادِيَةِ فَقَالَ يَا مُحَمَّدُ أَتَانَا رَسُولُكَ فَزَعَمَ لَنَا أَنَّكَ تَزْعُمُ أَنَّ اللّٰهَ أَرْسَلَكَ قَالَ صَدَقَ قَالَ فَمَنْ خَلَقَ السَّمَاءَ قَالَ اللّٰهُ قَالَ فَمَنْ خَلَقَ الْأَرْضَ قَالَ اللّٰهُ قَالَ فَمَنْ نَصَبَ هٰذِهِ الْجِبَالَ وَجَعَلَ فِيهَا مَا جَعَلَ قَالَ اللّٰهُ قَالَ فَبِالَّذِي خَلَقَ السَّمَاءَ وَخَلَقَ الْأَرْضَ وَنَصَبَ هٰذِهِ الْجِبَالَ آللّٰهُ أَرْسَلَكَ قَالَ نَعَمْ قَالَ وَزَعَمَ رَسُولُكَ أَنَّ عَلَيْنَا خَمْسَ صَلَوَاتٍ فِي يَوْمِنَا وَلَيْلَتِنَا قَالَ صَدَقَ قَالَ فَبِالَّذِي أَرْسَلَكَ آللّٰهُ أَمَرَكَ بِهٰذَا قَالَ نَعَمْ قَالَ وَزَعَمَ رَسُولُكَ أَنَّ عَلَيْنَا زَكَاةً فِي أَمْوَالِنَا قَالَ صَدَقَ قَالَ فَبِالَّذِي أَرْسَلَكَ آللّٰهُ أَمَرَكَ بِهٰذَا قَالَ نَعَمْ قَالَ وَزَعَمَ رَسُولُكَ أَنَّ عَلَيْنَا صَوْمَ شَهْرِ رَمَضَانَ فِي سَنَتِنَا قَالَ

30. நூல்: புகாரி, எண்: 2481

صَدَقَ قَالَ فَبِالَّذِي أَرْسَلَكَ ٱللهُ أَمَرَكَ بِهَذَا قَالَ نَعَمْ قَالَ وَزَعَمَ رَسُولُكَ أَنَّ عَلَيْنَا حَجَّ الْبَيْتِ مَنْ اسْتَطَاعَ إِلَيْهِ سَبِيلًا قَالَ صَدَقَ قَالَ ثُمَّ وَلَّى قَالَ وَالَّذِي بَعَثَكَ بِالْحَقِّ لَا أَزِيدُ عَلَيْهِنَّ وَلَا أَنْقُصُ مِنْهُنَّ فَقَالَ النَّبِيُّ ﷺ لَئِنْ صَدَقَ لَيَدْخُلَنَّ الْجَنَّةَ رواه مسلم برقم ١٢

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் (தேவையற்ற) எதையும் கேட்பதை விட்டும் நாங்கள் தடுக்கப்பட்டிருந்தோம். கிராமவாசிகளில் புத்திசாலியான ஒருவர் வந்து நபி ﷺ அவர்களிடம் கேள்வி கேட்க, நாங்கள் அதை செவியுறுவது எங்களுக்கு பிடித்தமாக இருந்தது.

இப்படி இருக்கையில் கிராமவாசி ஒருவர் வந்தார். அவர் கூறினார்: முஹம்மதே! உமது தூதர் எங்களிடம் வந்தார். அவர் கூறினார், "உம்மை அல்லாஹ் தூதராக அனுப்பினான் என்று" நபி ﷺ கூறினார்கள்: "அவர் உண்மைதான் கூறினார்."

கிராமவாசி கூறினார்: வானத்தைப் படைத்தது யார்?

நபி ﷺ கூறினார்கள்: "அல்லாஹ்"

கிராமவாசி கூறினார்: "பூமியைப் படைத்தது யார்?"

நபி ﷺ கூறினார்கள்: "அல்லாஹ்"

கிராமவாசி கூறினார்: "இந்த மலைகளை நிறுவி, அவற்றில் படைக்க வேண்டிய அனைத்தையும் படைத்தவன் யார்?"

நபி ﷺ கூறினார்கள்: "அல்லாஹ்"

கிராமவாசி கூறினார்: வானத்தைப் படைத்து, பூமியைப் படைத்து, இந்த மலைகளை நிறுவியவன் மீது சத்தியமாக கேட்கிறேன், "அல்லாஹ்தான் உம்மை தூதராக அனுப்பினானா?"

நபி ﷺ கூறினார்கள்: "ஆம்"

கிராமவாசி கூறினார்: "நிச்சயமாக எங்கள் மீது பகலிலும், இரவிலும் ஐந்து நேரத் தொழுகைகள் கடமை என்று" உமது தூதர் கூறினார்.

நபி ﷺ கூறினார்கள்: அவர் உண்மையைத்தான் கூறினார்.

கிராமவாசி கூறினார்: உம்மை தூதராக அனுப்பியவன் மீது சத்தியமாக அல்லாஹ்தான் உமக்கு இதை கட்டளையிட்டானா?

நபி ﷺ கூறினார்கள்: "ஆம்"

கிராமவாசி கூறினார்: "நிச்சயமாக எங்கள் மீது எங்கள் செல்வங்களில் ஸகாத் கடமையாக்கப்பட்டுள்ளது" என்று உமது தூதர் கூறினார்.

நபி ﷺ கூறினார்கள்: "அவர் உண்மையைத்தான் கூறினார்."

கிராமவாசி கூறினார்: "எங்கள் ஆண்டில் ரமழான் மாதம் நோன்பிருப்பது எங்கள் மீது கடமை என்று உமது தூதர் கூறினார்."

நபி ﷺ கூறினார்கள்: "அவர் உண்மையைத்தான் கூறினார்."

கிராமவாசி கூறினார்: "உம்மை தூதராக அனுப்பியவன் மீது சத்தியமாக அல்லாஹ்தான் இதை உமக்கு கட்டளையிட்டானா?"

நபி ﷺ கூறினார்கள்: "ஆம்."

கிராமவாசி கூறினார்: "கஃபாவை ஹஜ் செய்வது எங்கள் மீது அதாவது யாருக்கு அங்கு பயணம் செல்வதற்கு சக்தி இருக்குமோ அவர் மீது கடமை என்று உமது தூதர் கூறினார்."

நபி ﷺ கூறினார்கள்: "அவர் உண்மையைத்தான் கூறினார்."

அறிவிப்பாளர் கூறுகிறார்: "உம்மை உண்மையான மார்க்கத்தைக் கொண்டு அனுப்பியவன் மீது சத்தியமாக நான் இவற்றைவிட அதிகப்படுத்த மாட்டேன் என்று கூறியவராக அந்த கிராமவாசி திரும்பிச் சென்றார்."

நபி ﷺ கூறினார்கள்: "அவர் உண்மை கூறினால் (-அவர் கூறியவாறே

உண்மையில் நடந்து கொண்டால்) நிச்சயமாக அவர் சொர்க்கம் செல்வார்."[31]

ஒவ்வொரு நாளும் ஐந்து நேரத் தொழுகைகள் கடமை என்பதற்கு இன்னும் பல ஆதாரங்கள் உள்ளன. அவற்றை ஹதீஸ் நூல்களில் காணலாம்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## தொழுகை யார் மீது கடமை?

முஸ்லிமாக இருக்க வேண்டும், பருவ வயதை அடைந்திருக்க வேண்டும், புத்தி சுவாதீனமாக இருக்க வேண்டும், பெண்கள் ஹைழ் மற்றும் நிஃஃபாஸை விட்டும் நீங்கி இருக்க வேண்டும்.

عَنْ عَلِيٍّ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ رُفِعَ الْقَلَمُ عَنْ ثَلَاثَةٍ عَنِ الْمَجْنُونِ الْمَغْلُوبِ عَلَى عَقْلِهِ حَتَّى يَفِيقَ وَعَنِ النَّائِمِ حَتَّى يَسْتَيْقِظَ وَعَنِ الصَّبِيِّ حَتَّى يَحْتَلِمَ رواه أبو داود برقم ٣٨٢٣

நபி ﷺ கூறினார்கள்: மூன்று நபர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டு விட்டது. தனது அறிவை இழந்த பைத்தியக்காரர் அவர் தெளிவடைகின்றவரை, தூங்குபவர் விழிக்கின்றவரை, குழந்தை பருவவயதை அடைகின்றவரை அவர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டுவிட்டது (அவர்கள் குற்றம் பிடிக்கப்பட மாட்டார்கள்).[32]

சிறுவர், சிறுமியர் ஏழு வயதை அடைந்தால் அவர்களை தொழும்படி ஏவவேண்டும். அவர்கள் பத்து வயதை அடைந்து விட்டால் தொழுகைக்காக அவர்களை அடிக்கவும் செய்ய வேண்டும்.

31. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: முஸ்லிம், எண்: 12
32. அறிவிப்பாளர்: அலி ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 3823.

عَنْ عَبْدِ اللهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مُرُوا أَوْلَادَكُمْ بِالصَّلَاةِ وَهُمْ أَبْنَاءُ سَبْعِ سِنِينَ وَاضْرِبُوهُمْ عَلَيْهَا وَهُمْ أَبْنَاءُ عَشْرٍ وَفَرِّقُوا بَيْنَهُمْ فِي الْمَضَاجِعِ رواه أبو داود برقم ٤١٨

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: உங்கள் பிள்ளைகளை தொழுகைக்கு ஏவுங்கள் அவர்கள் ஏழு வயதுடையவர்களாக இருக்கும்போது! அவர்கள் பத்து வயதுடையவர்களாக இருக்கும் போது அதற்காக அவர்களை அடியுங்கள்! படுக்கைகளில் அவர்களை பிரித்து வையுங்கள்![33]

**மூன்றாவது சட்டவிளக்கம்**

# தொழுகையின் நிபந்தனைகள்

தொழுகையின் நிபந்தனைகள் ஒன்பதாகும்

1). இஸ்லாமிய மார்க்கத்தை ஏற்றவராக இருக்க வேண்டும். ஆகவே, காஃபிர் - இஸ்லாமிய மார்க்கத்தை ஏற்காதவர் தொழுதால் அது சரியாகாது. காஃபிர்களுடைய அமல்கள் அனைத்தும் மறுமையில் நன்மை அற்றதாக ஆகிவிடும்.

2). அறிவு - புத்தி சுவாதீனமுள்ளவராக இருக்க வேண்டும். ஆகவே, பைத்தியக்காரர் தொழுதால் அது சரியாகாது. மேலும், பைத்தியக்காரர் மீது மார்க்க சட்டங்கள் கடமையாகாது.

3). பருவ வயதை அடைந்திருக்க வேண்டும். ஆகவே, சிறுவர்கள் பருவவயதை அடைகின்றவரை அவர்கள் மீது தொழுகை கடமையாகாது.

எனினும், சிறுவர், சிறுமியர் ஏழு வயதை அடைந்தால் அவர்கள் தொழும்படி ஏவவேண்டும். பத்து வயதை அவர்கள் அடைந்து விட்டால் தொழுகைக்காக அவர்களை அடிக்கவும் செய்ய வேண்டும்.

33. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னுல் ஆஸ் ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 418

**عَنْ عَبْدِ اللهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مُرُوا أَوْلَادَكُمْ بِالصَّلَاةِ وَهُمْ أَبْنَاءُ سَبْعِ سِنِينَ وَاضْرِبُوهُمْ عَلَيْهَا وَهُمْ أَبْنَاءُ عَشْرٍ وَفَرِّقُوا بَيْنَهُمْ فِي الْمَضَاجِعِ رواه أبو داود برقم ٤١٨**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: உங்கள் பிள்ளைகளை தொழுகைக்கு ஏவுங்கள் அவர்கள் ஏழு வயதுடையவர்களாக இருக்கும்போது! அவர்கள் பத்து வயதுடையவர்களாக இருக்கும்போது அதற்காக அவர்களை அடியுங்கள்! படுக்கைகளில் அவர்களை பிரித்து வையுங்கள்![34]

4). சிறுதொடக்கு, பெருந்தொடக்கு ஆகியவற்றை விட்டும் நீங்கி தூய்மையாகி இருக்க வேண்டும். தூய்மை அடைவதற்கு ஆற்றல் இல்லை என்றால் (-உளூ செய்வதற்கும் அல்லது தயம்மும் செய்வதற்கும் வாய்ப்பு இல்லையென்றால்) இந்த நிபந்தனை மன்னிக்கப்பட்டுவிடும்.

**عَنِ ابْنِ عُمَرَ ﵄ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ لَا تُقْبَلُ صَلَاةٌ بِغَيْرِ طُهُورٍ وَلَا صَدَقَةٌ مِنْ غُلُولٍ رواه الترمذي برقم ١**

நபி ﷺ கூறினார்கள்: சுத்தம் இல்லாத தொழுகை ஏற்கப்படாது. இன்னும், மோசடியிலிருந்து செய்யப்படுகின்ற தர்மம் ஏற்கப்படாது.[35]

5). தொழுகைக்கான நேரம் வந்திருக்க வேண்டும். எந்த தொழுகையை தொழ நாடுகிறோமோ அந்த தொழுகைக்கான நேரம் வந்திருக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்

34. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னுல் ஆஸ் ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 418

35. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵄, நூல்: திர்மிதி, எண்:1, நூல்: முஸ்லிம், எண்: 329

إِنَّ الصَّلَاةَ كَانَتْ عَلَى الْمُؤْمِنِينَ كِتَابًا مَوْقُوتًا

நிச்சயமாக தொழுகை நம்பிக்கையாளர்கள் மீது நேரம் குறிக்கப்பட்ட கடமையாக இருக்கின்றது. (அல்குர்ஆன் 4:103)

இமாம் அபூ தாவூத் ﵀ அவர்கள் இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் வாயிலாக அறிவிக்கின்ற ஒரு ஹதீஸில் வருவதாவது, ஜிப்ரீல் ﵇ அவர்கள் இரண்டு நாள்கள் நபி ﷺ அவர்களுக்கு கஃபாவின் அருகில் தொழுகை நடத்தினார்கள். முதல் நாள் தொழுகையின் ஆரம்ப நேரத்திலும் இரண்டாவது நாள் தொழுகையின் இறுதி நேரத்திலும் தொழுகை நடத்தினார்கள். பிறகு,

وَالْوَقْتُ مَا بَيْنَ هٰذَيْنِ الْوَقْتَيْنِ

"இந்த இரண்டு நேரங்களுக்கும் இடையில் உள்ளதுதான் (ஒவ்வொரு தொழுகையின்) நேரம் ஆகும்" என்று கூறினார்கள்.[36]

ஆகவே, ஒரு தொழுகையை அதன் நேரம் வருவதற்கு முன்போ அல்லது அதன் நேரம் சென்ற பின்போ தொழுவது சரியாகாது. ஆனால், மார்க்கம் அனுமதித்த சரியான ஒரு காரணம் இருந்தாலே தவிர.

6). உடலின் தோல் தெரியும்படி இல்லாத (-உடலையும் அதன் தோல் நிறத்தையும் மறைக்கக்கூடிய) ஒரு துணியைக் கொண்டு "அவ்ரத்"தை (உடலில் மறைக்க வேண்டிய பகுதிகளை) மறைக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்

يَا بَنِي آدَمَ خُذُوا زِينَتَكُمْ عِنْدَ كُلِّ مَسْجِدٍ

ஆதமின் சந்ததிகளே! ஒவ்வொரு தொழுகையின் போதும் உங்கள் ஆடைகளை எடுத்து (உடுத்தி)க் கொள்ளுங்கள்! (அல்குர்ஆன் 7:31)

36. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: அபூ தாவூத், எண்: 332

**عَنْ عَائِشَةَ ﵂ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ لَا يَقْبَلُ اللهُ صَلَاةَ حَائِضٍ إِلَّا بِخِمَارٍ رواه أبو داود برقم ٥٤٦**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: வயது வந்த பெண்ணின் தொழுகையை அல்லாஹ் ஏற்கமாட்டான், தலைமறைப்பு இருந்தாலே தவிர.[37]

வயது வந்த ஆணுடைய **عورة** -மறைவிடம் என்பது தொப்புளுக்கும் முட்டுக்காலுக்கும் மத்தியில் உள்ளதாகும்.

**عَنْ سَعِيدِ بْنِ الْحَارِثِ ﵀ قَالَ سَأَلْنَا جَابِرَ بْنَ عَبْدِ اللهِ عَنِ الصَّلَاةِ فِي الثَّوْبِ الْوَاحِدِ فَقَالَ خَرَجْتُ مَعَ النَّبِيِّ ﷺ فِي بَعْضِ أَسْفَارِهِ فَجِئْتُ لَيْلَةً لِبَعْضِ أَمْرِي فَوَجَدْتُهُ يُصَلِّي وَعَلَيَّ ثَوْبٌ وَاحِدٌ فَاشْتَمَلْتُ بِهِ وَصَلَّيْتُ إِلَى جَانِبِهِ فَلَمَّا انْصَرَفَ قَالَ مَا السُّرَى يَا جَابِرُ فَأَخْبَرْتُهُ بِحَاجَتِي فَلَمَّا فَرَغْتُ قَالَ مَا هٰذَا الِاشْتِمَالُ الَّذِي رَأَيْتُ قُلْتُ كَانَ ثَوْبٌ يَعْنِي ضَاقَ قَالَ فَإِنْ كَانَ وَاسِعًا فَالْتَحِفْ بِهِ وَإِنْ كَانَ ضَيِّقًا فَاتَّزِرْ بِهِ رواه البخاري برقم ٣٦١**

ஸயீத் இப்னுல் ஹாரிஸ் ﵀ கூறுகிறார்: ஒரே ஓர் ஆடையில் தொழுவதைப் பற்றி நாங்கள் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ﵁ அவர்களிடம் கேட்டோம். அதற்கு அவர் கூறினார்: "நபி ﷺ அவர்களுடன் அவர்களின் சில பயணத்தில் நானும் புறப்பட்டு சென்றேன். எனது சில காரியத்திற்காக ஓர் இரவில் நான் (நபி ﷺ அவர்களிடம்) வந்தேன். அவர்கள் தொழுது கொண்டு இருந்தார்கள். என் (உடல்) மீது ஒரே ஓர் ஆடைதான் இருந்தது. நான் அதை போர்த்திக்கொண்டேன். அவர்களுக்கு பக்கத்தில் நின்று நான் தொழுதேன். தொழுது முடித்து அவர்கள் திரும்பியபோது ஜாபிரே! இரவில் ஏன் விழித்திருக்கிறீர் என்று கூறினார்கள். நான் எனது

37. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: அபூ தாவூத், எண்: 546

தேவையை அவர்களுக்கு அறிவித்தேன். நான் கூறி முடித்தபோது (உன்மீது) நான் பார்க்கின்ற இது என்ன போர்த்துதல்? என்று கூறினார்கள். இறுக்கமான ஒரே ஓர் ஆடைதான் இருந்தது என்று கூறினேன். அதற்கு நபி ﷺ கூறினார்கள்: ஆடை விசாலமாக இருந்தால் அதை நீ போர்த்திக்கொள்! ஆடை நெருக்கமாக (சிறியதாக) இருந்தால் அதை கீழாடையாக (மட்டும்) அணிந்துகொள்![38]

**கருத்து:** இந்த ஹதீஸிலிருந்து கீழாடை அணிவது கட்டாயம் என்பதும் அதுதான் ஓர் ஆணுடைய "அவ்ரத்" - கட்டாயம் மறைக்கவேண்டிய பகுதி என்பதும் புரியமுடிகிறது.

குறைந்தபட்சம் சிறப்பும், ஏற்றமுமான காரியம் என்னவென்றால் தனது புஜத்தையும் (அதன் கீழுள்ள அக்குளையும்) ஓர் ஆடையைக் கொண்டு மறைத்து தொழுவதாகும்.

عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا يُصَلِّيَنَّ أَحَدُكُمْ فِي الثَّوْبِ الْوَاحِدِ لَيْسَ عَلَى عَاتِقِهِ مِنْهُ شَيْءٌ رواه النسائي برقم ٧٦١

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: உங்களில் ஒருவர் ஒரே ஓர் ஆடையில், - அதிலிருந்து கொஞ்சமும் தனது புஜத்தில் இல்லாமல்- தொழவேண்டாம்.[39]

பெண்ணைப் பொறுத்தவரை அவள் (தொழுகையில்) தனது முகத்தையும் இரு முன்னங்கைகளையும் தவிர உடல் அனைத்தையும் மறைக்க வேண்டும். ஆனால், மஹ்ரம் அல்லாத அந்நிய ஆண்களுக்கு முன்பாக தொழவேண்டிய சூழ்நிலை அவளுக்கு ஏற்பட்டால் அவள் தன்னை முழுமையாக மறைத்துக்கொள்ள வேண்டும்.

---

38. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 361
39. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 761

عَنْ عَبْدِ اللهِ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ الْمَرْأَةُ عَوْرَةٌ فَإِذَا خَرَجَتْ اسْتَشْرَفَهَا الشَّيْطَانُ رواه الترمذي برقم ١٠٩٣

நபி ﷺ கூறினார்கள்: பெண் (-அதாவது அவள் முழுவதும்) "அவ்ரத்" மறைக்கப்பட வேண்டியவள் ஆவாள். அவள் (வீட்டில் இருந்து) வெளியேறினால் ஷைத்தான் அவளை எட்டிப் பார்க்க ஆரம்பித்து விடுகிறான்.[40]

عَنْ عَائِشَةَ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ لَا يَقْبَلُ اللهُ صَلَاةَ حَائِضٍ إِلَّا بِخِمَارٍ رواه أبو داود برقم ٥٤٦

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: வயதுவந்த பெண்ணின் தொழுகையை அல்லாஹ் ஏற்கமாட்டான், தலைமறைப்பு இருந்தாலே தவிர.[41]

7). தனது உடலிலும் ஆடையிலும் இன்னும் தான் தொழுகின்ற இடத்திலும் அசுத்தத்தை நீக்குவதற்கு ஆற்றல் இருக்கும் பட்சத்தில் அவை அசுத்தங்களைவிட்டும் நீங்கி இருக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்

وَثِيَابَكَ فَطَهِّرْ

(நபியே!) உமது ஆடையை நீர் சுத்தப்படுத்துவீராக!

(அல்குர்ஆன் 74:4)

நபி ﷺ கூறினார்கள்:

عَامَّةُ عَذَابِ الْقَبْرِ مِنَ الْبَوْلِ فَتَنَزَّهُوا مِنَ الْبَوْلِ

கப்ருடைய வேதனைக்கு பெரும்பாலும் காரணம் சிறுநீர்தான். ஆகவே, அதிலிருந்து சுத்தமாக இருங்கள்![42]

40. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ﷺ, நூல்: திர்மிதி, எண்: 1093

41. அறிவிப்பாளர்: ஆயிஷா ﷺ, நூல்: அபூ தாவூத், எண்: 546

42. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﷺ, நூல்: சுனன் தாரகுத்னி, எண்: 466

عَنْ أَسْمَاءَ ﵂ قَالَتْ جَاءَتْ امْرَأَةٌ النَّبِيَّ ﷺ فَقَالَتْ أَرَأَيْتَ إِحْدَانَا تَحِيضُ فِي الثَّوْبِ كَيْفَ تَصْنَعُ قَالَ تَحُتُّهُ ثُمَّ تَقْرُصُهُ بِالْمَاءِ وَتَنْضَحُهُ وَتُصَلِّي فِيهِ رواه البخاري برقم ٢٢٧

அஸ்மா ﵂ அறிவிக்கின்றார்கள்: ஒரு பெண் நபி ﷺ அவர்களிடம் வந்தார். எங்களில் ஒருவருக்கு ஆடையில் ஹைழ்-மாதவிடாய் வந்து விடுகிறது. (-ஹைழ் உடைய இரத்தம் ஆடையில் பட்டுவிடுகிறது) அவள் என்ன செய்யவேண்டும்? என்று அப்பெண் கேட்டார். நபி ﷺ கூறினார்கள்: "அதை சுரண்ட வேண்டும், பிறகு, தண்ணீரால் அதை போக்க வேண்டும், அதன் மீது தண்ணீர் தெளிக்க வேண்டும், (பிறகு) அப்பெண் அதில் தொழலாம்."[43]

1). இடத்தில் அசுத்தம் இருந்தால் அந்த அசுத்தம் அந்த இடத்திலிருந்து நீங்குகின்ற அளவிற்கு ஒரு முறை அதன் மீது தண்ணீர் ஊற்றி சுத்தம் செய்வது போதுமானதாகும்.

عَنْ أَنَسٍ ﵁ قَالَ بَالَ أَعْرَابِيٌّ فِي الْمَسْجِدِ فَأَمَرَ النَّبِيُّ ﷺ بِدَلْوٍ مِنْ مَاءٍ فَصُبَّ عَلَيْهِ رواه النسائي برقم ٥٤

அனஸ் ﵁ கூறுகிறார்கள்: ஒரு கிராமவாசி மஸ்ஜிதில் சிறுநீர் கழித்து விட்டார். நபி ﷺ அவர்கள் (அதன்மீது) ஒரு வாளி தண்ணீர் ஊற்றும்படி ஏவினார்கள். அவ்வாறே அதன் மீது தண்ணீர் ஊற்றப்பட்டது.[44]

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَامَ أَعْرَابِيٌّ فَبَالَ فِي الْمَسْجِدِ فَتَنَاوَلَهُ النَّاسُ فَقَالَ لَهُمْ النَّبِيُّ ﷺ دَعُوهُ وَهَرِيقُوا عَلَى بَوْلِهِ سَجْلًا مِنْ مَاءٍ أَوْ ذَنُوبًا مِنْ مَاءٍ فَإِنَّمَا بُعِثْتُمْ مُيَسِّرِينَ وَلَمْ تُبْعَثُوا مُعَسِّرِينَ رواه البخاري برقم ٢٢٠

43. நூல்: புகாரி, எண்: 227

44. நூல்: நசாயி, எண்: 54

ஒரு கிராமவாசி (சபையிலிருந்து) எழுந்தார். மஸ்ஜிதில் சிறுநீர் கழிக்க ஆரம்பித்தார். மக்கள் அவரைப் பிடிக்க நாடினார்கள். நபி ﷺ அவர்கள் மக்களிடம் கூறினார்கள்: "அவரை விடுங்கள்! (பின்னர்,) அவர் சிறுநீர் (கழித்த இடத்தின்) மீது ஒரு வாளி தண்ணீரை ஊற்றுங்கள். நீங்கள் இலகுவாக்கி தரவேண்டியவர்களாக அனுப்பப்பட்டுள்ளீர்கள். சிரமப்படுத்துபவர்களாக அனுப்பப்படவில்லை.[45]

8). தொழுகையில் கிப்லாவை முன்னோக்கி தொழுவதற்கு ஆற்றல் இருக்கும்போது கிப்லாவை முன்னோக்கித் தொழுவது ஷர்த் ஆகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَوَلِّ وَجْهَكَ شَطْرَ الْمَسْجِدِ الْحَرَامِ وَحَيْثُ مَا كُنْتُمْ فَوَلُّوا وُجُوهَكُمْ شَطْرَهُ

ஆகவே, (நபியே!) உமது முகத்தை அல்மஸ்ஜிதுல் ஹராம் பக்கம் திருப்புவீராக! இன்னும் (முஸ்லிம்களே!) நீங்கள் எங்கிருந்தாலும் உங்கள் முகங்களை அதன் பக்கமே திருப்புங்கள்!

(அல்குர்ஆன் 2:144)

சரியாக தொழுகையை நிறைவேற்றத் தெரியாத மனிதர் ஒருவருக்கு நபி ﷺ அவர்கள் தொழுகையை கற்றுக் கொடுத்தார்கள். அப்போது நபி ﷺ அவர்கள் அவருக்கு கூறினார்கள்:

إِذَا قُمْتَ إِلَى الصَّلَاةِ فَأَسْبِغْ الْوُضُوءَ ثُمَّ اسْتَقْبِلْ الْقِبْلَةَ

நீ தொழுகைக்கு தயாரானால் உளூவை முழுமையாக செய்! பிறகு, கிப்லாவை முன்னோக்கு![46]

9). நிய்யத் - (தொழுகிறேன் என்ற) எண்ணம் இருக்க வேண்டும். இது எந்த நிலையிலும் விழுந்துவிடாத நிபந்தனையாகும்.

நிய்யத் - எண்ணத்தின் இருப்பிடம் உள்ளமாகும். அதாவது, ஒரு

45. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி, எண்: 220
46. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி, எண்: 6251

காரியத்தை செய்வதற்கு முன்பாக அதை செய்வதாக உள்ளத்தில் உறுதி ஏற்பட வேண்டும். இந்த எண்ணத்தை நாவால் உச்சரிக்கக் கூடாது. நபி ﷺ அவர்களோ அல்லது தோழர்களில் எவருமோ அவ்வாறு எண்ணத்தை நாவால் உச்சரித்து கூறியதில்லை.

நபி ﷺ கூறினார்கள்:

إِنَّمَا الْأَعْمَالُ بِالنِّيَّاتِ

செயல்கள் எல்லாம் எண்ணங்களைக் கொண்டுதான் (முடிவு செய்யப்படுகின்றன).[47]

**நான்காவது சட்டவிளக்கம்**

## தொழுகையின் ருக்னுகள்

எந்தெந்த அமல்கள் - செயல்கள் மூலமாக இபாதத் - வணக்க வழிபாடுகள் நிறைவேறுமோ, எவை இல்லையென்றால் வழிபாடுகள் ஏற்கப்படாதோ அந்த அமல்களுக்கு 'ருக்னுகள்' என்று கூறப்படும்.

ஷர்த் மற்றும் ருக்ன் இவை இரண்டுக்கும் இடையில் உள்ள வித்தியாசமாவது, ஷர்த் என்பது வணக்க வழிபாட்டுக்கு முன்பு இருக்க வேண்டிய ஒன்றாகும். வணக்க வழிபாடு முடிகின்றவரை அது நீடித்து இருக்க வேண்டும்.

ருக்ன் என்றால் இபாதத்தில் கட்டாயம் இருக்க வேண்டிய சொற்கள் இன்னும் செயல்கள் ஆகும்.

**தொழுகையின் ருக்னுகள் பதினான்காகும்**.

இந்த பதினான்கில் எதையும் வேண்டுமென்றோ மறதியாகவோ அறியாமையாகவோ விடுவது கூடாது. இவை அனைத்தும் தொழுகையில் இருப்பது மிக மிக கட்டாயமாகும். ஆகவே, இவற்றில் எந்த ஒன்றையும் அறிந்தோ அறியாமலோ, மறந்தோ,

47. அறிவிப்பாளர்: உமர் இப்னுல் கத்தாப் ரலி, நூல்: புகாரி, எண்: 1

வேண்டுமென்றோ விடுவது கூடாது. சில நிர்ப்பந்தங்களில் இருக்கின்றவர்களுக்கு மட்டும் மார்க்கம் சலுகைகளை சில ருக்னுகள் விஷயத்தில் வழங்கியுள்ளது என்பதும் இங்கு கவனிக்க வேண்டிய ஒன்றாகும்.

இந்த ருக்னுகளின் விளக்கம்

**1). قيام - கியாம்: ஃபர்ழான தொழுகைகளில் நிற்பதற்கு ஆற்றல் உள்ளவர் நின்று தொழவேண்டும்.**

அல்லாஹ் கூறுகின்றான்:

وَقُومُوا لِلَّهِ قَانِتِينَ

அல்லாஹ்விற்கு முன்பு பணிந்தவர்களாக நில்லுங்கள்!
(அல்குர்ஆன் 2:238)

عَنْ عِمْرَانَ بْنِ حُصَيْنٍ رضي الله عنه قَالَ كَانَتْ بِي بَوَاسِيرُ فَسَأَلْتُ النَّبِيَّ ﷺ عَنِ الصَّلَاةِ فَقَالَ صَلِّ قَائِمًا فَإِنْ لَمْ تَسْتَطِعْ فَقَاعِدًا فَإِنْ لَمْ تَسْتَطِعْ فَعَلَى جَنْبٍ

رواه البخاري برقم ١١١٧

இம்ரான் இப்னு ஹுசைன் رضي الله عنه கூறுகிறார்கள்: எனக்கு மூல நோய் இருந்தது. ஆகவே, (நான் எப்படி தொழுவது என்று) நபி ﷺ அவர்களிடம் கேட்டேன். அவர்கள் கூறினார்கள்: "நின்று தொழுங்கள்! உங்களுக்கு முடியவில்லை என்றால் உட்கார்ந்து தொழுங்கள்! உங்களுக்கு முடியவில்லை என்றால் படுத்து தொழுங்கள்![48]

கருத்து: மேற்கண்ட குர்ஆன் வசனத்தில் இருந்தும் நபிமொழியில் இருந்தும் தொழுகையில் கியாம் - நிற்பது மிக முக்கியமான கடமை என்றும் நிற்கமுடியவில்லை என்றால்தான் உட்கார்ந்து தொழ வேண்டும் என்றும் நாம் விளங்க முடிகிறது.

48. நூல்: புகாரி, எண்: 1117

மேலும், ஃபர்ழான தொழுகைக்கும் நஃபிலான தொழுகைக்கும் இடையில் சில ருக்னுகளில் சலுகைகள் உள்ளன. நஃபிலான தொழுகையில் நிற்பதற்கு ஆற்றல் இருந்தும் உட்கார்ந்து தொழுவது அனுமதிக்கப்பட்டதாகும். நஃபிலான தொழுகையில் நின்று தொழுவது ருக்ன் இல்லை. இருப்பினும், நின்று தொழுவது உட்கார்ந்து தொழுவதைவிட சிறப்பாகும்.

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷺ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ خَرَجَ فَرَأَى أُنَاسًا يُصَلُّونَ قُعُودًا فَقَالَ صَلَاةُ الْقَاعِدِ عَلَى النِّصْفِ مِنْ صَلَاةِ الْقَائِمِ رواه ابن ماجة برقم ١٢٢٠**

அனஸ் இப்னு மாலிக் ﷺ கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் (ஒரு நாள் வீட்டில் இருந்து) வெளியில் வந்தார்கள். அங்கு பலர் அமர்ந்தவர்களாக தொழுவதைப் பார்த்தார்கள். அப்போது கூறினார்கள்: "உட்கார்ந்து தொழுபவருடைய தொழுகை நின்று தொழுபவருடைய தொழுகையிலிருந்து பாதி நன்மையில் இருக்கின்றது."[49]

நஃபில் தொழுகையை அமர்ந்து நிறைவேற்றுவது கூடும் என்பதை அறிவிக்கக்கூடிய பல அறிவிப்புகள் ஹதீஸ் நூல்களில் இருக்கின்றன.

இமாம் திர்மிதி ﷺ அவர்கள் தனது ஜாமிஃ நூலில் இமாம் ஹஸன் பஸரி ﷺ கூறியதாக எழுதுகிறார்கள்:

**عَنِ الْحَسَنِ قَالَ إِنْ شَاءَ الرَّجُلُ صَلَّى صَلَاةَ التَّطَوُّعِ قَائِمًا وَجَالِسًا وَمُضْطَجِعًا**

ஒருவர் நாடினால் நஃபில் தொழுகையை நின்றவராகவும் உட்கார்ந்தவராகவும் படுத்தவராகவும் தொழலாம்.

**2). இரண்டாவது ருக்ன், தொழுகையின் ஆரம்பத்தில் "அல்லாஹு அக்பர்" என்று கூறப்படுகின்ற தக்பீரத்துல் இஹ்ராம் ஆகும்.**

தக்பீர் தஹ்ரீமாவில் "அல்லாஹு அக்பர்" என்ற வாசகத்தைத் தவிர வேறு வாசகங்களைக் கூறக்கூடாது.

49. நூல்: இப்னு மாஜா, எண்: 1220

ஒருவர் மஸ்ஜிதில் நுழைந்து தொழுகிறார். ஆனால், அவரது தொழுகை சரியில்லை என்று நபி ﷺ அவர்கள் தொழுகையை மீண்டும் தொழும்படி அவருக்கு ஏவுகிறார்கள். இப்படியாக மூன்று முறை நடந்த பின்னர் இதைவிட அழகாக எனக்கு தொழத் தெரியாது. ஆகவே, எனக்கு நீங்கள் கற்றுத்தாருங்கள் என்று அந்த மனிதர் நபி ﷺ அவர்களிடம் கூறியவுடன் அவருக்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

فَقَالَ إِذَا قُمْتَ إِلَى الصَّلَاةِ فَكَبِّرْ

"நீ தொழுகைக்கு நின்றால் தக்பீர் கூறு"[50]

**عَنْ عَلِيٍّ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مِفْتَاحُ الصَّلَاةِ الطُّهُورُ وَتَحْرِيمُهَا التَّكْبِيرُ وَتَحْلِيلُهَا التَّسْلِيمُ رواه أبو داود برقم ٥٦**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: தொழுகையின் திறவுகோல் சுத்தமாகும். அதன் ஆரம்பம் தக்பீர் கூறுவதாகும். அதன் இறுதி ஸலாம் கூறுவதாகும்.[51]

ஆகவே, தக்பீர் (-அல்லாஹு அக்பர்) கூறாமல் வேறு எந்த வாசகத்தை கூறி தொழுகையை ஆரம்பித்தாலும் தொழுகை நிறைவேறாது.

**3). ஒவ்வொரு ரக்அத்திலும் முதலாவதாக சூரத்துல் ஃபாத்திஹா ஓத வேண்டும்.**

**عَنْ عُبَادَةَ بْنِ الصَّامِتِ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ لَاصَلَاةَ لِمَنْ لَمْ يَقْرَأْ بِفَاتِحَةِ الْكِتَابِ رواه البخاري برقم ٧٥٦**

50. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 793.
51. அறிவிப்பாளர்: அலி رضي الله عنه, நூல்: அபூ தாவூத், எண்: 56

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: குர்ஆனிலிருந்து ஃபாத்திஹா சூராவை ஓதாதவருக்கு தொழுகை அறவே சேராது.[52]

**மேற்கூறப்பட்ட சட்டத்தில் சிலருக்கு விதிவிலக்கு உண்டு**.

**مسبوق** - மஸ்பூக்: தொழுகையில் தாமதமாக வந்து சேருபவர் இமாம் ருகூஃவில் இருக்கும் போது வந்தால் அவர் தக்பீர் கூறி உடனே ருகூஃவிற்கு சென்றுவிட வேண்டும்.

அவ்வாறே, இமாம் நிலையில் இருக்கும்போது ஒருவர் வருகிறார். ஆனால், ஃபாத்திஹா சூராவை ஓதும் அளவிற்கு அவருக்கு நேரம் கிடைக்கவில்லை என்றால் அவரும் இமாமுடன் சேர்ந்து ருகூஃவிற்கு சென்றுவிட வேண்டும்.

அவ்வாறே, சப்தமாக ஓதப்படுகின்ற தொழுகையில் இமாமுக்கு பின்னால் தொழுபவர் ஃபாத்திஹா சூரா ஓத வேண்டிய அவசியமில்லை. இமாம் ஓதுவதை செவியுறுவதே போதுமானதாகும். இருப்பினும், வசனங்களுக்கு இடையில் இமாம் மூச்சு விடும்போது ஓதிக்கொண்டால் நல்லது.

**4). ஒவ்வொரு ரக்அத்திலும் ருகூஃ செய்வது - குனிவது**.

தொழக்கூடியவர் நிலையில் நின்று ஓதவேண்டியவற்றை ஓதியபின் தக்பீர் கூறி குனிய வேண்டும். இந்த குனிதலைத்தான் ருகூஃ என்று கூறப்படும். இவ்வாறு அவர் தொழுகின்ற ஒவ்வொரு ரக்அத்திலும் ருகூஃ செய்வது தொழுகையின் ருக்ன் ஆகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا ارْكَعُوا وَاسْجُدُوا

நம்பிக்கையாளர்களே! நீங்கள் (தொழுகையில்) ருகூஃ செய்யுங்கள் (குனியுங்கள்)! இன்னும், சுஜூது செய்யுங்கள் (சிரம் தாழ்த்துங்கள்)!
(அல்குர்ஆன் 22:77)

52. அறிவிப்பாளர்: உபாதா இப்னு அஸ்ஸாமித் ؓ, நூல்: புகாரி, எண்: 756

நபி ﷺ அவர்களுடைய காலத்தில் ஒருவர் மஸ்ஜிதுக்கு வந்தார், பிறகு அவர் தொழ ஆரம்பித்தார். அவர் தொழுது முடித்து திரும்பும்போது அவரது தொழுகை சரியில்லை என்று நபி ﷺ அவர்கள் தொழுகையை மீண்டும் தொழும்படி அவருக்கு ஏவுகிறார்கள். இப்படியாக மூன்று முறை நடந்த பின்னர், “இதைவிட அழகாக எனக்கு தொழத் தெரியாது. ஆகவே, எனக்கு நீங்கள் கற்றுத் தாருங்கள்” என்று அந்த மனிதர் நபி ﷺ அவர்களிடம் கூறியவுடன் அவருக்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

ثُمَّ ارْكَعْ حَتَّى تَطْمَئِنَّ رَاكِعًا

(நின்று தக்பீர் கூறி, குர்ஆன் ஓதிய) பிறகு, நீ ருகூஃ செய் - குனி! ருகூஃ செய்தவராக நீ நிதானமடைகின்றவரை (குனிந்து) இரு.[53]

**5). 6). ருகூஃவிலிருந்து எழவேண்டும். பிறகு, நிதானமாக நிற்க வேண்டும்.**

மேற்கூறப்பட்ட அதே நபிமொழியில் நபி ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள்:

ثُمَّ ارْفَعْ رَأْسَكَ حَتَّى تَعْتَدِلَ قَائِمًا

பிறகு, உனது தலையை உயர்த்து! இறுதியாக நின்ற நிலையில் நீ நிதானமாக இரு![54]

**7). சுஜூத் செய்வது**

சிறுநிலையில் நின்ற பிறகு தரைக்குச் சென்று முகத்தை பூமியில் வைக்கவேண்டும். இதை சுஜூது என்று கூறப்படுகிறது.

அல்லாஹ் கூறுகின்றான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا ارْكَعُوا وَاسْجُدُوا

53. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி, எண்: 6251
54. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி, எண்: 6251

நம்பிக்கையாளர்களே! நீங்கள் (தொழுகையில்) ருகூஃ செய்யுங்கள் (குனியுங்கள்)! இன்னும், சுஜூது செய்யுங்கள் (சிரம் தாழ்த்துங்கள்)!
(அல்குர்ஆன் 22:77)

நபி ﷺ அவர்களுடைய காலத்தில் ஒருவர் மஸ்ஜிதுக்கு வந்தார், பிறகு அவர் தொழ ஆரம்பித்தார். அவர் தொழுது முடித்து திரும்பும்போது அவரது தொழுகை சரியில்லை என்று நபி ﷺ அவர்கள் தொழுகையை மீண்டும் தொழும்படி அவருக்கு ஏவுகிறார்கள். இப்படியாக மூன்று முறை நடந்த பின்னர், "இதைவிட அழகாக எனக்கு தொழத் தெரியாது. ஆகவே, எனக்கு நீங்கள் கற்றுத் தாருங்கள்" என்று அந்த மனிதர் நபி ﷺ அவர்களிடம் கூறியவுடன் அவருக்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

ثُمَّ اسْجُدْ حَتّٰى تَطْمَئِنَّ سَاجِدًا

(நின்று தக்பீர் கூறி, குர்ஆன் ஓதிய பிறகு, ருகூஃ செய்த) பிறகு, நீ சுஜூத் செய் - சிரம் பணி! சுஜூத் செய்தவராக - சிரம் பணிந்தவராக நீ நிதானமடைகின்றவரை (சுஜூதில் இரு).[55]

ஒவ்வொரு ரக்அத்திலும் இரு முறை சுஜூத் செய்ய வேண்டும். சுஜூத் செய்யும்போது உடலில் உள்ள ஏழு உறுப்புகள் பூமியில் பட வேண்டும்.

عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنهما قَالَ قَالَ النَّبِيُّ ﷺ أُمِرْتُ أَنْ أَسْجُدَ عَلَى سَبْعَةِ أَعْظُمٍ عَلَى الْجَبْهَةِ وَأَشَارَ بِيَدِهِ عَلَى أَنْفِهِ وَالْيَدَيْنِ وَالرُّكْبَتَيْنِ وَأَطْرَافِ الْقَدَمَيْنِ وَلَا نَكْفِتَ الثِّيَابَ وَالشَّعَرَ رواه البخاري برقم ٨٠٩

நபி ﷺ கூறினார்கள்: ஏழு எலும்புகள் மீது சுஜூத் செய்ய வேண்டும் என்று நான் பணிக்கப்பட்டுள்ளேன். நெற்றியின் மீது, தனது கரத்தால் மூக்கின் மீதும் என்று சாடை செய்தார்கள். இரு கரங்கள் மீது, இரு

55. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 809

பாதங்களின் ஓரங்கள் மீது. இன்னும் நாங்கள் ஆடைகளையும் முடியையும் சுருட்டாமல் இருக்கவும் பணிக்கப்பட்டோம்.[56]

**8). 9). சுஜூதில் இருந்து எழுவது, பிறகு, இரண்டு சுஜூதிற்கு இடையில் அமர்வது.**

நபி ﷺ அவர்களுடைய காலத்தில் ஒருவர் மஸ்ஜிதுக்கு வந்தார், பிறகு அவர் தொழ ஆரம்பித்தார். அவர் தொழுது முடித்து திரும்பும்போது அவரது தொழுகை சரியில்லை என்று நபி ﷺ அவர்கள் தொழுகையை மீண்டும் தொழும்படி அவருக்கு ஏவுகிறார்கள். இப்படியாக மூன்று முறை நடந்த பின்னர், “இதைவிட அழகாக எனக்கு தொழத் தெரியாது. ஆகவே, எனக்கு நீங்கள் கற்றுத் தாருங்கள்” என்று அந்த மனிதர் நபி ﷺ அவர்களிடம் கூறியவுடன் அவருக்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

ثُمَّ ارْفَعْ حَتَّى تَسْتَوِيَ وَتَطْمَئِنَّ جَالِسًا

(நீ சுஜூத் செய் - சிரம் பணிந்த) பிறகு (உனது தலையை) உயர்த்து! இறுதியாக, நீ உட்கார்ந்த நிலையில் சமமாக இருக்கவேண்டும், அமைதி அடைய வேண்டும்.[57]

10). எல்லா ருக்னுகளையும் **اطمئنان واعتدال** அமைதியாகவும் நிதானமாகவும் நிறைவேற்ற வேண்டும்.

மேற்கூறப்பட்ட நபிமொழியில் அந்த மனிதர் நிதானமாகவும் அமைதியாகவும் தொழாத காரணத்தால் அவர் தொழுத தொழுகையை மீண்டும் தொழும்படி அவருக்கு நபி ﷺ கட்டளையிட்டார்கள். பிறகு, ஒவ்வொரு ருக்னையும் நிதானமாக, அமைதியாக நிறைவேற்றும்படி அவருக்கு அறிவுறுத்தினார்கள். அந்த ஹதீஸ் பின்வருமாறு

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ أَنَّ النَّبِيَّ ﷺ دَخَلَ الْمَسْجِدَ فَدَخَلَ رَجُلٌ فَصَلَّى ثُمَّ

56. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ؓ, நூல்: புகாரி, எண்: 809
57. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி, எண்: 809

**جَاءَ فَسَلَّمَ عَلَى النَّبِيِّ ﷺ فَرَدَّ النَّبِيُّ ﷺ عَلَيْهِ السَّلَامَ فَقَالَ ارْجِعْ فَصَلِّ فَإِنَّكَ لَمْ تُصَلِّ فَصَلَّى ثُمَّ جَاءَ فَسَلَّمَ عَلَى النَّبِيِّ ﷺ فَقَالَ ارْجِعْ فَصَلِّ فَإِنَّكَ لَمْ تُصَلِّ ثَلَاثًا فَقَالَ وَالَّذِي بَعَثَكَ بِالْحَقِّ فَمَا أُحْسِنُ غَيْرَهُ فَعَلِّمْنِي قَالَ إِذَا قُمْتَ إِلَى الصَّلَاةِ فَكَبِّرْ ثُمَّ اقْرَأْ مَا تَيَسَّرَ مَعَكَ مِنْ الْقُرْآنِ ثُمَّ ارْكَعْ حَتَّى تَطْمَئِنَّ رَاكِعًا ثُمَّ ارْفَعْ حَتَّى تَعْتَدِلَ قَائِمًا ثُمَّ اسْجُدْ حَتَّى تَطْمَئِنَّ سَاجِدًا ثُمَّ ارْفَعْ حَتَّى تَطْمَئِنَّ جَالِسًا ثُمَّ اسْجُدْ حَتَّى تَطْمَئِنَّ سَاجِدًا ثُمَّ افْعَلْ ذٰلِكَ فِي صَلَاتِكَ كُلِّهَا رواه البخاري برقم ٨٠٩**

நபி ﷺ அவர்கள் பள்ளிக்குள் நுழைந்தார்கள். அப்போது ஓர் ஆடவரும் பள்ளிக்குள் நுழைந்தார். அவர் தொழுதுவிட்டு பிறகு நபி ﷺ அவர்களிடம் வந்து ஸலாம் கூறினார். நபி ﷺ அவர்கள் அவருக்கு பதில் ஸலாம் கூறினார்கள். மேலும், நீ திரும்பச் சென்று தொழு! இதற்கு முன்பு நீ தொழவில்லை. அந்த மனிதர் மீண்டும் தொழுதார். பிறகு நபி அவர்களிடம் வந்து ஸலாம் கூறினார். நபி ﷺ அவர்கள் நீ திரும்பச் சென்று தொழு! இதற்கு முன்பு நீ தொழவில்லை என்று கூறினார்கள். இவ்வாறு மூன்று முறை நடைபெற்றது. அந்த மனிதர் கூறினார் உண்மையான மார்க்கத்தைக் கொண்டு உங்களை அனுப்பியவன் மீது சத்தியமாக இதற்கு மேல் அழகாக எனக்கு தொழ தெரியாது. ஆகவே, நீங்கள் எனக்கு கற்றுக் கொடுங்கள் என்று கூறினார். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: நீ தொழுகைக்கு நின்றால் தக்பீர் கூறு. பிறகு குர்ஆனில் உனக்கு இலகுவானதை ஓது. பிறகு ருகூஃ செய். ருகூஃவில் நிதானமாக இரு. பிறகு (தலையை) உயர்த்து. நிலையில் நிதானமாக இரு. பிறகு சுஜூது செய். சுஜூதில் நிதானமாக இரு. பிறகு தலையை உயர்த்து, இருப்பில் நிதானமாக அமரு. பிறகு சுஜூது செய். சுஜூதில் நிதானமாக இரு. இவ்வாறு உனது தொழுகை முழுவதும் செய்.[58]

58. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி எண்: 809

**11). 12). தொழுகையின் இறுதியில் அமர்வதும் அதில் ஷஹாதா ஓதுவதும்.**

عَنِ ابْنِ مَسْعُودٍ ﵁ قَالَ كُنَّا نَقُولُ فِي الصَّلَاةِ قَبْلَ أَنْ يُفْرَضَ التَّشَهُّدُ السَّلَامُ عَلَى اللّٰهِ السَّلَامُ عَلَى جِبْرِيلَ وَمِيكَائِيلَ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ لَا تَقُولُوا هٰكَذَا فَإِنَّ اللّٰهَ عَزَّ وَجَلَّ هُوَ السَّلَامُ وَلَكِنْ قُولُوا اَلتَّحِيَّاتُ لِلّٰهِ وَالصَّلَوَاتُ وَالطَّيِّبَاتُ السَّلَامُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ السَّلَامُ عَلَيْنَا وَعَلَى عِبَادِ اللّٰهِ الصَّالِحِينَ أَشْهَدُ أَنْ لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ رواه النسائي برقم ١٢٦٠

இப்னு மஸ்வூத் ﵁ கூறுகிறார்கள்: தஷஹ்ஹுத் "ஃபர்ழ்" - கட்டாயக் கடமையாக ஆக்கப்படுவதற்கு முன்னர் நாங்கள் தொழுகையில், "அஸ்ஸலாமு அலல்லாஹ், அஸ்ஸலாமு அலா ஜிப்ரீல், வ மீக்காயீல்" என்று கூறுபவர்களாக இருந்தோம். பிறகு, ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நீங்கள் இவ்வாறு கூறாதீர்கள்! ஏனெனில், நிச்சயமாக அல்லாஹ் அவன்தான் 'ஸலாம்' ஆவான். என்றாலும், நீங்கள் (இவ்வாறு) கூறுங்கள்:

اَلتَّحِيَّاتُ لِلّٰهِ وَالصَّلَوَاتُ وَالطَّيِّبَاتُ. السَّلَامُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ. السَّلَامُ عَلَيْنَا وَعَلَى عِبَادِ اللّٰهِ الصَّالِحِينَ. أَشْهَدُ أَنْ لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ. وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ.

இந்த ஹதீஸில் **قَبْلَ أَنْ يُفْرَضَ التَّشَهُّدُ** "தஷஹ்ஹுத் கட்டாயக் கடமையாக ஆக்கப்படுவதற்கு முன்னர்" என்ற வாசகம் முன்பு தஷஹ்ஹுத் ஃபர்ழ்' கட்டாயமில்லாமல் இருந்ததாகவும் பின்னர் அது கட்டாயமாக்கப்பட்டு விட்டதாகவும் உணர்த்துகிறது.

நபி ﷺ அவர்கள் வாழ்நாள் முழுவதும் தொழுகையில் இந்த இறுதி இருப்பை விட்டதில்லை. மேலும், நபி அவர்கள் நமக்கு கூறினார்கள்:

وَصَلُّوا كَمَا رَأَيْتُمُونِي أُصَلِّي

நான் தொழுவதை நீங்கள் பார்த்தது போன்று நீங்களும் தொழுங்கள்![59]

**13). தொழுகையை ஸலாம் கூறி முடிப்பது.**

عَنْ عَلِيٍّ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مِفْتَاحُ الصَّلَاةِ الطُّهُورُ وَتَحْرِيمُهَا التَّكْبِيرُ وَتَحْلِيلُهَا التَّسْلِيمُ رواه أبو داود برقم ٥٦

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: தொழுகையின் திறவுகோல் சுத்தமாகும். அதன் ஆரம்பம் தக்பீர் கூறுவதாகும். அதன் இறுதி ஸலாம் கூறுவதாகும்.[60]

வலது பக்கம் திரும்பி, "அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ்" என்றும் இடது பக்கம் திரும்பி "அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ்" என்றும் கூற வேண்டும்.

**14). மேற்கூறப்பட்ட வரிசை முறைப்படி ருக்னுகளை முறையாக செய்ய வேண்டும்.**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

وَصَلُّوا كَمَا رَأَيْتُمُونِي أُصَلِّي

நான் தொழுவதை நீங்கள் பார்த்தது போன்று நீங்களும் தொழுங்கள்![61]

மேலும், சரியாக தொழாத மனிதருக்கு தொழுகையின் முறையை நபி ﷺ அவர்கள் கற்பித்துக் கொடுத்தபோது ஒவ்வொரு ருக்னையும்

59. அறிவிப்பாளர்: மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ் ؓ, நூல்: புகாரி, எண்: 631
60. அறிவிப்பாளர்: அலி ؓ, நூல்: அபூ தாவூத், எண்: 56
61. அறிவிப்பாளர்: மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ் ؓ, நூல்: புகாரி, எண்: 631

கூறிவிட்டு அடுத்த ருக்னை கூறும்போது ثُمَّ 'ஸும்ம' என்ற அரபி பதத்தை நபி ﷺ அவர்கள் பயன்படுத்தினார்கள். இந்த ஸும்ம என்ற அரபி பதம் இதற்கு முன்னுள்ளதை செய்த பிறகு, இதற்கு அடுத்துள்ளதை செய்வது என்ற பொருளைத் தரக்கூடியதாகும்.

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

# தொழுகையின் வாஜிபுகள்

தொழுகையில் எட்டு செயல்கள் வாஜிபாகும். தொழுகையில் ருக்னுகள் அல்லாத அவசியமான அமல்களை வாஜிப் என்று கூறப்படும்.

இவற்றில் எதையும் வேண்டுமென்று விட்டுவிட்டால் தொழுகை வீணாகிவிடும். ஒருவர் இந்த செயல்களில் எதையும் அது அவசியமானது என்பதை அறியாமல் விட்டுவிட்டால் அல்லது மறதியில் விட்டுவிட்டால் அது மன்னிக்கப்பட்டதாகும். ஆனால், மறதியில் ஒருவர் இந்த செயல்களில் எதையும் விட்டுவிட்டால் அதற்காக அவர் தொழுகையின் இறுதியில் இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும்.

ருக்னு மற்றும் வாஜிப் இவ்விரண்டுக்கும் இடையில் வித்தியாசம் என்னவென்றால் 'ருக்ன்'ஐ கண்டிப்பாக செய்ய வேண்டும். 'ருக்ன்'ஐ விடுவதால் தொழுகை சரியாகாது. தொழுகை வீணாகிவிடும். 'வாஜிப்'ஐ ஒருவர் மறதியாக விட்டுவிட்டால் அவர் அதற்காக ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்ய வேண்டும். ருக்னு என்பது வாஜிபை விட மிக கட்டாயமான ஒன்றாகும்.

வாஜிபுகளின் விளக்கம் பின்வருமாறு:

1). தொழுகையின் முதல் தஹ்ரீமா தக்பீர் அல்லாத மற்ற தக்பீர்கள் அனைத்தும் வாஜிபாகும். இந்த தக்பீர்களுக்கு **تكبير الانتقال** - "தக்பீருல் இன்திகால்" (ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு மாறுவதற்குள்ள தக்பீர்) என்று கூறப்படும்.

**عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ مَسْعُودٍ ﷺ قَالَ كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ يُكَبِّرُ فِي كُلِّ خَفْضٍ وَرَفْعٍ وَقِيَامٍ وَقُعُودٍ وَأَبُو بَكْرٍ وَعُمَرُ قَالَ وَفِي الْبَاب عَنْ أَبِي هُرَيْرَةَ وَأَنَسٍ وَابْنِ عُمَرَ وَأَبِي مَالِكٍ الْأَشْعَرِيِّ وَأَبِي مُوسَى وَعِمْرَانَ بْنِ حُصَيْنٍ وَوَائِلِ بْنِ حُجْرٍ وَابْنِ عَبَّاسٍ قَالَ أَبُو عِيسَى حَدِيثُ عَبْدِ اللّٰهِ بْنِ مَسْعُودٍ حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ وَالْعَمَلُ عَلَيْهِ عِنْدَ أَصْحَابِ النَّبِيِّ ﷺ مِنْهُمْ أَبُو بَكْرٍ وَعُمَرُ وَعُثْمَانُ وَعَلِيٌّ وَغَيْرُهُمْ وَمَنْ بَعْدَهُمْ مِنْ التَّابِعِينَ وَعَلَيْهِ عَامَّةُ الْفُقَهَاءِ وَالْعُلَمَاءِ رواه الترمذي برقم ٢٣٥**

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ؓ கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் (தொழுகையில்) குனியும் போதும் எழும்போதும் நிற்கும்போதும் உட்காரும்போதும் தக்பீர் கூறுபவர்களாக இருந்தார்கள். அவ்வாறே, அபூ பக்ர் ؓ, உமர் ؓ ஆகியோரும் (தக்பீர் கூறுவார்கள்).[62]

இதைத் தொடர்ந்து இமாம் திர்மிதி ؒ கூறுகிறார்கள்: இதே கருத்துள்ள ஹதீஸை அபூ ஹுரைரா, அனஸ், அபூ மாலிக் அல்அஷ்அரி, அபூ மூசா, இம்ரான் இப்னு ஹுசைன், வாயில் இப்னு ஜுஹ்ர், இப்னு அப்பாஸ் ؓ ஆகிய நபித்தோழர்களும் அறிவிக்கின்றார்கள். இந்த ஹதீஸின் படிதான் அபூ பக்ர், உமர், உஸ்மான், அலி ؓ மற்றும் பல நபித்தோழர்கள், தாபியீன்கள் அமல் செய்துள்ளனர். இன்னும் இந்த கருத்தில்தான் மார்க்க சட்ட வல்லுனர்கள், அறிஞர்கள் அனைவரும் இருக்கின்றனர்.

நபி ﷺ அவர்கள் இந்த தக்பீரை வாழ்நாள் முழுவதும் தொடர்ந்து செய்துள்ளார்கள்.

**وَصَلُّوا كَمَا رَأَيْتُمُونِي أُصَلِّي**

62. நூல்: திர்மிதி, எண்: 235

நான் தொழுவதை நீங்கள் பார்த்தது போன்று நீங்களும் தொழுங்கள்![63]

2). இமாம் மற்றும் முன்ஃபரித் - தனியாத் தொழுபவர் ருகூஃவிலிருந்து எழும்போது சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறவேண்டும்.

كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ إِذَا قَامَ إِلَى الصَّلَاةِ يُكَبِّرُ حِينَ يَقُومُ ثُمَّ يُكَبِّرُ حِينَ يَرْكَعُ ثُمَّ يَقُولُ سَمِعَ اللّٰهُ لِمَنْ حَمِدَهُ حِينَ يَرْفَعُ صُلْبَهُ مِنْ الرَّكْعَةِ رواه البخاري برقم ٧٤٧

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தொழுகைக்கு நிற்கும்போது தக்பீர் கூறுபவர்களாகவும், பிறகு ருகூஃ செய்யும்போது தக்பீர் கூறுபவர்களாகவும், பிறகு ருகூஃவிலிருந்து தனது முதுகை உயர்த்தும் போது சமி அல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறுபவர்களாகவும் இருந்தார்கள்.[64]

3). இமாம் - தொழுகை நடத்துபவர் "சமி அல்லாஹு லிமன் ஹமிதஹ்" என்று கூறியவுடன் மஃமூம் - இமாமை பின்தொடர்ந்து தொழுபவர் "ரப்பனா வலகல் ஹம்த்" என்று கூறவேண்டும். ஆனால், இமாம் மற்றும் முன்ஃபரித் - தனியாக தொழுபவர் "சமி அல்லாஹு லிமன் ஹமிதஹ்" என்று கூறியவுடன் "ரப்பனா வலகல் ஹம்த்" என்று கூறுவது சுன்னாவாகும். அதாவது, இரண்டையும் கூறுவது இவ்விருவருக்கும் சுன்னாவாகும்.

عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ أَنَّهُ قَالَ إِنَّمَا جُعِلَ الْإِمَامُ لِيُؤْتَمَّ بِهِ فَلَا تَخْتَلِفُوا عَلَيْهِ فَإِذَا رَكَعَ فَارْكَعُوا وَإِذَا قَالَ سَمِعَ اللّٰهُ لِمَنْ حَمِدَهُ فَقُولُوا رَبَّنَا لَكَ الْحَمْدُ رواه البخاري برقم ٦٨٠

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "இமாம் ஏற்படுத்தப்பட்டதெல்லாம்

---

63. அறிவிப்பாளர்: மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: புகாரி, எண்: 5549
64. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: புகாரி, எண்: 747

அவரை பின்பற்றுவதற்குத்தான். ஆகவே, அவருக்கு முரண்பட்டு நடக்காதீர்கள். அவர் ருகூஃ செய்தால் நீங்களும் ருகூஃ செய்யுங்கள்! அவர் "ஸமி அல்லாஹு லிமன் ஹமிதஹ்" என்று கூறினால் நீங்கள் "ரப்பனா லகல் ஹம்து" என்று கூறுங்கள்![65]

4). ருகூஃ இல் இருக்கும் போது ஒருமுறை "சுப்ஹான ரப்பியல் அளீம்" என்று கூறுவது

5). ஸுஜூதில் இருக்கும்போது ஒரு முறை "சுப்ஹான ரப்பியல் அஃலா" என்று கூறுவது.

**عَنْ حُذَيْفَةَ رضي الله عنه أَنَّهُ صَلَّى مَعَ النَّبِيِّ ﷺ فَكَانَ يَقُولُ فِي رُكُوعِهِ سُبْحَانَ رَبِّيَ الْعَظِيمِ وَفِي سُجُودِهِ سُبْحَانَ رَبِّيَ الْأَعْلَى رواه الترمذي برقم ٢٤٣**

ஹுதைஃபா رضي الله عنه கூறுகிறார்கள்: தான் நபி ﷺ அவர்களுடன் தொழுததாகவும் நபி ﷺ அவர்கள் தமது ருகூஃ இல் "சுப்ஹான ரப்பியல் அளீம்" என்றும் தமது "சுஜூதில் சுப்ஹான ரப்பியல் அஃலா" என்றும் கூறுபவர்களாக இருந்தார்கள்.

ஒரு முறை கூறுவது வாஜிப் -கட்டாயமாகும். குறைந்தது மூன்று முறை கூறுவது சுன்னாவாகும்.

6). இரண்டு ஸஜ்தாவிற்கு இடையில் **رَبِّ اغْفِرْ لِي** – ரப்பிக் ஃபிர்லீ என்று கூறுவது.

**عَنْ حُذَيْفَةَ رضي الله عنه أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يَقُولُ بَيْنَ السَّجْدَتَيْنِ رَبِّ اغْفِرْ لِي رَبِّ اغْفِرْ لِي رواه ابن ماجة برقم ٨٨٧**

நபி ﷺ அவர்கள் இரண்டு ஸஜ்தாவிற்கு இடையில் **رَبِّ اغْفِرْ لِي رَبِّ اغْفِرْ لِي** என்று கூறுபவர்களாக இருந்தார்கள்.[66]

65. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 680
66. அறிவிப்பாளர்: ஹுதைஃபா رضي الله عنه, நூல்: இப்னு மாஜா, எண்: 887

7). (இரண்டு ரக்அத்தில் இரண்டாவது சுஜூதை முடித்த பின்னர்) முதல் தஷஹ்ஹூதில் அமர்வது இன்னும் அதில் அத்தஹிய்யாத் ஓதுவது வாஜிப் ஆகும். ஆனால், இமாம் மறதியாக எழுந்துவிட்டால் மஃமூம் தஷஹ்ஹூதில் உட்காராமலும் அதை ஓதாமலும் எழுந்து விடுவது மஃமூம் மீது குற்றமாகாது. ஏனெனில், இமாம் எதை செய்கிறாரோ அவரை பின்பற்றி அதை செய்வது மஃமூம் மீது கடமையாகும்.

நபி ﷺ அவர்கள் முதல் தஷஹ்ஹூதை மறந்துவிட்டு எழுந்த பின்னர் மீண்டும் தஷஹ்ஹூதின் பக்கம் அவர்கள் வரவில்லை. தொழுகையின் இறுதியில் ஸஜ்தா ஸஹ்வ் செய்து அந்த குறையை நிவர்த்தி செய்து கொண்டார்கள்.

عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ مَالِكٍ ابْنِ بُحَيْنَةَ رَضِيَ اللّٰهُ عَنْهُ قَالَ صَلَّى بِنَا رَسُولُ اللّٰهِ ﷺ الظُّهْرَ فَقَامَ وَعَلَيْهِ جُلُوسٌ فَلَمَّا كَانَ فِي آخِرِ صَلَاتِهِ سَجَدَ سَجْدَتَيْنِ وَهُوَ جَالِسٌ

رواه البخاري برقم ١٢٣٠

அப்துல்லாஹ் இப்னு மாலிக் இப்னு புஜைனா رضي الله عنه கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்கள் எங்களுக்கு ளுஹ்ர் தொழுகை தொழ வைத்தார்கள். முதல் இருப்பை நிறைவேற்றாமல் அவர்கள் (மூன்றாவது ரக்அத்திற்கு) எழுந்து விட்டார்கள். ஆகவே, தனது தொழுகையின் இறுதிக்கு அவர்கள் சென்றவுடன் உட்கார்ந்தவர்களாக இரண்டு ஸஜ்தா அவர்கள் செய்து கொண்டார்கள்.[67]

முதல் தஷஹ்ஹூத் பின்வருமாறு

اَلتَّحِيَّاتُ لِلّٰهِ وَالصَّلَوَاتُ وَالطَّيِّبَاتُ. اَلسَّلَامُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ. اَلسَّلَامُ عَلَيْنَا وَعَلَى عِبَادِ اللّٰهِ الصَّالِحِينَ. أَشْهَدُ أَنْ لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ. رواه البخاري برقم ٨٣١

67. நூல்: புகாரி, எண்: 1230

காணிக்கைகள், தொழுகைகள் மற்றும் நன்மைகள் அனைத்தும் அல்லாஹ்விற்கே உரித்தாகட்டும். நபியே! உங்கள் மீது ஸலாமும் அல்லாஹ்வின் மீது கருணையும் அவனது பரக்கத்துகளும் உண்டாகட்டும். நம்மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் மீதும் ஸலாம் உண்டாகட்டும். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று நான் சாட்சி கூறுகிறேன். முஹம்மது ﷺ அவர்கள் அவனுடைய அடிமையும் தூதருமாவார்கள் என்றும் சாட்சி கூறுகிறேன்.[68] பார்க்க பக்கம் 260

8). தஷஹ்ஹுத் ஓதுவதற்காக அமர்வது.

தஷஹ்ஹுத் ஓதுவது வாஜிபாக இருக்கும்போது அதற்காக அமராமல் ஓதமுடியாது. மேலும், நபி ﷺ அவர்கள் தொழுகையை கற்பித்த போது இந்த இருப்பையும் போதித்துள்ளார்கள்.

فَإِذَا جَلَسْتَ فِي وَسَطِ الصَّلَاةِ فَاطْمَئِنَّ وَافْتَرِشْ فَخِذَكَ الْيُسْرَى ثُمَّ تَشَهَّدْ

நீ தொழுகையின் நடுவில் அமர்ந்தால் அமைதியாக அமரு! உனது இடது தொடையை விரித்துவைத்து (அதன் மீது) அமரு! பிறகு, தஷஹ்ஹுத் ஓது![69]

فَقَالَ إِذَا قَعَدْتُمْ فِي كُلِّ رَكْعَتَيْنِ فَقُولُوا التَّحِيَّاتُ لِلّٰهِ

நபி ﷺ கூறினார்கள்: நீங்கள் ஒவ்வொரு இரண்டு ரக்அத்துகளுக்கு இடையில் அமர்ந்தால் நீங்கள் அத்தஹிய்யாத்து கூறுங்கள்.[70]

**ஆறாவது சட்டவிளக்கம்**

## தொழுகையின் சுன்னத்துகள்

தொழுகையில் நாம் பேணவேண்டிய, நபி ﷺ அவர்கள் கற்பித்த

68. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ؓ, நூல்: புகாரி, எண்: 831
69. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: அபூ தாவூத், எண்: 730,
70. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் (இப்னு மஸ்ஊத்) ؓ, நூல்: நசாயி, எண்: 1151

அழகிய செயல் முறைகளை தொழுகையின் சுன்னத்துகள் என்று கூறப்படுகின்றது.

இவற்றைப் பேணி தொழுகையை நிறைவேற்றுவது அவசியமாகும். இவற்றை அலட்சியம் செய்வது பாவமாகும். தவறுதலாக இவற்றில் எதையும் விட்டுவிட்டால் குற்றம் ஏற்படாது. அதற்காக 'ஸஜ்தா ஸஹ்வ்' செய்ய வேண்டிய அவசியமில்லை.

**தொழுகையின் சுன்னத்துகள் இரண்டு வகைகளாக உள்ளன.**

1). சொல் சார்ந்த சுன்னத்துகள்.

2). செயல் சார்ந்த சுன்னத்துகள்.

சொல் சார்ந்த சுன்னத்துகள் பின்வருமாறு:

1) தக்பீர் தஹ்ரீமா கூறியவுடன் ஓதப்படுகின்ற துஆவுல் இஸ்திஃப்தாஹ் -தொடக்க பிரார்த்தனைகள்.

2) அவூது பில்லாஹ்... கூறுவது

3) பிஸ்மில்லாஹ்... கூறுவது.

4) ஆமீன் கூறுவது.

5) துணை சூரா ஓதுவது.

6) ருகூஃ மற்றும் சுஜூதில் ஒன்றுக்கு மேற்பட்ட முறை தஸ்பீஹ் கூறுவது.

7) ஸலாம் கூறுவதற்கு முன்பாக துஆ கேட்பது.

செயல் சார்ந்த சுன்னத்துகள் பின்வருமாறு:

1) தக்பீர் தஹ்ரீமா கூறும் போதும் மற்ற தக்பீர்கள் கூறும்போதும் ருகூஃவிலிருந்து எழும்போதும் இரண்டாவது ரக்அத்திலிருந்து எழும்போதும் இரு கைகளையும் புஜங்கள் வரை அல்லது காதுகளின் சோனைவரை உயர்த்துவது சுன்னாவாகும்.

2) நிலையில் நிற்கும்போது வலது கையை இடது கையின் மீது வைத்து இரண்டு கைகளையும் நெஞ்சின் மீது வைப்பது சுன்னாவாகும்.

3) நிலையில் நிற்கும்போது சுஜூதுடைய இடத்தில் பார்வையை வைப்பது சுன்னாவாகும்.

4) நிலையில் இரு பாதங்களுக்கு இடையில் விரித்து வைப்பது சுன்னாவாகும்.

5) ருகூஃவில் இருக்கும்போது இரண்டு கைகளால் முட்டிக்கால்களை பிடிப்பதும், கை விரல்களை விரித்து வைப்பதும் முதுகை நீட்டி வைப்பதும், தலையை உயர்த்தாமலும் தாழ்த்தாமலும் முதுகுக்கு சமமாக வைப்பதும் சுன்னாவாகும்.

சொல், செயல் சார்ந்த இன்னும் பல சுன்னாக்கள் உள்ளன. அவற்றை ஹதீஸ் நூல்களில் படித்து அறியவும்.

**ஏழாவது சட்டவிளக்கம்**

## தொழுகையை முறிக்கக்கூடிய செயல்கள்

பின்வரும் காரியங்கள் தொழுகையை முறித்துவிடும்.

1). உளூ, தொழுகையின் நிபந்தனையாக இருக்கின்ற காரணத்தினால் உளூவை முறிக்கக்கூடிய செயல்கள் அனைத்தும் தொழுகையையும் முறித்துவிடும்.

2). சப்தம் வரும்படி சிரிப்பது (வெடிச் சிரிப்பு சிரிப்பது). இந்த வகையான சிரிப்பு தொழுகையை முறித்துவிடும் என்பதில் அறிஞர்கள் ஒரே கருத்தில் இருக்கின்றனர். இந்த வகையான சிரிப்பும் ஒரு வகையில் பேசுவதைப் போன்றுதான். அல்லது அதைவிட கடுமையானதாகும். அதுமட்டுமல்லாமல் வெடிச் சிரிப்பு சிரிப்பது தொழுகையின் நோக்கத்திற்கு மாறான விளையாட்டும் வீண் செயலும் ஆகும். இன்னும் தொழுகையின் மதிப்பை குறைப்பதும் அதில் இருக்கின்றது. சப்தமின்றி புன்முறுவலாக சிரிப்பது தொழுகையை முறிக்காது என்று அறிஞர்கள் கூறுவதை இமாம் இப்னுல் முன்திர் ﵀ குறிப்பிடுகிறார்கள்.

3). தொழுகையை சீர் செய்வதின் நோக்கமின்றி வேண்டுமென்றே பேசுவது தொழுகையை முறித்துவிடும்.

عَنْ زَيْدِ بْنِ أَرْقَمَ ﷺ إِنْ كُنَّا لَنَتَكَلَّمُ فِي الصَّلَاةِ عَلَى عَهْدِ النَّبِيِّ ﷺ يُكَلِّمُ أَحَدُنَا صَاحِبَهُ بِحَاجَتِهِ حَتَّى نَزَلَتْ {حَافِظُوا عَلَى الصَّلَوَاتِ وَالصَّلَاةِ الْوُسْطَى وَقُومُوا لِلَّهِ قَانِتِينَ} فَأُمِرْنَا بِالسُّكُوتِ رواه البخاري برقم ١٢٠٠

ஸைது இப்னு அர்கம் ﷺ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்களுடைய காலத்தில் நிச்சயமாக நாங்கள் தொழுகையில் பேசிக்கொண்டிருந்தோம். எங்களில் ஒருவர் தனக்கு அருகில் உள்ளவருடன் தனது தேவையை பேசிக் கொள்வார். இறுதியாக, இந்த வசனம் இறங்கியது.

(எல்லாத்) தொழுகைகளையும் (குறிப்பாக) நடுத்தொழுகையையும் நீங்கள் பேணி பாதுகாத்து வாருங்கள்! அல்லாஹ்விற்கு முன்பாக பணிந்தவர்களாக நில்லுங்கள்! (அல்குர்ஆன் 2:238)

ஆகவே, நாங்கள் அமைதியாக இருக்கும்படி ஏவப்பட்டோம்.[71]

ஒருவர் இந்த சட்டத்தை அறியாமல் அல்லது மறந்து பேசிவிட்டால் அவருடைய தொழுகை முறியாது.

4). பருவமடைந்த பெண் அல்லது கழுதை அல்லது கருப்பு நாய் தொழுபவருக்கு முன்பாக அவர் ஸுஜூத் செய்கின்ற இடத்திற்கு அருகில் கடந்து சென்றால் தொழுகை முறிந்துவிடும்.

عَنْ أَبِي ذَرٍّ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ إِذَا قَامَ أَحَدُكُمْ يُصَلِّي فَإِنَّهُ يَسْتُرُهُ إِذَا كَانَ بَيْنَ يَدَيْهِ مِثْلُ آخِرَةِ الرَّحْلِ فَإِذَا لَمْ يَكُنْ بَيْنَ يَدَيْهِ مِثْلُ آخِرَةِ الرَّحْلِ فَإِنَّهُ يَقْطَعُ صَلَاتَهُ الْحِمَارُ وَالْمَرْأَةُ وَالْكَلْبُ الْأَسْوَدُ قُلْتُ يَا أَبَا ذَرٍّ

71. நூல்: புகாரி, எண்: 1200

مَا بَالُ الْكَلْبِ الْأَسْوَدِ مِنْ الْكَلْبِ الْأَحْمَرِ مِنْ الْكَلْبِ الْأَصْفَرِ قَالَ يَا ابْنَ أَخِي سَأَلْتُ رَسُولَ اللهِ ﷺ كَمَا سَأَلْتَنِي فَقَالَ الْكَلْبُ الْأَسْوَدُ شَيْطَانٌ رواه مسلم برقم ٥١٠

அபூ தர் ؓ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்கள் கூறினார்கள், “உங்களில் ஒருவர் தொழுவதற்கு நின்றால், கஜாவா பெட்டியின் இறுதியில் இருக்கின்ற கட்டையைப் போன்று ஏதும் அவருக்கு முன்பாக இருந்தால் அது அவரை மறைத்துக்கொள்ளும். (அது அவருக்கு சுத்ராவாக அமைந்து விடும்.) ஏனெனில், கழுதைகள், பெண்கள், இன்னும் கருப்பு நாய்கள் (தொழுபவருக்கு குறுக்கே செல்வது அவருடைய) தொழுகையை முறித்துவிடும்.” இந்த செய்தியை அபூ தர் ؓ இடமிருந்து கேட்ட அப்துல்லாஹ் இப்னு அஸ்ஸாமித் ؓ என்ற நபித்தோழர் அபூ தர் ؓ அவர்களிடம் கேட்டார், அபூ தர் ؓ அவர்களே! சிவப்பு நாய், மஞ்சள் நாயிலிருந்து கருப்பு நாய்க்கு என்ன வித்தியாசம்? அபூ தர் ؓ கூறினார்கள்: என் சகோதரரின் மகனே! நீ என்னிடம் கேட்டது போன்று நானும் நபி ﷺ அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் கூறினார்கள்: கருப்பு நாய் ஷைத்தான் ஆகும்.[72]

ஒட்டகப் பெட்டியின் கடைசியில் இருக்கின்ற கட்டை ஏறக்குறைய ஒரு முழம் அல்லது கொஞ்சம் குறைவாக இருக்கும்.

5). வேண்டுமென்றே மறைவிடங்களை[73] விட்டு ஆடையை அகற்றுவது தொழுகையை முறித்துவிடும்.

6). கிப்லாவின் திசையை விட்டும் முற்றிலும் திரும்பிவிடுவது.

7). தொழுபவரின் உடல் அல்லது ஆடையில் அசுத்தம் ஒட்டிக் கொள்வது தொழுகையை முறித்துவிடும். அசுத்தம் ஒட்டியவுடனே அதை அவர் நீக்கிவிட்டால் தொழுகை முறியாது. அவ்வாறே,

72. நூல்: முஸ்லிம், எண்: 510

73. அதாவது, மறைக்கவேண்டிய இடங்கள் முழுமையாக மறைக்கப்பட்டிருக்க வேண்டும்.

அசுத்தம் ஒட்டியதை அவர் அறியவில்லை என்றாலும் தொழுகை முறியாது.

8). தொழுகையின் ருக்னுகளில் ஒன்றை அல்லது அதன் ஷர்த்துகளில் ஒன்றை எவ்வித சரியான காரணமும் இல்லாமல் வேண்டுமென்றே விட்டுவிட்டால் தொழுகை வீணாகிவிடும்.

9) தொழுகையில் இல்லாத வேறு செயல்களை வேண்டுமென்றே அதிகமாக செய்தால் தொழுகை வீணாகிவிடும். உதாரணமாக, சாப்பிடுவது, குடிப்பது.

10) தகுந்த காரணம் இல்லாமல் சாய்ந்து தொழுவதும் தொழுகையை வீணாக்கிவிடும். ஏனெனில், நின்று தொழுவது தொழுகையின் ருக்ன் ஆகும்.

11). செயல் சார்ந்த ஒரு ருக்னை வேண்டுமென்றே அதிகமாக செய்வது தொழுகையை முறித்து விடும். இவ்வாறு செய்வது தொழுகையின் அமைப்பை மாற்றிவிடுகிறது.

12). ருக்னுகளில் ஒன்றை வரிசை மாற்றி வேண்டுமென்றே முன் பின் செய்வது.

13). தொழுகையை முழுமையாக முடிப்பதற்கு முன் வேண்டுமென்றே ஸலாம் சொல்வது.

14). தொழுகையில் ஃபாத்திஹா சூராவில் அர்த்தம் மாறும்படி வேண்டுமென்றே ஓதுவது.

15). தொழுகையை முறித்து விடலாமா என்று தடுமாறுவதும் அல்லது தொழுகையை முறிப்பதாக எண்ணுவதும் தொழுகையை முறித்துவிடும். ஏனெனில், தொழுகை முழுவதும் தொழுகிறேன் என்ற நிய்யத் - எண்ணம் நீடித்து இருக்க வேண்டும். இடையில் நான் தொழுகையை முறிக்கிறேன் என்று எண்ணுவது அல்லது முறிக்கலாமா வேண்டாமா என்று தடுமாறுவது நிய்யத் இல்லாமல் தொழுவதாக ஆகிவிடும்.

**எட்டாவது சட்டவிளக்கம்**

# தொழுகையில் வெறுக்கப்பட்ட செயல்கள்

மார்க்க சட்டத் துறையில் வெறுக்கப்பட்ட செயல் என்றால், ஒருசெயலை விட்டு தடுக்கப்பட்டிருக்கும். ஆனால், அதை செய்தால் தண்டனை உண்டு என்று அச்சுறுத்தப்பட்டிருக்காது.

இதன் சட்டம் என்னவென்றால், யார் இதை அல்லாஹ்விற்காக விட்டுவிடுவாரோ அவருக்கு அல்லாஹ்விடம் நற்கூலி கிடைக்கும். இதை ஒருவர் செய்துவிட்டால் அவருக்கு தண்டனை இல்லை. தேவையின் சமயத்தில் இந்த வகையான செயல்களை செய்வது ஆகுமாகும்.

1). **நான்கு ரக்அத் தொழுகையில் முதல் இரண்டு ரக்அத்துகளில் ஃபாத்திஹா சூரா மட்டும் ஓதிவிட்டு துணை சூரா ஓதாமல் இருப்பது**.

ஏனெனில், இந்த செயல் நபி ﷺ அவர்களின் தொடர் வழிமுறைக்கு மாற்றம் செய்வதாகும். நபி ﷺ அவர்கள் எப்போதும் முதல் ரக்அத்துகளில் ஃபாத்திஹா சூராவுடன் துணை சூரா ஓதும் வழக்கமுள்ளவர்களாக இருந்தார்கள்.

2). **ஒரே ரக்அத்தில் இருமுறை அல்லது பல முறை ஃபாத்திஹா சூரா ஓதுவது**.

இது, நபி ﷺ அவர்கள் தொழுகையில் பின்பற்றிய வழிமுறைக்கு மாற்றமாகும். எனினும் ஓதும் போது உள்ளச்சமின்றி அல்லது மறந்த நிலையில் ஓதியதால் ஃபாத்திஹாவை மீண்டும் ஓத நினைத்தால் அது தவறில்லை. ஆனால், அது வீணான சந்தேகத்திற்கும் குழப்பத்திற்கும் வழி ஏற்படுத்தி இந்த பழக்கம் தொடர்ச்சியாக ஆகிவிட்டால் அது அவருக்கு நீங்காத ஒரு சந்தேக நோயாக ஆகிவிடும்.

3) **அவசியமான தேவை இன்றி அங்கும் இங்கும் திரும்பிப் பார்ப்பது**.

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ سَأَلْتُ رَسُولَ اللهِ ﷺ عَنِ الِالْتِفَاتِ فِي الصَّلَاةِ فَقَالَ هُوَ اخْتِلَاسٌ يَخْتَلِسُهُ الشَّيْطَانُ مِنْ صَلَاةِ الْعَبْدِ رواه البخاري برقم ٧٥١**

ஆயிஷா ﵂ கூறுகிறார்கள், நான் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் தொழுகையில் அங்கும் இங்கும் திரும்பிப் பார்ப்பது பற்றி கேட்டேன். அதற்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அது அடியானின் தொழுகையில் இருந்து ஷைத்தான் பறித்துக் கொள்கிற ஒரு செயலாகும்.[74]

ஏதாவது அவசியமான தேவைக்காக திரும்பிப் பார்த்தால் அது தவறு இல்லை. உதாரணமாக, தொழுகையில் குழப்பம் ஏற்பட்டால் இடது பக்கம் திரும்பி அவர் மூன்று முறை துப்பவேண்டும். குழப்பம் ஏற்படும் போது இவ்வாறு செய்ய வேண்டும் என நபி ﷺ அவர்கள் வழிகாட்டியுள்ளார்கள்.

**عَنْ أَبِي الْعَلَاءِ أَنَّ عُثْمَانَ بْنَ أَبِي الْعَاصِ ﵁ أَتَى النَّبِيَّ ﷺ فَقَالَ يَا رَسُولَ اللهِ إِنَّ الشَّيْطَانَ قَدْ حَالَ بَيْنِي وَبَيْنَ صَلَاتِي وَقِرَاءَتِي يَلْبِسُهَا عَلَيَّ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ ذَاكَ شَيْطَانٌ يُقَالُ لَهُ خَنْزَبٌ فَإِذَا أَحْسَسْتَهُ فَتَعَوَّذْ بِاللهِ مِنْهُ وَاتْفِلْ عَلَى يَسَارِكَ ثَلَاثًا قَالَ فَفَعَلْتُ ذٰلِكَ فَأَذْهَبَهُ اللهُ عَنِّي رواه مسلم برقم ٤٠٨٣**

உஸ்மான் இப்னு அபில் ஆஸ் ﵁ நபி ﷺ அவர்களிடம் வந்தார். அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக ஷைத்தான் எனது தொழுகையில் நான் குர்ஆன் ஓதும்போது குறுக்கிடுகின்றான். ஓதுவதில் எனக்கு குழப்பத்தை ஏற்படுத்துகிறான் என்று கூறினார். அதற்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அவ்வாறு செய்பவன் ஷைத்தான் ஆவான். அவனுக்கு கன்ஸப் என்று கூறப்படும். இந்த நிலை உனக்கு ஏற்பட்டால் அவனிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கேள்.

74. நூல்: புகாரி, எண்: 751

உனது இடது பக்கம் மூன்று முறை துப்பிக்கொள். உஸ்மான் இப்னு அபில் ஆஸ் ﵁ கூறினார்: நான் அவ்வாறே செய்தேன். அல்லாஹ் என்னை விட்டும் அதைப் போக்கி விட்டான்.[75]

மேலும், ஒருவர் தனது குழந்தையை அருகில் வைத்துவிட்டு தொழும்போது அந்த குழந்தையை கண்காணிப்பதற்காக திரும்பி பார்ப்பது கூடும். இவ்வகையான திரும்பி பார்த்தலில் முகம் மட்டும் திரும்பி இருக்க வேண்டும். அப்படி இல்லாமல் முழு உடலாலும் திரும்பிவிட்டால் அல்லது கிப்லாவை பின்னோக்கி விடுகின்ற அளவிற்கு திரும்பிவிட்டால் அவருடைய தொழுகை முற்றிலும் முறிந்துவிடும். ஆனால், ஒருவருக்கு உயிர் மீது பயம் ஏற்பட்டு, அதனால் இவ்வாறு திரும்பிப் பார்த்தால் அவருடைய தொழுகை முறிந்துவிடாது.

**4) தொழுகையில் கண்களை மூடிக்கொள்வது.**

இது சிலை வணங்கிகள் மற்றும் நெருப்பு வணங்கிகளின் செயல்களுக்கு ஒப்பான ஒன்றாகும். நாம் நமது வழிபாடுகளை இவர்களுக்கு ஒப்பாக செய்வதிலிருந்து தடுக்கப்பட்டிருக்கின்றோம்.

**5). ஸுஜூதுடைய நிலையில் இருக்கும்போது இரு குடங்கைகளையும் தரையில் விரித்து தரையோடு ஒட்டி வைப்பது.**

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ اعْتَدِلُوا فِي السُّجُودِ وَلَا يَبْسُطْ أَحَدُكُمْ ذِرَاعَيْهِ انْبِسَاطَ الْكَلْبِ رواه البخاري برقم ٨٢٢

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: நீங்கள் ஸுஜூதில் நிதானமாக (நேராக) இருங்கள்! உங்களில் ஒருவர் தனது இரு குடங்கைகளை (தரையில்) நாய் விரித்து வைப்பதுபோன்று விரித்து வைக்க வேண்டாம்.[76]

75. உஸ்மான் இப்னு அபில் ஆஸ் ﵁ நூல்: முஸ்லிம், எண்: 4083
76. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: புகாரி, எண்: 822

ஆகவே, தொழுபவர் தனது குடங்கைகளை தனது உடலை விட்டும் சற்று விலக்கி, தூரமாகவும் பூமியை விட்டு உயர்த்தியும் வைக்க வேண்டும். மிருகங்கள் செய்வது போன்று அவர் செய்யக் கூடாது.

**6). தொழுகையில் வீணான செயல்களில் அதிகம் ஈடுபடுவது.**

ஏனெனில், இது தொழுகையில் பேணவேண்டிய உள்ளச்சத்திற்கு முரணாக இருக்கின்றது.

**7). தொழும்போது ஒரு கையை அல்லது இரண்டு கைகளையும் இடுப்பில் வைப்பது.**

இது யூதர்களின் செயலாகும்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ نَهَى أَنْ يُصَلِّيَ الرَّجُلُ مُخْتَصِرًا رواه مسلم برقم ٥٤٥**

நபி ﷺ அவர்கள் ஒரு மனிதர் இடுப்பில் கைகட்டியவராக தொழுவதை தடுத்தார்கள்.[77]

**عَنْ عَائِشَةَ ﵂ كَانَتْ تَكْرَهُ أَنْ يَجْعَلَ يَدَهُ فِي خَاصِرَتِهِ وَتَقُولُ إِنَّ الْيَهُودَ تَفْعَلُهُ رواه البخاري برقم ٣٤٥٨**

ஒருவர் தனது கையை தனது இடுப்பில் வைப்பதை ஆயிஷா ﵂ அவர்கள் வெறுப்பவர்களாக இருந்தார்கள். இன்னும், யூதர்கள்தான் இவ்வாறு செய்வார்கள் என்று ஆயிஷா ﵂ அவர்கள் கூறுவார்கள்.[78]

**8). புஜங்களின் மீது ஆடைகளை தொங்க விட்டவராக, வாய் பொத்தியவராக தொழுவது.**

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ نَهَى عَنِ السَّدْلِ فِي الصَّلَاةِ وَأَنْ يُغَطِّيَ الرَّجُلُ فَاهُ رواه أبو داود برقم ٥٤٨**

---

77. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 545
78. நூல்: புகாரி, எண்: 3458

நிச்சயமாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தொழுகையில் ஆடையை தொங்க விடுவதை விட்டும் ஒருவர் தனது வாயை பொத்திக் கொள்வதை விட்டும் தடுத்தார்கள்.[79]

**9). தொழுகையில் எந்த ஒரு செயலையும் இமாம் செய்வதற்கு முன்னதாக செய்வது.**

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ أَمَا يَخْشَى أَحَدُكُمْ أَوْ لَا يَخْشَى أَحَدُكُمْ إِذَا رَفَعَ رَأْسَهُ قَبْلَ الْإِمَامِ أَنْ يَجْعَلَ اللهُ رَأْسَهُ رَأْسَ حِمَارٍ أَوْ يَجْعَلَ اللهُ صُورَتَهُ صُورَةَ حِمَارٍ رواه البخاري برقم ٦٩١

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் தனது தலையை இமாமுக்கு முன்பாக உயர்த்தும் போது அல்லாஹ் அவரது தலையை கழுதையின் தலையாக (அல்லது அவரின் உருவத்தை கழுதையின் உருவமாக) மாற்றிவிடுவான் என்பதை பயப்பட வேண்டாமா?[80]

**10) விரல்களை பிணைத்து வைப்பது.**

عَنْ كَعْبِ بْنِ عُجْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ إِذَا تَوَضَّأَ أَحَدُكُمْ فَأَحْسَنَ وُضُوءَهُ ثُمَّ خَرَجَ عَامِدًا إِلَى الْمَسْجِدِ فَلَا يُشَبِّكَنَّ بَيْنَ أَصَابِعِهِ فَإِنَّهُ فِي صَلَاةٍ رواه الترمذي برقم ٣٥٢

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் உளூ செய்கிறார், மிக அழகிய முறையில் தனது உளூவை செய்கிறார். பிறகு, மஸ்ஜிதை நோக்கி வருகிறார். அவர் தனது விரல்களை பிணைக்க வேண்டாம். ஏனெனில், நிச்சயமாக அவர் தொழுகையில்தான் இருக்கின்றார்.[81]

79. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: அபூ தாவூத், எண்: 548
80. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 691
81. அறிவிப்பாளர்: கஅப் இப்னு உஜ்ரா رضي الله عنه, நூல்: திர்மிதி, எண்: 352

தொழுகையில் இருக்கும் போதும் அல்லது தொழுகைக்காக எதிர்பார்த்திருக்கும் போதும் இவ்வாறு செய்வது வெறுக்கப்பட்டதாகும். தொழுது முடித்த பின்னர் இவ்வாறு செய்வது தவறல்ல.

**11) முடியையும் ஆடையையும் சுருட்டிக்கொண்டு தொழுவது.**

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﵁ قَالَ أُمِرَ النَّبِيُّ ﷺ أَنْ يَسْجُدَ عَلَى سَبْعَةِ أَعْظُمٍ وَلَا يَكُفَّ ثَوْبَهُ وَلَا شَعَرَهُ رواه البخاري برقم ٨١٥**

ஏழு எலும்புகள் மீது ஸஜ்தா செய்யும்படியும் தமது ஆடையையும் தமது முடியையும் சுருட்டிக்கொண்டு தொழவேண்டாம் என்றும் நபி ﷺ அவர்கள் பணிக்கப்பட்டார்கள்.[82]

**12). 13). உணவு தனக்கு முன்னால் இருக்கும்போது தொழுவது, அல்லது மலம் ஜலம் கழிக்க வேண்டிய தேவை இருந்தும் அடக்கிக்கொண்டு தொழுவது.**

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ لَا يُصَلَّ بِحَضْرَةِ الطَّعَامِ وَلَا وَهُوَ يُدَافِعُهُ الْأَخْبَثَانِ رواه ابو داود برقم ٨٢**

உணவுக்கு (வந்தவுடன் அதற்கு) முன்பாக தொழ வேண்டாம். மேலும் மலம், ஜலம் அவருக்கு முட்டிக்கொண்டு வரும்போது தொழ வேண்டாம் என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறியதை தான் செவியுற்றதாக ஆயிஷா ﵂ அவர்கள் கூறினார்கள்.[83]

ஏதாவது சரியான காரணம் இருந்தால் உணவுக்கு முன்பாக தொழுவது தவறல்ல. உதாரணமாக: உணவு மிக சூடாக இருக்கின்றது, அல்லது இவருக்கு பசி இல்லை, அல்லது இவர் நோன்பாளியாக இருக்கின்றார், அல்லது உணவின் மீது இவருக்கு நாட்டம் வரவில்லை. இது போன்ற சமயங்களில் உணவுக்கு முன்பாக தொழுவது மக்ரூஹ் ஆகாது.

---

82. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵁, நூல்: புகாரி, எண்: 815
83. நூல்: அபூ தாவூத், எண்: 82, முஸ்லிம் எண்: 560

மலம், ஜலத்தை அடக்குவது நோயை ஏற்படுத்தும்; தொழுபவரின் மன ஓர்மையை சிதைத்துவிடும்; உள்ளச்சத்தை கெடுத்துவிடும்.

**14). தொழும் போது வானத்தை நோக்கி பார்வையை உயர்த்துவது.**

**عَنْ جَابِرِ بْنِ سَمُرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ لَيَنْتَهِيَنَّ أَقْوَامٌ يَرْفَعُونَ أَبْصَارَهُمْ إِلَى السَّمَاءِ فِي الصَّلَاةِ أَوْ لَا تَرْجِعُ إِلَيْهِمْ رواه مسلم برقم ٤٢٩**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: தொழுகையில் தங்கள் பார்வைகளை வானத்தின் பக்கம் உயர்த்துகின்ற மக்கள் (அந்த செயலை விட்டும்) விலகி விடட்டும். அல்லது அவர்களின் பார்வைகள் அவர்களுக்கு மீண்டுவராது (-அப்படியே சொருகி நின்றுவிடும்).[84]

**ஒன்பதாவது சட்டவிளக்கம்**

## தொழுகையை விடுபவரின் சட்டம்

யார் தொழுகை கடமை இல்லை என்று மறுப்பாரோ அவர் காஃபிர் -நிராகரிப்பாளர், முர்தத் -மதம் மாறியவராக ஆகிவிடுவார். இவர் தனது இந்த செயலின் மூலமாக அல்லாஹ்வையும் அவனது தூதரையும் முஸ்லிம்களின் ஏகோபித்த முடிவையும் பொய்ப்பிக்கின்றார்.

ஒருவர் அலட்சியமாக, சோம்பேறியாக தொழுகைகளை அறவே எப்போதும் தொழாமல் இருந்தால் சரியான கூற்றின்படி இவரும் காஃபிர் ஆவார்.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَإِنْ تَابُوا وَأَقَامُوا الصَّلَاةَ وَآتَوُا الزَّكَاةَ فَإِخْوَانُكُمْ فِي الدِّينِ

84. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு சமுரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 429

(அல்லாஹ்விடம்) மன்னிப்புக்கோரி, (அவர்கள் ஷிர்க்கை விட்டு விலகி,) தொழுகையை நிலைநிறுத்தி, ஸகாத்தை கொடுத்து வந்தால் அவர்கள் உங்களுக்கு மார்க்கத்தில் சகோதரர்கள் ஆவார்கள். (அல்குர்ஆன் 9:11)

**கருத்து:** தொழுகையை நிறைவேற்றாதவருக்கும் நமக்கும் இடையில் இஸ்லாமிய சகோதரத்துவம் இல்லை. தொழுகையை நிறைவேற்றாத அவர்கள் முஸ்லிம்களாக இருக்க மாட்டார்கள்.

**عَنْ بُرَيْدَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ الْعَهْدُ الَّذِي بَيْنَنَا وَبَيْنَهُمْ الصَّلَاةُ فَمَنْ تَرَكَهَا فَقَدْ كَفَرَ رواه الترمذي برقم ٢٥٤٥**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: நமக்கும் அவர்களுக்கும் மத்தியில் இருக்கின்ற கட்டளை தொழுகைதான். அதை யார் விடுவாரோ அவர் நிராகரித்து விட்டார்.[85]

**عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ ﵁ قَالَ سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ بَيْنَ الرَّجُلِ وَبَيْنَ الشِّرْكِ وَالْكُفْرِ تَرْكُ الصَّلَاةِ رواه مسلم برقم ٨٢**

மனிதர்களுக்கும் ஷிர்க் - இணைவைத்தலுக்கும் குஃப்ர் - இறை நிராகரிப்பிற்கும் இடையில் தொழுகையை விடுவதுதில்தான் இருக்கின்றது என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறியதை தான் செவியுற்றதாக ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ﵁ அவர்கள் கூறுகிறார்கள்.[86]

ஒருவர் சில சமயம் தொழுகிறார். சில சமயம் விட்டு விடுகிறார். சில நேரத் தொழுகைகளை நிறைவேற்றுகிறார். சில நேரத்

85. அறிவிப்பாளர்: புரைதா ﵁, நூல்: திர்மிதி, எண்: 2545
86. நூல்; முஸ்லிம், எண்: 82

தொழுகைகளை அலட்சியம் செய்கிறார். இப்படிப்பட்டவர் காஃபிராக ஆகாவிட்டாலும் பெரும் பாவியாக கருதப்படுவார்.

ஹதீஸில் கூறப்பட்டுள்ள தொழுகையை விடுவது என்பது மொத்த தொழுகைகளையும் விடுவதைக் குறிக்கும். சில தொழுகைகளை விடுவதைக் குறிக்காது. உறுதியான ஆதாரம் இல்லாமல் நாம் அவரை இஸ்லாமை விட்டு வெளியேற்றிவிட முடியாது. ஆகவே, அவர் முஸ்லிமாகத்தான் இருப்பார். ஆனால், பெரும் பாவத்தை செய்தவராக ஆகிவிடுவார்.

--------------------

ஐந்தாவது பாடம்

# الباب الخامس في صلاة التطوع

# நஃபில் தொழுகைகள்

இதில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்டவிளக்கம்**

## நஃபில் தொழுகைகளின் தத்துவமும் சிறப்பும்

நஃபிலான - உபரியான தொழுகைகள் வழங்கப்பட்டதில் ஏராளமான தத்துவங்கள் உள்ளன. இன்னும் உபரியான தொழுகைகளை பேணுபவர்களுக்கு அதிகமான சிறப்புகளும் நற்கூலிகளும் உள்ளன.

கட்டாயக் கடமை இல்லாத தொழுகைக்கு உபரியான தொழுகை என்று கூறப்படும்.

**1). நஃபில் தொழுகையின் சிறப்பு.**

அல்லாஹ்வின் பாதையில் போர் செய்வது இன்னும் கல்வி கற்பதற்கு அடுத்ததாக உபரியான தொழுகை மிக சிறப்புடையதாகும்.

நபி ﷺ அவர்கள் அதிகம் உபரியான தொழுகைகளை தொழுபவர்களாக இருந்தார்கள். உபரியான தொழுகைகளின் மூலம் அல்லாஹ்வின் நெருக்கத்தை அதிகம் தேடுபவர்களாக இருந்தார்கள்.

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ اللهَ قَالَ مَنْ عَادَى لِي وَلِيًّا فَقَدْ آذَنْتُهُ بِالْحَرْبِ وَمَا تَقَرَّبَ إِلَيَّ عَبْدِي بِشَيْءٍ أَحَبَّ إِلَيَّ مِمَّا افْتَرَضْتُ عَلَيْهِ وَمَا يَزَالُ عَبْدِي يَتَقَرَّبُ إِلَيَّ بِالنَّوَافِلِ حَتَّى أُحِبَّهُ رواه البخاري برقم ٦٥٠٢

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் எனது நேசரை பகைப்பாரோ நான் அவருக்கு எதிராக போரை அறிவிக்கிறேன். எனது அடியான் அவன் மீது நான் கடமையாக்கியதை விட வேறு எதைக்கொண்டும் அவன் என்னை நெருங்க முடியாது. உபரியான தொழுகைகள் மூலமாக அடியான் என்னை அதிகம் நெருங்கி வருகிறான், இறுதியாக அவனை நான் நேசிக்கின்றேன் என்று நிச்சயமாக அல்லாஹ் கூறுகின்றான்.[87]

**2). மார்க்கம் உபரியான தொழுகைகளை கற்றுக் கொடுத்திருப்பதில் உள்ள தத்துவம்.**

தன் அடியார்கள் மீது கருணை புரிவதற்காக அல்லாஹ் உபரியான தொழுகைகளை மார்க்கமாக்கினான். ஆகவே, ஒவ்வொரு ஃபர்ழான தொழுகைக்கும் அது போன்ற ஓர் உபரியான தொழுகையை அல்லாஹ் ஆக்கி இருக்கின்றான். இதன் மூலம் முஃமின் - இறை நம்பிக்கையாளருடைய ஈமான் - நம்பிக்கை அதிகரிக்கும்; அவருடைய மறுமை பதவிகள் அல்லாஹ்விடம் உயர்வுபெறும்; ஃபர்ழான தொழுகைகளின் குறைகள் நிவர்த்தி செய்யப்படும். அடியான் ஃபர்ழான தொழுகையை தொழும்போது அதில் குறைகள் நிகழ்ந்து விடுகின்றன. அந்த குறைகள் இந்த உபரியான தொழுகைகளின் மூலம் நிவர்த்தி செய்யப்படுகின்றன.

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ إِنَّ أَوَّلَ مَا يُحَاسَبُ بِهِ الْعَبْدُ يَوْمَ الْقِيَامَةِ صَلَاتُهُ فَإِنْ وُجِدَتْ تَامَّةً كُتِبَتْ تَامَّةً وَإِنْ كَانَ انْتُقِصَ مِنْهَا شَيْءٌ

87. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: புகாரி, எண்: 6502

قَالَ انْظُرُوا هَلْ تَجِدُونَ لَهُ مِنْ تَطَوُّعٍ يُكَمِّلُ لَهُ مَا ضَيَّعَ مِنْ فَرِيضَةٍ مِنْ تَطَوُّعِهِ ثُمَّ سَائِرُ الْأَعْمَالِ تَجْرِي عَلَى حَسَبِ ذٰلِكَ رواه النسائي برقم ٤٦٢

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: மறுமை நாளில் அடியான் முதலாவதாக அவனுடைய தொழுகையைக் கொண்டுதான் விசாரிக்கப்படுவான். அது பூரணமாக இருந்தால் பூரணமாக அது பதியப்படும். அதில் ஏதாவது குறை இருந்தால், அவனுக்கு ஏதாவது உபரியான தொழுகை இருக்கின்றதா பாருங்கள் என்று அல்லாஹ் கூறுவான். அந்த உபரியான தொழுகையில் இருந்து ஃபர்ழான தொழுகையில் அவன் எதை வீணாக்கினானோ அதை அல்லாஹ் அவனுக்கு பூரணமாக்குவான். பிறகு, மற்ற எல்லா அமல்களும் இந்த கணக்கின்படியே வரும்.[88]

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## நஃபில் தொழுகையின் வகைகள்

**முதலாவது வகை**

குறிப்பிட்ட நேரங்களில் தொழ வேண்டிய குறிப்பான தொழுகைகள். இந்த தொழுகைகளுக்கு **نوافل مقيدة** - "நவாஃபில் முகய்யதா" வரையறுக்கப்பட்ட உபரியான தொழுகைகள் என்று கூறப்படும்.

இந்த தொழுகைகளில் சில ஃபர்ழான தொழுகைகளை தொடர்ந்து (அவற்றுக்கு முன், பின்) செய்யப்படும். உதாரணமாக: ஃபர்ழ் தொழுகையின் முன், பின் சுன்னத் தொழுகைகளைப் போன்று. சில அவ்வாறு இல்லாமல் (நேரத்தை கவனித்து செய்யப்படுவதாக) இருக்கும். உதாரணமாக: வித்ர் தொழுகை, ழுஹா தொழுகை, சூரிய, சந்திர கிரகண தொழுகைகள் போன்று.

**இரண்டாவது வகை**

நேரம் குறிப்பிடப்படாத, பொதுவான தொழுகைகள். இந்த வகை

88. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: நசாயி, எண்: 462

தொழுகைக்கு **نوافل مطلقة** - "நவாஃபில் முத்லக்கா" பொதுவான நஃபில் தொழுகைகள் என்று கூறப்படும்.

முதல் வகை உபரியான தொழுகைகளில் சில மிக முக்கியமானதாக, அவசியமானதாக கருதப்படுகின்றது.

வரையறுக்கப்பட்ட உபரியான தொழுகைகளில் மிக முக்கியமானதும் அவசியமானதும் எதுவென்றால், முதலாவதாக, **صلاة الكسوف** - சூரிய கிரகண தொழுகை, **صلاة الخسوف** - சந்திர கிரகண தொழுகை. பிறகு, **صلاة الوتر** - வித்ர் தொழுகை. பிறகு, **صلاة الاستسقاء** - இஸ்திஸ்க்கா - மழை வேண்டி தொழுவது. பிறகு, **قيام الليل** - ரமழானின் இரவுத் தொழுகை.

இரண்டாவது வகை தொழுகை இரவில் தொழுகின்ற தொழுகையாகும். அவ்வாறே பகலில் தடுக்கப்பட்ட நேரத்தைத் தவிர மற்ற நேரங்களில் தொழப்படுகின்ற நஃபில் தொழுகையாகும்.

பகலில் தொழப்படுகின்ற நஃபில் தொழுகையை விட இரவில் தொழப்படுகின்ற நஃபில் தொழுகை மிக மேன்மையானதாகும்.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## ஜமாஅத்துடன் தொழப்படுகின்ற நஃபில் தொழுகைகள்

ஜமாஅத்துடன் (கூட்டாக) தொழுவது சுன்னத்தாக ஆக்கப்பட்ட நஃபில் தொழுகைகளாவன, ரமழானின் இரவுத்தொழுகை, மழைத் தொழுகை, கிரகண தொழுகை ஆகும்.

**நான்காவது சட்டவிளக்கம்**

## தொடர்ந்து தொழவேண்டிய நஃபில்கள்

தொடர்ந்து வழமையாக தொழவேண்டிய நஃபில் தொழுகைகள் (**نوافل راتبة** - நவாஃபில் ராதிபா) உடைய எண்ணிக்கை.

அதாவது, ஃபர்ழான தொழுகைகளுக்கு முன், பின் வழமையாக, தொடர்ந்து, தொழப்படுகின்ற தொழுகைகளை "நவாஃபில் ராதிபா" என்று கூறப்படும்.

இந்த தொழுகையினால் நமக்கு கிடைக்கின்ற பலனாவது, ஃபர்ழ் தொழுகையில் ஏற்படுகின்ற குறைகளை இவை நிவர்த்தி செய்து அவற்றை பூரணமாக ஆக்கிவிடுகின்றன. இதைப்பற்றிய விளக்கம் முன்னர் கூறப்பட்டுள்ளது.

இந்த நஃபில் தொழுகைகளின் எண்ணிக்கை பின்வருமாறு.

**عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنهما قَالَ حَفِظْتُ عَنْ رَسُولِ اللهِ ﷺ عَشْرَ رَكَعَاتٍ كَانَ يُصَلِّيهَا بِاللَّيْلِ وَالنَّهَارِ رَكْعَتَيْنِ قَبْلَ الظُّهْرِ وَرَكْعَتَيْنِ بَعْدَهَا وَرَكْعَتَيْنِ بَعْدَ الْمَغْرِبِ وَرَكْعَتَيْنِ بَعْدَ الْعِشَاءِ الْآخِرَةِ قَالَ وَحَدَّثَتْنِي حَفْصَةُ أَنَّهُ كَانَ يُصَلِّي قَبْلَ الْفَجْرِ رَكْعَتَيْنِ رواه الترمذي برقم ٣٩٨**

இப்னு உமர் رضي الله عنهما கூறுகிறார்கள்: நான் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடமிருந்து பத்து ரக்அத்துகளை மனனம் செய்தேன். அவர்கள் அவற்றை இரவிலும் பகலிலும் தொழுபவர்களாக இருந்தார்கள். ளுஹ்ருக்கு முன்பு இரண்டு ரக்அத்துகள், அதற்கு பின்பு இரண்டு ரக்அத்துகள், மக்ரிபுக்கு பின்பு இரண்டு ரக்அத்துகள், இஷாவிற்கு பின்பு இரண்டு ரக்அத்துகள். மேலும், நிச்சயமாக நபி ﷺ அவர்கள் ஃபஜ்ருக்கு முன்பு இரண்டு ரக்அத்து தொழுபவர்களாக இருந்தார்கள் என்று தமக்கு ஹஃப்ஸா رضي الله عنها அறிவித்ததாக இப்னு உமர் அவர்கள் கூறுகிறார்கள்.[89]

மற்றொரு நபிமொழியில், இந்த தொழுகைகளின் எண்ணிக்கை பன்னிரெண்டு என்பதாகவும் வந்துள்ளது. ஆகவே, முஸ்லிம் பத்து அல்லது பன்னிரெண்டு ரக்அத்துகளை தொடர்ச்சியாக தொழுது வரவேண்டும்.

---

89. நூல்: திர்மிதி, எண்: 398

عَنْ أُمِّ حَبِيبَةَ رضي الله عنها زَوْجِ النَّبِيِّ ﷺ أَنَّهَا قَالَتْ سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ مَا مِنْ عَبْدٍ مُسْلِمٍ يُصَلِّي لِلّٰهِ كُلَّ يَوْمٍ ثِنْتَيْ عَشْرَةَ رَكْعَةً تَطَوُّعًا غَيْرَ فَرِيضَةٍ إِلَّا بَنَى اللهُ لَهُ بَيْتًا فِي الْجَنَّةِ رواه مسلم برقم ٧٢٨

நபி ﷺ அவர்களின் மனைவி உம்மு ஹபீபா رضي الله عنها கூறுகிறார்கள்: எந்த ஒரு முஸ்லிமான அடியார் அல்லாஹ்விற்காக ஒவ்வொரு நாளும் கடமையல்லாத உபரியான பன்னிரெண்டு ரக்அத்துகளை தொழுவாரோ அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தில் ஒரு வீட்டை கண்டிப்பாக கட்டுவான் என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறியதை நான் செவியுற்றேன்.[90]

عَنْ عَائِشَةَ رضي الله عنها قَالَتْ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ ثَابَرَ عَلَى ثِنْتَيْ عَشْرَةَ رَكْعَةً مِنْ السُّنَّةِ بُنِيَ لَهُ بَيْتٌ فِي الْجَنَّةِ أَرْبَعٍ قَبْلَ الظُّهْرِ وَرَكْعَتَيْنِ بَعْدَ الظُّهْرِ وَرَكْعَتَيْنِ بَعْدَ الْمَغْرِبِ وَرَكْعَتَيْنِ بَعْدَ الْعِشَاءِ وَرَكْعَتَيْنِ قَبْلَ الْفَجْرِ رواه ابن ماجة برقم ١١٣٠

யார் சுன்னத்தான பன்னிரெண்டு ரக்அத்துகளை தொடர்ந்து தொழுது வருவாரோ அவருக்கு சொர்க்கத்தில் ஒரு வீடு கட்டப்படும். அவை ளுஹ்ருக்கு முன்பு நான்கு, ளுஹ்ருக்கு பின்பு இரண்டு, மக்ரிபுக்கு பின்பு இரண்டு, இஷாவிற்கு பின்பு இரண்டு, ஃபஜ்ருக்கு முன்பு இரண்டு என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறியதாக ஆயிஷா رضي الله عنها கூறினார்கள்.[91]

عَنْ عَائِشَةَ رضي الله عنها أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ لَا يَدَعُ أَرْبَعًا قَبْلَ الظُّهْرِ وَرَكْعَتَيْنِ قَبْلَ الْغَدَاةِ رواه البخاري برقم ١١٨٢

நிச்சயமாக நபி رضي الله عنها அவர்கள் ளுஹ்ருக்கு முன்புள்ள நான்கு

90. நூல்: முஸ்லிம், எண்: 728
91. நூல்: இப்னு மாஜா, எண்: 1130

ரக்அத்துகளையும் ஃபஜ்ருக்கு முன்புள்ள இரண்டு ரக்அத்துகளையும் விடவே மாட்டார்கள் என்று ஆயிஷா ؓ அவர்கள் கூறுகிறார்கள்.[92]

இந்த ரவாதிப் - தொடர்ந்து தொழப்படுகின்ற நஃபில் தொழுகைகளில் மிகவும் வலியுறுத்தப்பட்டது ஃபஜ்ருடைய முன் சுன்னத்தாகும்.

عَنْ عَائِشَةَ ؓ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ رَكْعَتَا الْفَجْرِ خَيْرٌ مِنْ الدُّنْيَا وَمَا فِيهَا رواه مسلم برقم ٧٢٥

நபி ﷺ கூறினார்கள்: ஃபஜ்ருடைய இரண்டு ரக்அத்து சுன்னத் (தொழுகை)கள் உலகம் இன்னும் அதிலுள்ளவற்றையும்விட மிகச் சிறந்ததாகும்.[93]

عَنْ عَائِشَةَ ؓ قَالَتْ صَلَّى النَّبِيُّ ﷺ الْعِشَاءَ ثُمَّ صَلَّى ثَمَانِيَ رَكَعَاتٍ وَرَكْعَتَيْنِ جَالِسًا وَرَكْعَتَيْنِ بَيْنَ النِّدَاءَيْنِ وَلَمْ يَكُنْ يَدَعْهُمَا أَبَدًا رواه البخاري برقم ١١٥٩

நபி ﷺ அவர்கள் இஷா தொழுதார்கள். பிறகு, எட்டு ரக்அத்துகள் தொழுதார்கள். இன்னும் இரண்டு ரக்அத்துகள் உட்கார்ந்தவர்களாக தொழுதார்கள். இன்னும் (ஃபஜ்ருடைய) அதானுக்கும் இகாமத்துக்கும் இடையில் இரண்டு ரக்அத்துகள் தொழுதார்கள். இவற்றை (இந்த இரண்டு ரக்அத்துகளை) ஒருபோதும் அவர்கள் விடவே மாட்டார்கள்.[94]

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## வித்ர் தொழுகையின் சட்டம், சிறப்பு மற்றும் நேரம்

**வித்ரு தொழுகையின் சட்டம்:** வித்ர் தொழுகை மிக வலியுறுத்தி

92. நூல்: புகாரி, எண்: 1182
93. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: முஸ்லிம், எண்: 725
94. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: புகாரி, எண்: 1159

கூறப்பட்ட சுன்னா ஆகும். இதை தொழுவதற்கு நபி ﷺ அவர்கள் ஆர்வமூட்டினார்கள்.

**عَنْ عَلِيٍّ رضي الله عنه قَالَ الْوِتْرُ لَيْسَ بِحَتْمٍ كَصَلَاتِكُمْ الْمَكْتُوبَةِ وَلَكِنْ سَنَّ رَسُولُ اللّٰهِ ﷺ وَقَالَ إِنَّ اللّٰهَ وِتْرٌ يُحِبُّ الْوِتْرَ فَأَوْتِرُوا يَا أَهْلَ الْقُرْآنِ رواه الترمذي برقم ٤١٥**

அலி رضي الله عنه கூறினார்கள்: உங்கள் கட்டாய கடமையான (ஃபர்ழ்) தொழுகையைப் போன்று வித்ரு தொழுகை கட்டாயமானது அல்ல. என்றாலும், ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் (இதை) சுன்னத்தாக வழிமுறை படுத்தினார்கள். **நிச்சயமாக அல்லாஹ் ஒருவன் அவன் (ஒருமையில் உள்ள) வித்ரு தொழுகையை விரும்புகின்றான்**. ஆகவே, குர்ஆனை உடையவர்களே! நீங்கள் வித்ர் தொழுங்கள்! என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[95]

**عَنْ عَلِيٍّ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ يَا أَهْلَ الْقُرْآنِ أَوْتِرُوا فَإِنَّ اللّٰهَ وِتْرٌ يُحِبُّ الْوِتْرَ رواه ابو داود برقم ١٢٠٧**

அலி رضي الله عنه கூறினார்கள்: குர்ஆன் உடையவர்களே! நீங்கள் வித்ர் தொழுங்கள்! ஏனெனில், நிச்சயமாக அல்லாஹ் ஒருவன் (தனித்தவன்) ஆவான். அவன் வித்ர் (தொழுகை) ஐ விரும்புகிறான்.[96]

### வித்ர் தொழுகையின் நேரம்:

இஷா தொழுத பிறகு, ஃபஜ்ர் தொழுவதற்கு முன்பு வரை வித்ருடைய தொழுகையின் நேரம் இருக்கின்றது. இது அறிஞர்களின் ஏகோபித்த கருத்தாகும்.

**عَنْ خَارِجَةَ بْنِ حُذَافَةَ رضي الله عنه أَنَّهُ قَالَ خَرَجَ عَلَيْنَا رَسُولُ اللّٰهِ ﷺ فَقَالَ إِنَّ**

95. நூல்: திர்மிதி, எண்: 415, (புகாரி எண்: 6410)
96. நூல்: அபூ தாவூத், எண்: 1207

اللهَ أَمَدَّكُمْ بِصَلَاةٍ هِيَ خَيْرٌ لَكُمْ مِنْ حُمْرِ النَّعَمِ الْوِتْرُ جَعَلَهُ اللهُ لَكُمْ فِيمَا بَيْنَ صَلَاةِ الْعِشَاءِ إِلَى أَنْ يَطْلُعَ الْفَجْرُ رواه الترمذي برقم ٤١٤

எங்களிடம் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் வந்தார்கள். அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு ஒரு தொழுகையைக் கொண்டு உதவி புரிந்துள்ளான். அது உங்களுக்கு சிவப்பு ஒட்டகைகளை விட மிகச் சிறந்ததாகும். அதுதான் வித்ர் தொழுகையாகும். இஷா தொழுகைக்கும் ஃபஜ்ர் உதயமாகின்ற வரை உள்ள நேரத்திற்கும் இடையில் அல்லாஹ் அதை உங்களுக்கு ஆக்கி இருக்கின்றான்.[97]

**ஃபஜ்ருடைய நேரம் வந்துவிட்டால் வித்ர் தொழ முடியாது.**

عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنهما أَنَّ رَجُلًا سَأَلَ رَسُولَ اللهِ ﷺ عَنْ صَلاَةِ اللَّيْلِ فَقَالَ رَسُولُ اللهِ عَلَيْهِ السَّلاَمُ صَلاَةُ اللَّيْلِ مَثْنَى مَثْنَى فَإِذَا خَشِيَ أَحَدُكُمُ الصُّبْحَ صَلَّى رَكْعَةً وَاحِدَةً تُوتِرُ لَهُ مَا قَدْ صَلَّى رواه البخاري برقم ٩٩٠

ஒரு மனிதர் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் இரவுத் தொழுகையைப் பற்றி கேட்டார். அதற்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: இரவுத்தொழுகை இரண்டு இரண்டு ரக்அத்துகளாக இருக்கின்றன. உங்களில் ஒருவர் ஸுப்ஹ் உடைய நேரம் வந்துவிடும் என்று பயந்தால் அவர் ஒரே ஒரு ரக்அத் (இறுதியாக) தொழுது விடட்டும். அது அவர் தொழுத (இரவுத்)தொழுகைக்கு “வித்ர்” ஆக ஆகிவிடும்.[98]

عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنهما كَانَ يَقُولُ مَنْ صَلَّى مِنَ اللَّيْلِ فَلْيَجْعَلْ آخِرَ صَلَاتِهِ وِتْرًا قَبْلَ الصُّبْحِ كَذٰلِكَ كَانَ رَسُولُ اللهِ ﷺ يَأْمُرُهُمْ رواه مسلم برقم ٧٥١

யார் இரவில் தொழுவாரோ அவர் தனது தொழுகையின் இறுதியாக

97. அறிவிப்பாளர்: காரிஜா இப்னு ஹுதாஃபா ؓ நூல்: திர்மிதி, எண்: 414
98. அறிவிப்பாளர்: இப்னு உமர் ؓ, நூல்: புகாரி, எண்: 990

ஸுப்ஹ் நேரம் வருவதற்கு முன்பு வித்ர் தொழுகையை ஆக்கட்டும். இவ்வாறுதான் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தோழர்களுக்கு ஏவுவார்கள் என்று இப்னு உமர் ؓ கூறுவார்கள்.[99]

ஆகவே, ஃப்ஜ்ருடைய நேரம் வந்துவிட்டால் வித்ர் உடைய நேரம் முடிந்து விடுகிறது என்பதற்கு இந்த நபிமொழிகள் ஆதாரமாக இருக்கின்றன.

வித்ர் தொழுகையை இரவின் முதல் பகுதியில் தொழுவதை விட இரவின் கடைசிப் பகுதியில் தொழுவது மிகச் சிறந்ததாகும். ஆனால், இரவின் இறுதிப் பகுதியில் எழ முடியாது என்று பயந்தால் இரவின் முதல் பகுதில் தொழுதுவிட வேண்டும்.

**عَنْ جَابِرٍ ؓ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ خَافَ أَنْ لَا يَقُومَ مِنْ آخِرِ اللَّيْلِ فَلْيُوتِرْ أَوَّلَهُ وَمَنْ طَمِعَ أَنْ يَقُومَ آخِرَهُ فَلْيُوتِرْ آخِرَ اللَّيْلِ فَإِنَّ صَلَاةَ آخِرِ اللَّيْلِ مَشْهُودَةٌ وَذَلِكَ أَفْضَلُ رواه مسلم برقم ٧٥٥**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் இரவின் இறுதிப் பகுதியில் எழமாட்டேன் என்று பயப்படுவாரோ அவர் அதன் முதல் பகுதியில் வித்ர் தொழுதுவிடட்டும். யார் அதன் இறுதியில் எழுவேன் என்று ஆசைப்படுகிறாரோ அவர் இரவின் இறுதியில் வித்ர் தொழட்டும். ஏனெனில், இரவின் இறுதித் தொழுகை வானவர்கள் கலந்துகொள்கின்ற தொழுகையாகும். அது (-அந்த நேரம்) மிக சிறப்பானதாகும்.[100]

**ஆறாவது சட்டவிளக்கம்**

## வித்ர் தொழுகையின் முறை, மற்றும் அதன் ரக்அத்துகளின் எண்ணிக்கை

வித்ர் தொழுகையின் குறைந்தபட்ச எண்ணிக்கை ஒரு ரக்அத்தாகும்.

---

99. நூல்: முஸ்லிம், எண்: 751
100. அறிவிப்பாளர்: ஜாபிர் ؓ, நூல்: முஸ்லிம், எண்: 755

**عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنهما قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ الْوِتْرُ رَكْعَةٌ مِنْ آخِرِ اللَّيْلِ رواه مسلم برقم ٧٥٢**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: வித்ர் தொழுகை இரவின் இறுதியில் நிறைவேற்றவேண்டிய ஒரு ரக்அத்தாகும்.[101]

**عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنهما أَنَّ رَجُلًا سَأَلَ رَسُولَ اللّٰهِ ﷺ عَنْ صَلَاةِ اللَّيْلِ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ صَلَاةُ اللَّيْلِ مَثْنَى مَثْنَى فَإِذَا خَشِيَ أَحَدُكُمْ الصُّبْحَ صَلَّى رَكْعَةً وَاحِدَةً تُوتِرُ لَهُ مَا قَدْ صَلَّى رواه مسلم برقم ٧٤٩**

ஒரு மனிதர் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் இரவுத் தொழுகையைப் பற்றி கேட்டார். அதற்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: இரவுத் தொழுகை இரண்டு இரண்டு ரக்அத்துகளாக இருக்கின்றன. உங்களில் ஒருவர் ஸுப்ஹ் உடைய நேரம் வந்துவிடும் என்று பயந்தால் அவர் ஒரே ஒரு ரக்அத் (இறுதியாக) தொழுது விடட்டும். அது அவர் தொழுத (இரவுத்) தொழுகைக்கு "வித்ர்" ஆக ஆகிவிடும்.[102]

**மூன்று ரக்அத்துகளைக் கொண்டும் வித்ர் தொழுவது கூடும்.**

**عَنْ أَبِي سَلَمَةَ بْنِ عَبْدِ الرَّحْمٰنِ رضي الله عنه أَنَّهُ أَخْبَرَهُ أَنَّهُ سَأَلَ عَائِشَةَ رضي الله عنها كَيْفَ كَانَتْ صَلَاةُ رَسُولِ اللّٰهِ ﷺ فِي رَمَضَانَ فَقَالَتْ مَا كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ يَزِيدُ فِي رَمَضَانَ وَلَا فِي غَيْرِهِ عَلَى إِحْدَى عَشْرَةَ رَكْعَةً يُصَلِّي أَرْبَعًا فَلَا تَسَلْ عَنْ حُسْنِهِنَّ وَطُولِهِنَّ ثُمَّ يُصَلِّي أَرْبَعًا فَلَا تَسَلْ عَنْ حُسْنِهِنَّ وَطُولِهِنَّ ثُمَّ يُصَلِّي ثَلَاثًا قَالَتْ عَائِشَةُ فَقُلْتُ يَا رَسُولَ اللّٰهِ أَتَنَامُ قَبْلَ أَنْ تُوتِرَ فَقَالَ يَا عَائِشَةُ إِنَّ عَيْنَيَّ تَنَامَانِ وَلَا يَنَامُ قَلْبِي رواه البخاري برقم ٣٥٦٩**

---

101. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنهما, நூல்: முஸ்லிம், எண்: 752
102. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنهما, நூல்: முஸ்லிம், எண்: 749

அபூ சலமா இப்னு அப்துர் ரஹ்மான் ﵁ அவர்கள் கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களின் தொழுகை ரமழானில் எப்படி இருந்தது? என்று ஆயிஷா ﵂ அவர்களிடம் நான் கேட்டேன். அதற்கு அவர்கள் கூறினார்கள்: ரமழானிலும் சரி, அது அல்லாத மற்ற மாதங்களிலும் சரி, ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் பதினோரு ரக்அத்துகளுக்கு மேலாக அதிகப்படுத்த மாட்டார்கள். நான்கு ரக்அத்துகள் தொழுவார்கள். அதன் அழகைப் பற்றியும் அதன் நீளத்தைப் பற்றியும் நீர் கேட்காதே! பிறகு, நான்கு ரக்அத்துகள் தொழுவார்கள். அதன் அழகைப் பற்றியும் அதன் நீளத்தைப் பற்றியும் நீர் கேட்காதீர்![103] பிறகு, மூன்று ரக்அத்துகள் தொழுவார்கள். தொடர்ந்து ஆயிஷா ﵂ அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் வித்ர் தொழுவதற்கு முன்பு தூங்குவீர்களா? என்று நான் கூறினேன். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: ஆயிஷாவே! என் இரு கண்களும் தூங்கும். (ஆனால்,) எனது உள்ளம் தூங்காது.[104]

இந்த மூன்று ரக்அத்துகளை இரண்டு ஸலாமைக் கொண்டும் தொழுவது கூடும். அதாவது, இரண்டு ரக்அத்துகள் தொழுது ஸலாம் கொடுத்து விட்டு, பிறகு ஒரு ரக்அத்து தொழுது ஸலாம் கொடுக்க வேண்டும்.

**وَعَنْ نَافِعٍ ﵁ أَنَّ عَبْدَ اللهِ بْنَ عُمَرَ كَانَ يُسَلِّمُ بَيْنَ الرَّكْعَةِ وَالرَّكْعَتَيْنِ فِي الْوِتْرِ حَتّٰى يَأْمُرَ بِبَعْضِ حَاجَتِهِ رواه البخاري برقم ٩٩١**

நாஃபிஃ ﵁ கூறுகிறார்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﵁ அவர்கள் வித்ர் தொழுகையில் இரண்டு ரக்அத்துகளுக்கும் ஒரு ரக்அத்துக்கும் இடையில் ஸலாம் கொடுப்பவர்களாக இருந்தார்கள். அப்போது தனது சில தேவையை செய்யும்படி (பணியாளர்களுக்கு) ஏவுவார்கள்.[105]

103. அதாவது, அந்தளவு மிக அழகாகவும் மிக நீண்ட ரகஅத்துகளாகவும் தொழுவார்கள்.
104. நூல்: புகாரி, எண்: 3569
105. நூல்: புகாரி, எண்: 991

عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ كَانَ رَسُولُ اللهِ ﷺ يُوْتِرُ بِثَلَاثَ لَا يَقْعُدُ إِلَّا فِي آخِرِهِنَّ رواه البيهقي في السنن الكبرى

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் மூன்று ரக்அத்துகள் வித்ர் தொழுபவர்களாக இருந்தார்கள். அவற்றின் இறுதியில் தவிர (நடுவில்) அவர்கள் உட்கார மாட்டார்கள்.[106]

வித்ர் தொழுகையை மூன்று ரக்அத்துகளாக தொழும்போது மக்ரிபு தொழுகையைப் போன்று ஒரே ஒரு ஸலாமைக் கொண்டும் இரண்டாவது ரக்அத்தில் உட்கார்ந்தும் தொழுவது கூடாது. அவ்வாறு தொழுவதை நபி ﷺ அவர்கள் தடுத்துள்ளார்கள்.

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا تُوْتِرُوا بِثَلَاثٍ تَشَبَّهُوا بِصَلَاةِ الْمَغْرِبِ أَوْتِرُوا بِسَبْعٍ أَوْ بِخَمْسٍ رواه البيهقي في السنن الكبرى

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: மக்ரிபு தொழுகைக்கு ஒப்பாக மூன்று ரக்அத்துகள் வித்ர் தொழாதீர்கள். ஏழு ரக்அத் வித்ர் தொழுங்கள்! அல்லது ஐந்து ரக்அத்துகள் வித்ர் தொழுங்கள்![107]

மேலும், மூன்று ரக்அத்துகளுடைய வித்ரு தொழுகையில் இரண்டாவது ரக்அத்தில் அமராமல் இறுதி ரக்அத்தில் மட்டும் அமர்ந்து மூன்று ரக்அத்துகள் வித்ர் தொழுவதைப் போன்று இறுதி ரக்அத்தில் மட்டும் அமர்ந்து ஏழு அல்லது ஐந்து ரக்அத்துகள் வித்ர் தொழுவதும் நபிவழியாகும்.

عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ كَانَ رَسُولُ اللهِ ﷺ يُصَلِّي مِنْ اللَّيْلِ ثَلَاثَ عَشْرَةَ رَكْعَةً يُوتِرُ مِنْ ذَٰلِكَ بِخَمْسٍ لَا يَجْلِسُ فِي شَيْءٍ إِلَّا فِي آخِرِهَا رواه مسلم برقم ٧٣٧

106. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்; சுனன் குப்ரா - பைஹக்கீ.

107. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: சுனன் குப்ரா - பைஹக்கி.

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இரவில் பதிமூன்று ரக்அத்துகள் தொழுவார்கள். அவற்றில் ஐந்து ரக்அத்துகளை வித்ராக ஆக்கிக் கொள்வார்கள். அந்த ஐந்து ரக்அத்தில் இறுதியில் தவிர வேறு எதிலும் அவர்கள் உட்கார மாட்டார்கள்.[108]

عَنْ أُمِّ سَلَمَةَ رضي الله عنها قَالَتْ كَانَ رَسُولُ اللهِ ﷺ يُوتِرُ بِسَبْعٍ أَوْ بِخَمْسٍ لَا يَفْصِلُ بَيْنَهُنَّ بِتَسْلِيمٍ وَلَا كَلَامٍ رواه ابن ماجة برقم ١١٨٢

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஏழு அல்லது ஐந்து ரக்அத்துகள் வித்ர் தொழுபவர்களாக இருந்தார்கள். அந்த ரக்அத்துகளுக்கு இடையில் ஸலாமைக் கொண்டும் பேச்சைக் கொண்டும் அவர்கள் பிரிக்க மாட்டார்கள்.[109]

**ஏழாவது சட்டவிளக்கம்**

## நஃபில் தொழுவது தடுக்கப்பட்ட நேரங்கள்

ஐந்து நேரங்கள் உள்ளன. சில விதிவிலக்குகள் உள்ள நிலையில் தவிர மற்ற பொதுவான நிலையில் அந்த ஐந்து நேரங்களில் நஃபில் தொழுவது தடுக்கப்பட்டதாகும்.

1). ஸுப்ஹ் தொழுகைக்குப் பின்னர் சூரியன் உதயமாகின்ற வரை
2). அஸ்ர் தொழுகைக்குப் பின்னர் சூரியன் மறைகின்ற வரை.

وَلَا صَلَاةَ بَعْدَ الصُّبْحِ حَتَّى تَطْلُعَ الشَّمْسُ وَلَا بَعْدَ الْعَصْرِ حَتَّى تَغْرُبَ رواه البخاري برقم ٥٨٦

ஸுப்ஹ் தொழுகைக்கு பின்னர் சூரியன் உதயமாகின்ற வரையும் அஸ்ர் தொழுகைக்கு பின்னர் சூரியன் மறைகின்ற வரையும் எந்த தொழுகையும் இல்லை.[110]

108. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: முஸ்லிம், எண்: 737
109. அறிவிப்பாளர்: உம்மு சலமா رضي الله عنها, நூல்: இப்னு மாஜா, எண்: 1182
110. அறிவிப்பாளர்: அபூ ஸயீத் அல்குத்ரி رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 586

3) சூரியன் உதயமானதிலிருந்து ஓர் ஈட்டியின் அளவு அதாவது ஏறக்குறைய ஒரு மீட்டர் உயரம் அது உயருகின்ற வரை.

ஓர் ஈட்டியின் அளவு என்பது பதினைந்து அல்லது இருபது நிமிடங்கள் வரை அளவிடப்படுகின்றது.

صَلِّ صَلَاةَ الصُّبْحِ ثُمَّ أَقْصِرْ عَنِ الصَّلَاةِ حَتَّى تَطْلُعَ الشَّمْسُ حَتَّى تَرْتَفِعَ فَإِنَّهَا تَطْلُعُ حِينَ تَطْلُعُ بَيْنَ قَرْنَيْ شَيْطَانٍ وَحِينَئِذٍ يَسْجُدُ لَهَا الْكُفَّارُ رواه مسلم برقم ٨٣٢

நீ ஸுப்ஹ் தொழுகையைத் தொழு! பிறகு, சூரியன் உதயமாகி, அது உயருகின்ற வரை (தொழுவதை) நீ நிறுத்திக்கொள்! நிச்சயமாக அது ஷைத்தானின் இரு கொம்புகளுக்கு மத்தியில் உதயமாகிறது. அந்நேரத்தில் காஃபிர்கள் - நிராகரிப்பாளர்கள் அதற்கு ஸஜ்தா செய்கின்றார்கள்.[111]

4). சூரியன் பகலின் நடுப்பொழுதை அடைந்ததிலிருந்து அது மேற்கு திசையில் சற்று சாய்ந்து ளுஹ்ர் உடைய நேரம் வருகின்ற வரை. 5). சூரியன் மறைய ஆரம்பித்தவுடன் அது மறைந்து முடிகின்ற வரை.

عن عُقْبَةَ بْنَ عَامِرٍ الْجُهَنِيِّ رضي الله عنه يَقُولُ ثَلَاثُ سَاعَاتٍ كَانَ رَسُولُ اللهِ ﷺ يَنْهَانَا أَنْ نُصَلِّيَ فِيهِنَّ أَوْ أَنْ نَقْبُرَ فِيهِنَّ مَوْتَانَا حِينَ تَطْلُعُ الشَّمْسُ بَازِغَةً حَتَّى تَرْتَفِعَ وَحِينَ يَقُومُ قَائِمُ الظَّهِيرَةِ حَتَّى تَمِيلَ الشَّمْسُ وَحِينَ تَضَيَّفُ الشَّمْسُ لِلْغُرُوبِ حَتَّى تَغْرُبَ رواه مسلم برقم ٨٣١

உக்பா இப்னு ஆமிர் அல்ஜுஹனி رضي الله عنه அவர்கள் கூறுகிறார்கள்: மூன்று நேரங்கள் - நாங்கள் அந்த நேரங்களில் தொழுவதிலிருந்து

111. அறிவிப்பாளர்: அம்ர் இப்னு அபசா رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 832

அல்லது அந்த நேரங்களில் எங்களில் இறந்தவர்களை அடக்கம் செய்வதிலிருந்து ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் எங்களை தடுப்பவர்களாக இருந்தார்கள். சூரியன் உதயமாகும் நேரம், அது உயருகின்ற வரை. மதிய நேரத்தில் சூரியன் (மேற்கில்) சாய்கின்ற வரை. சூரியன் மறைவதற்கு இறங்குகின்ற போது, அது மறைகின்ற வரை.[112]

சூரியன் உதிக்கும்போதும் மறையும்போதும் தொழக்கூடாது என்பதற்கு அது ஷைத்தானின் இரு கொம்புகளுக்கு நடுவில் உதிக்கின்றது, மறைகின்றது என்று நபி ﷺ அவர்கள் விளக்கம் கூறியுள்ளார்கள்.

பகலின் நடுப்பொழுதில் அது சாய்கின்ற வரை நரகம் கடுமையாக தீ மூட்டப்படுகின்றது என்பதால் அந்த நேரத்தில் தொழுவதை நபி ﷺ அவர்கள் தடுத்தார்கள்.

**فَإِنَّ حِينَئِذٍ تُسْجَرُ جَهَنَّمُ**

அந்நேரத்தில் நரகம் உஷ்ணமாக்கப்படுகின்றது.[113]

ஆகவே, மேற்கூறப்பட்ட இந்த நேரங்களில் உபரியான தொழுகைகள் தொழுவது கூடாது. ஆனால், மார்க்கம் சில சூழ்நிலைகளில் மட்டும் இந்த நேரங்களில் நஃபில் தொழுவதற்கு அனுமதித்துள்ளது.

உதாரணமாக, தவாஃப் செய்த பின்னர் தொழவேண்டிய இரண்டு ரக்அத்துகள்.

**عَنْ جُبَيْرِ بْنِ مُطْعِمٍ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ يَا بَنِي عَبْدِ مَنَافٍ لَا تَمْنَعُوا أَحَدًا طَافَ بِهَذَا الْبَيْتِ وَصَلَّى أَيَّةَ سَاعَةٍ شَاءَ مِنْ اللَّيْلِ وَالنَّهَارِ**

**رواه ابن ماجة برقم ١٢٤٤**

---

112. நூல்: முஸ்லிம், எண்: 831
113. ஸஹீஹ் முஸ்லிம் ஹதீஸ் எண்: 1374

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: அப்து முனாஃப் குடும்பத்தார்களே! இந்த இறை ஆலயத்தை யார் இரவு பகல் என எந்த நேரத்தில் தவாஃப் செய்தாலும் அல்லது இதில் தொழுதாலும் அவரை நீங்கள் தடுக்காதீர்கள்.[114]

அவ்வாறே, ஃபஜ்ருடைய முன் சுன்னத் தவறிவிட்டால் அதை ஃபஜ்ர் உடைய தொழுகைக்குப் பின் தொழுவது அனுமதிக்கப்பட்டதாகும்.

மேலும், ளுஹ்ருடைய முன் சுன்னத் தவறிவிட்டால் அஸ்ர் தொழுத பின்னர் அதை தொழுவது அனுமதிக்கப்பட்டதாகும். அவ்வாறே, காரணத்தின் அடிப்படையில் தொழக்கூடிய தொழுகைகளையும் இந்த நேரங்களில் தொழுவது கூடும்.[115]

ஜனாஸா தொழுகை, மஸ்ஜிதுடைய காணிக்கை தொழுகை, கிரகணத் தொழுகை, தவறிவிட்ட ஃபர்ழான தொழுகை ஆகிய தொழுகைகளை இந்த நேரங்களில் தொழலாம்.

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ مَنْ نَسِيَ صَلَاةً فَلْيُصَلِّهَا إِذَا ذَكَرَهَا لَا كَفَّارَةَ لَهَا إِلَّا ذَلِك رواه أبو داود برقم ٣٧٤**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் தொழுகையை மறந்து விடுவாரோ அவர் அதை நினைவு கூரும்போது அதை தொழுது விடட்டும். அதைத் தவிர அதற்கு வேறு பரிகாரம் இல்லை.[116]

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا رَقَدَ أَحَدُكُمْ**

---

114. அறிவிப்பாளர்: ஜுபைர் இப்னு முத்இம் (ரலி) கூறுகிறார்கள்: நூல்: இப்னு மாஜா, எண்: 1244

115. தஹிய்யதுல் மஸ்ஜித், தஹிய்யதுல் உளூ போன்ற தொழுகைகள் இந்த நேரங்களில் நிறைவேற்றலாம்.

116. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் (ரலி), நூல்: அபூ தாவூத், எண்: 374, முஸ்லிம், எண்: 1102 | இதே கருத்து ஸஹீஹ் முஸ்லிம் நூலில் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் மூலமாக ஹதீஸ் எண் 1097 ஆக பதியப்பட்டுள்ளது.

عَنِ الصَّلَاةِ أَوْ غَفَلَ عَنْهَا فَلْيُصَلِّهَا إِذَا ذَكَرَهَا فَإِنَّ اللهَ يَقُولُ أَقِمْ الصَّلَاةَ لِذِكْرَى رواه مسلم برقم ٦٨٤

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் தொழுகையை விட்டு தூங்கி விட்டாலோ அல்லது அதை கவனிக்காமல் இருந்து விட்டாலோ அவர் அதை நினைவு கூரும்போது அதை தொழுது விடட்டும். ஏனெனில், நிச்சயமாக அல்லாஹ் கூறுகின்றான்: நீர் தொழுகையை என் நினைவுக்காக நிறைவேற்றுவீராக![117] (அல்குர்ஆன் 20:13)

ஃபர்ழான தொழுகைகள் மனிதன் அல்லாஹ்விற்காக நிறைவேற்ற வேண்டிய ஒரு கடனாகவும் கட்டாயக் கடமையாகவும் இருக்கின்றது. ஆகவே, எப்போது தான் தன் மீது கடமையான தொழுகையை தொழவில்லை என்று நினைவு வருகிறதோ அப்போது உடனே அந்த தொழுகையை நிறைவேற்றிவிட வேண்டும்.

----------------

117. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ؓ, நூல்: முஸ்லிம், எண்: 684

ஆறாவது பாடம்

# الباب السادس في سجود السهو والتلاوة والشكر

# மறதிக்கான ஸஜ்தா, ஓதுவதற்கான ஸஜ்தா, நன்றிக்கான ஸஜ்தா

**முதல் சட்டவிளக்கம்**

## மறதிக்கான ஸஜ்தாவும் காரணங்களும்

தொழுகையில் நிகழ்ந்துவிட்ட குறையை நிவர்த்தி செய்வதற்காக தொழுகையின் இறுதியில் இரண்டு ஸுஜூதுகள் செய்யப்படும். அதற்கு ஸுஜூதுஸ் ஸஹ்வ் -மறதிக்கான ஸுஜூது என்று கூறப்படும்.

அந்த குறை தொழுகையில் சந்தேகம் ஏற்பட்டதால் இருக்கலாம். அல்லது, கடமையான ஒன்றை விட்டுவிட்டதால் இருக்கலாம். அல்லது, கடமையான ஒன்றை குறிப்பிடப்பட்ட எண்ணிக்கையை விட அதிகமாக செய்ததால் இருக்கலாம்.

மறதி ஏற்பட்டால் அதற்கு பரிகாரம் செய்வதற்காக சுஜூது செய்ய வேண்டும் என்று மார்க்கம் கூறியிருக்கிறது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்

فَإِذَا نَسِيَ أَحَدُكُمْ فَلْيَسْجُدْ سَجْدَتَيْنِ

உங்களில் ஒருவர் மறந்துவிட்டால் அவர் இரண்டு ஸஜ்தா செய்யட்டும்.[118]

மேலும் நபி ﷺ அவர்கள் தொழுகையில் மறந்துவிட்டபோது அதற்காக அவர்கள் தொழுகையின் இறுதியில் ஸஜ்தா செய்தார்கள். இது குறித்து பல நபிமொழிகள் ஹதீஸ் நூல்களில் வந்துள்ளன.

தொழுகையில் மறதி ஏற்பட்டால் அதற்காக ஸஜ்தா செய்ய வேண்டும் என்று அறிஞர்கள் ஒருமித்து கூறியுள்ளார்கள்.

ஸுஜூதுஸ் ஸஹ்வ் உடைய காரணங்கள் மூன்றாகும்.

1). அதிகப்படுத்துதல்

2). குறைத்துவிடுதல்

3). சந்தேகித்தல்

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## சுஜூதுஸ் ஸஹ்வ் எப்போது கடமையாகிறது?

பின்வருகின்ற காரணங்களுக்காக ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்வது “வாஜிப்” கட்டாயமாகும்.

1). தொழுகையின் செயல்களில் ஒன்றை அதிகப்படுத்தினால், அதற்காக தொழுகையின் இறுதியில் ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்ய வேண்டும். உதாரணமாக, ஒரு ‘ருகூஃஐ’ அல்லது ஒரு ‘ஸுஜூத்’ஐ அல்லது ஒரு ‘கியாம்’ அல்லது ஒரு ‘குவூது’ஐ,[119] அதிகப்படுத்தினால், அந்த ‘குவூது’ ‘ஜல்ஸதுல் இஸ்திராஹா’[120] அளவிற்கு சிறியதாக இருந்தாலும் சரி.

---

118. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ؓ, நூல்: முஸ்லிம், எண்: 572

119. ஸுஜூது-சிரம் பணிதல், ருகூஃ-குனிதல், கியாம்-நிலை நிற்பது, குவூது-அமர்வது

120. முதல் ரக்அத் மற்றும் மூன்றாவது ரக்அத் உடைய இரண்டாவது ஸுஜூதிலிருந்து தலையை உயர்த்தும்போது கியாம் - நிலைக்கு செல்வதற்கு முன்பாக சில நொடிகள் அமர்ந்துவிட்டு மேலே எழுவது முஸ்தஹப்பாகும். இந்த அமர்வுக்கு ஜல்ஸதுல் இஸ்திராஹா என்று சொல்லப்படும்.

عَنْ عَبْدِ اللهِ ﵁ قَالَ صَلَّى بِنَا رَسُولُ اللهِ ﷺ خَمْسًا فَلَمَّا انْفَتَلَ تَوَشْوَشَ الْقَوْمُ بَيْنَهُمْ فَقَالَ مَا شَأْنُكُمْ قَالُوا يَا رَسُولَ اللهِ هَلْ زِيدَ فِي الصَّلَاةِ قَالَ لَا قَالُوا فَإِنَّكَ قَدْ صَلَّيْتَ خَمْسًا فَانْفَتَلَ ثُمَّ سَجَدَ سَجْدَتَيْنِ ثُمَّ سَلَّمَ ثُمَّ قَالَ إِنَّمَا أَنَا بَشَرٌ مِثْلُكُمْ أَنْسَى كَمَا تَنْسَوْنَ وَزَادَ ابْنُ نُمَيْرٍ فِي حَدِيثِهِ فَإِذَا نَسِيَ أَحَدُكُمْ فَلْيَسْجُدْ سَجْدَتَيْنِ رواه مسلم برقم ٥٧٢

அப்துல்லாஹ் (இப்னு மஸ்வூத்) ﵁ கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் எங்களுக்கு (ஒரு நாள்) ஐந்து ரக்அத்துகள் தொழ வைத்தார்கள். (தொழுது முடித்து) அவர்கள் திரும்பியபோது மக்கள் தங்களுக்குள் குழம்பினார்கள். உங்களுக்கு என்ன ஆனது என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். மக்கள் கூறினார்கள்: “அல்லாஹ்வின் தூதரே! தொழுகையில் (ஒரு ரக்அத்) அதிகப்படுத்தப்பட்டு விட்டதா?” இல்லை என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். நீங்கள் திட்டமாக ஐந்து ரக்அத்துகள் தொழுதீர்கள் என்று மக்கள் கூறினார்கள். உடனே நபி அவர்கள், (கிப்லாவின் பக்கம்) திரும்பி இரண்டு ஸஜ்தாக்கள் செய்து, பிறகு ஸலாம் கூறினார்கள். பிறகு, கூறினார்கள்: “நானும் உங்களைப் போன்ற ஒரு மனிதன்தான். நீங்கள் மறப்பதைப் போன்று நானும் மறக்கின்றேன். ஆகவே, உங்களில் ஒருவர் மறந்து விட்டால் அவர் இரண்டு ஸஜ்தாக்கள் செய்யட்டும்.”[121]

ஆகவே, ஒருவர் தனது தொழுகையில் ஏதாவது ஒரு கியாமை அதிகப்படுத்தி விட்டோம் என்று தெரிந்தால் உடனே உட்கார்ந்து விட வேண்டும். அது அதிகப்படுத்திய ரக்அத்தின் ருகூஃவில் இருந்தாலும் சரி. ஏனெனில், அறியவந்த பின்னரும் அப்படியே தொழுகையை தொடர்ந்தால் வேண்டுமென்றே தொழுகையில் அதிகப்படுத்தியதாக ஆகிவிடும். வேண்டுமென்றே எதையும் அதிகப்படுத்துவது அறவே கூடாத காரியமாகும்.

121. நூல்: முஸ்லிம், எண்: 572

2). தொழுகையை முழுமையாக்குவதற்கு முன்பாக ஸலாம் கொடுத்து விட்டால் அதற்காகவும் ஸஜ்தா ஸஹ்வ் செய்ய வேண்டும்.

**عَنْ عِمْرَانَ بْنِ الْحُصَيْنِ ﷛ قَالَ سَلَّمَ رَسُولُ اللّٰهِ ﷺ فِي ثَلَاثِ رَكَعَاتٍ مِنْ الْعَصْرِ ثُمَّ قَامَ فَدَخَلَ الْحُجْرَةَ فَقَامَ رَجُلٌ بَسِيطُ الْيَدَيْنِ فَقَالَ أَقُصِرَتْ الصَّلَاةُ يَا رَسُولَ اللّٰهِ فَخَرَجَ مُغْضَبًا فَصَلَّى الرَّكْعَةَ الَّتِي كَانَ تَرَكَ ثُمَّ سَلَّمَ ثُمَّ سَجَدَ سَجْدَتَيْ السَّهْوِ ثُمَّ سَلَّمَ رواه مسلم برقم ٥٧٤**

இம்ரான் இப்னு ஹுஸைன் ﵁ கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் (ஒரு நாள்) அஸ்ர் தொழுகையில் மூன்று ரக்அத்துகள் தொழவைத்து விட்டு ஸலாம் கொடுத்துவிட்டார்கள். பிறகு, எழுந்து (தமது) அறைக்குள் சென்றார்கள். இரு கைகளும் நீளமான ஒரு மனிதர் எழுந்து அல்லாஹ்வின் தூதரே தொழுகை சுருக்கப்பட்டு விட்டதா என்று கூறினார். நபி அவர்கள் கோபத்துடன் (அறையை விட்டு) வெளியேறி வந்து தான் விட்டுவிட்ட ரக்அத்தை தொழுது விட்டு பிறகு ஸலாம் கொடுத்தார்கள். பிறகு, மறதிக்கான இரண்டு ஸஜ்தாக்கள் செய்தார்கள். பிறகு, (மீண்டும்) ஸலாம் கொடுத்தார்கள்.[122]

3). தொழுகையில் குர்ஆன் ஓதும்போது பொருள் மாறுபடும் விதத்தில் தவறுதலாக ஓதிவிட்டால் அதற்காக தொழுகையின் இறுதியில் ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்ய வேண்டும்.

4). தொழுகையில் செய்ய வேண்டிய வாஜிபுகளில் ஏதாவது ஒன்றை மறந்து விட்டுவிட்டால் அதற்காக தொழுகையின் இறுதியில் ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்ய வேண்டும்.

**عَنْ عَبْدِ اللّٰهِ ابْنِ بُحَيْنَةَ ﷛ أَنَّهُ قَالَ صَلَّى لَنَا رَسُولُ اللّٰهِ ﷺ رَكْعَتَيْنِ مِنْ بَعْضِ الصَّلَوَاتِ ثُمَّ قَامَ فَلَمْ يَجْلِسْ فَقَامَ النَّاسُ مَعَهُ فَلَمَّا قَضَى صَلَاتَهُ**

122. நூல்: முஸ்லிம், எண்: 574

وَنَظَرْنَا تَسْلِيمَهُ كَبَّرَ قَبْلَ التَّسْلِيمِ فَسَجَدَ سَجْدَتَيْنِ وَهُوَ جَالِسٌ ثُمَّ سَلَّمَ

رواه البخاري برقم ١٢٣٠

அப்துல்லாஹ் இப்னு புஜைனா ﵁ கூறுகிறார்கள்: எங்களுக்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் (நான்கு ரக்அத்துகள் தொழவேண்டிய) தொழுகையில் இரண்டு ரக்அத்துகள் தொழவைத்து (இரண்டாவது ரக்அத்தில்) உட்காராமல் எழுந்து விட்டார்கள். நபி ﷺ அவர்களுடன் மக்களும் எழுந்து விட்டார்கள். அவர்கள் தமது தொழுகையை முடிக்க நெருங்கிய போது நாங்கள் அவர்கள் ஸலாம் கொடுப்பதை எதிர்பார்த்திருந்த நேரத்தில் நபி அவர்கள் ஸலாம் கொடுப்பதற்கு முன்பாக அவர்கள் உட்கார்ந்த நிலையிலேயே தக்பீர் கூறி இரண்டு ஸஜ்தாக்கள் செய்தார்கள். பிறகு, ஸலாம் கூறினார்கள்.[123]

இரண்டாவது ரக்அத்தில் அத்தஹிய்யாத் ஓதுவதற்காக அமர்வது வாஜிபாகும். அதை தவறவிட்டதால் நபி ﷺ அவர்கள் ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்தார்கள். ஆகவே, தொழுகையில் எதுவெல்லாம் வாஜிபோ அதை மறந்து விட்டுவிட்டால் அதற்காக ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்ய வேண்டும் என்பதை மேற்கூறப்பட்ட நபிமொழியிலிருந்து நாம் புரிய முடிகிறது.

5). ஒருவருக்கு அவர் எத்தனை ரக்அத்துகள் தொழுதார் என்று உறுதியாக அறிய முடியாமல் சந்தேகம் வந்துவிட்டால் அதற்காகவும் ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்ய வேண்டும். ஏனெனில், தொழுகையில் ஒரு செயலை அவர் தடுமாற்றத்துடன், சந்தேகத்துடன் செய்கிறார். அதாவது, தொழுகையில் உள்ளதை செய்கின்றாரா, அல்லது அதைவிட அதிகமாக செய்கின்றாரா என்று அவருக்கு தெரியவில்லை. ஆகவே, நிய்யத் -எண்ணம் பலவீனமாகி விட்டதால் அந்த குறையை நிவர்த்தி செய்வதற்காக ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்வது அவசியமாகும்.

123. நூல்: புகாரி, எண்: 1230

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ إِنَّ أَحَدَكُمْ إِذَا قَامَ يُصَلِّي جَاءَ الشَّيْطَانُ فَلَبَسَ عَلَيْهِ حَتَّى لَا يَدْرِيَ كَمْ صَلَّى فَإِذَا وَجَدَ ذَلِكَ أَحَدُكُمْ فَلْيَسْجُدْ سَجْدَتَيْنِ وَهُوَ جَالِسٌ رواه البخاري برقم ١٢٣١

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் தொழுவதற்கு நின்றால் ஷைத்தான் (அவரிடம்) வருகிறான். அவருக்கு குழப்பத்தை உண்டுபண்ணுகின்றான். இறுதியாக, தான் எத்தனை ரக்அத்துகள் தொழுதோம் என்று அவர் அறியாமல் போய்விடுகிறார். இந்த நிலையை உங்களில் ஒருவர் அடைந்தால் அவர் உட்கார்ந்த நிலையில் இரண்டு ஸஜ்தாக்கள் செய்யட்டும்.[124]

இது போன்ற குழப்பம் ஏற்படும்போது எதையும் முடிவு செய்ய முடியாமல் ஆகிவிட்டால் குறைந்த எண்ணிக்கையை முடிவாக எடுத்துக்கொள்ள வேண்டும். அதன் பிரகாரம் தொழுகையை முடித்துவிட்டு இறுதியில் மறதிக்காக இரண்டு ஸஜ்தாக்கள் செய்ய வேண்டும்.

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا شَكَّ أَحَدُكُمْ فِي صَلَاتِهِ فَلَمْ يَدْرِ كَمْ صَلَّى ثَلَاثًا أَمْ أَرْبَعًا فَلْيَطْرَحْ الشَّكَّ وَلْيَبْنِ عَلَى مَا اسْتَيْقَنَ ثُمَّ يَسْجُدُ سَجْدَتَيْنِ قَبْلَ أَنْ يُسَلِّمَ فَإِنْ كَانَ صَلَّى خَمْسًا شَفَعْنَ لَهُ صَلَاتَهُ وَإِنْ كَانَ صَلَّى إِتْمَامًا لِأَرْبَعٍ كَانَتَا تَرْغِيمًا لِلشَّيْطَانِ رواه مسلم برقم ٥٧١

ரஸூலுல்லாஹ் ﵁ அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் தனது தொழுகையில் சந்தேகப்பட்டால் மூன்று ரக்அத்துகள் தொழுதாரா அல்லது நான்கு ரக்அத்துகள் தொழுதாரா என்று அவருக்குத்

124. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: புகாரி, எண்: 1231

தெரியவில்லை என்றால் அவர் சந்தேகத்தை ஒதிக்கிவிட்டு அவர் எதை உறுதிசெய்கிறாரோ (அதாவது, எது குறைவான எண்ணிக்கையோ) அதன் மீது தனது தொழுகையை அமைக்கட்டும். பிறகு, ஸலாம் கொடுப்பதற்கு முன்பாக அவர் இரண்டு ஸஜ்தாக்கள் செய்யட்டும். அவர் (இந்த ரக்அத்துடன் சேர்த்து) ஐந்து ரக்அத்துகள் தொழுது இருந்தாலும் அவை அவருடைய தொழுகையை அவருக்கு இரட்டையாக (நான்காக) ஆக்கிவிடும். அவர் நான்கு ரக்அத்துதான் தொழுது இருந்தால் இந்த இரண்டு ஸஜ்தாக்கள் ஷைத்தானை இழிவுபடுத்துவதற்காக ஆகிவிடும்.[125]

தனது குழப்பத்தில் ஒரு தெளிவு கிடைத்துவிட்டால் அந்த தெளிவின் படி தொழுகையை அமைக்க வேண்டும். பிறகு, இரண்டு ஸஜ்தாக்கள் மறதிக்காக செய்ய வேண்டும்.

وَإِذَا شَكَّ أَحَدُكُمْ فِي صَلَاتِهِ فَلْيَتَحَرَّ الصَّوَابَ فَلْيُتِمَّ عَلَيْهِ ثُمَّ لِيُسَلِّمْ ثُمَّ يَسْجُدُ سَجْدَتَيْنِ رواه البخاري عن عبد الله بن مسعود برقم ٤٠١

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் தனது தொழுகையில் சந்தேகப்பட்டால் அவர் சரியானதை ஆராயட்டும். அதன் மீது (தொழுகையை) நிறைவு செய்யட்டும். பிறகு, இரண்டு ஸஜ்தாக்கள் செய்யட்டும்.[126]

உதாரணமாக, ஒருவருக்கு அவர் இரண்டு ரக்அத்துகள் தொழுதாரா அல்லது மூன்று ரக்அத்துகள் தொழுதாரா என்று சந்தேகம் வருகிறது. பிறகு, தான் மூன்றுதான் தொழுதோம் என்று அவர் தெளிவடைந்து விடுகிறார். பிறகு, அந்த மூன்றின் அடிப்படையிலேயே அவர் தொழுகையை அமைத்துக் கொள்ள வேண்டும். பிறகு, குழப்பம் ஏற்பட்டதற்காக ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்யவேண்டும்.

125. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ؓ, நூல்: முஸ்லிம், எண்: 571
126. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ؓ, நூல்: புகாரி, எண்: 401

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்வது சில சமயங்களில் கட்டாயமாக இல்லாமல் சுன்னத்தாக இருக்கும்

ஒருவர் தொழுகையில் ஓதவேண்டியதை அதற்குரிய இடம் அல்லாத இடத்தில் ஓதிவிட்டால் உதாரணமாக ருகூஃ அல்லது ஸுஜூதில் குர்ஆன் ஓதிவிட்டால், அல்லது நிலையில் நிற்கும்போது அத்தஹிய்யாத் ஓதிவிட்டால், அல்லது தஷஹ்ஹுத் உடைய இருப்பில் குர்ஆன் ஓதிவிட்டால் பிறகு, நினைவு வந்து அந்த இடத்தில் ஓதவேண்டியதையும் ஓதிவிட்டால் அவர் இதற்காகவும் ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்வது சுன்னத் ஆகும். உதாரணமாக, ஒருவர் ருகூஃவில் குர்ஆன் ஓதிவிடுகிறார். பிறகு, நினைவு வந்து ருகூஃவில் ஓதவேண்டிய ஸுப்ஹான ரப்பியல் அளீம் என்பதையும் ஓதிவிடுகிறார்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

فَإِذَا نَسِيَ أَحَدُكُمْ فَلْيَسْجُدْ سَجْدَتَيْنِ

உங்களில் ஒருவர் மறந்துவிட்டால் அவர் இரண்டு ஸஜ்தா செய்யட்டும்.[127]

**நான்காவது சட்டவிளக்கம்**

## ஸுஜூதுஸ் ஸஹ்வ் எந்த இடத்தில் செய்வது, எப்படி செய்வது?

1). ஸுஜூது செய்ய வேண்டிய இடம்

ஸுஜூது செய்ய வேண்டிய இடம் தொடர்பாக இரு விதமான நபிமொழிகள் வந்துள்ளன.

ஸலாம் கொடுப்பதற்கு முன்பாக ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்துவிட்டு

127. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ﵁, நூல்: முஸ்லிம், எண்: 572

பிறகு ஸலாம் கொடுக்க வேண்டும் என்று சில நபிமொழிகள் கூறுகின்றன.

மற்றும் சில நபிமொழிகள், ஸலாம் கொடுத்துவிட்டு பிறகு, ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்ய வேண்டும் என்று கூறுகின்றன. ஆகவே, சில ஆய்வாளர்கள் கூறுவதாவது இது தொழுபவரின் விருப்பத்தின் படி விடப்பட்ட விஷயமாகும். அவர் நாடினால் ஸலாம் கொடுப்பதற்கு முன்பாக ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்வார். அவர் விரும்பினால் சலாம் கொடுத்த பின்னர் செய்வார். ஏனெனில், இருவிதமாகவும் நபிமொழிகள் வந்துள்ளன. ஆகவே, எல்லா விதமான குறைகளுக்கும் ஸலாம் கொடுப்பதற்கு முன்பாகவும் செய்யலாம். அல்லது ஸலாம் கொடுத்த பின்னரும் செய்யலாம்.

தாபியீன்களில் பெரிய அறிஞராகிய இமாம் **زهري** – ஸுஹ்ரி ﵀ கூறுகிறார்கள்: ஸலாம் கொடுப்பதற்கு முன்பாக ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்வதுதான் நபி ﷺ அவர்களின் இறுதி கால வழக்கமாக இருந்தது.

2). ஸுஜூதுஸ் ஸஹ்வ் எப்படி செய்வது?

தொழுகையில் செய்யப்படுகின்ற ஸஜ்தாவைப் போன்று இரண்டு ஸஜ்தாக்கள் செய்ய வேண்டும். ஒவ்வொரு ஸஜ்தாவிற்கும் தக்பீர் கூறவேண்டும். ஸஜ்தாவில் இருந்து எழும்போதும் தக்பீர் கூற வேண்டும். பிறகு இரு பக்கமும் ஸலாம் கூற வேண்டும். சில அறிஞர்கள் கூறுகிறார்கள்: ஸலாம் கொடுத்துவிட்டு ஸுஜூதுஸ் ஸஹ்வ் செய்தால் மீண்டும் தஷஹ்ஹுத் ஓதவேண்டும். இது குறித்து மூன்று நபிமொழிகள் வந்துள்ளன. அவை அனைத்தும் ஒன்று சேர்ந்து 'ஹஸன்' -அழகானது என்ற ஹதீஸ் தரத்தை அடைகின்றன. இந்த கருத்தை இமாம் இப்னு ஹஜர் ﵀ அவர்கள் ஸஹீஹ் புகாரியின் விரிவுரை ஃபத்ஹுல் பாரியில் குறிப்பிடுகிறார்கள்.

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## ஸுஜூதுத் திலாவா

1). ஸுஜூதுத் திலாவா எப்போது செய்யவேண்டும்? இதன் சட்டம் என்ன?

குர்ஆன் ஓதுவதை திலாவத் என்று கூறப்படுகிறது. அல்குர்ஆனில் குறிப்பிட்ட சில வசனங்களை நாம் ஓதும்போது அல்லது செவியுறும்போது அல்லாஹ்வை பயந்து, ஸுஜூது - சிரம்பணிய வேண்டும் என்று மார்க்கம் நமக்கு வழிகாட்டி இருக்கிறது. இத்தகைய சிரம் பணிதலைத்தான் ஸுஜூதுத் திலாவா என்று கூறப்படுகிறது.

**عَنِ ابْنِ عُمَرَ ﷺ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ يَقْرَأُ عَلَيْنَا السُّورَةَ فِيهَا السَّجْدَةُ فَيَسْجُدُ وَنَسْجُدُ حَتَّى مَا يَجِدُ أَحَدُنَا مَوْضِعَ جَبْهَتِهِ رواه البخاري برقم ١٠٧٦**

நபி ﷺ அவர்கள் எங்கள் முன் ஸஜ்தா வசனம் உள்ள சூராவை - அத்தியாயத்தை ஓதுவார்கள். ஆகவே, அவர்களும் ஸஜ்தா செய்வார்கள். நாங்களும் ஸஜ்தா செய்வோம். இறுதியாக, எங்களில் ஒருவர் தனது முகத்தை பூமியில் வைப்பதற்கு இடத்தை பெற்றுக்கொள்ள மாட்டார். (சபையில் அந்த அளவு இட நெருக்கடி ஏற்பட்டுவிடும்).[128]

**இந்த ஸஜ்தாவின் சட்டம் சுன்னா ஆகும். இது வாஜிப் - கட்டாயம் அல்ல.**

**عَنْ زَيْدِ بْنِ ثَابِتٍ ﷺ قَالَ قَرَأْتُ عَلَى النَّبِيِّ ﷺ وَالنَّجْمِ فَلَمْ يَسْجُدْ فِيهَا رواه البخاري برقم ١٠٧٣**

ஸைது இப்னு ஸாபித் ﷺ கூறுகிறார்கள்: நான் நபி ﷺ அவர்களுக்கு முன்பாக வந்நஜ்ம் சூராவை ஓதினேன். அவர் (-ஸைது இப்னு ஸாபித் ﷺ) அதில் ஸஜ்தா செய்யவில்லை.[129]

தொழுகையில் அல்லது தொழுகைக்கு வெளியில் ஸஜ்தாவுடைய வசனத்தை ஓதும்போது ஓதியவரும் அதை செவியுற்றவரும் ஸஜ்தா செய்வது மார்க்கமாக ஆக்கப்பட்டுள்ளது.

---

128. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﷺ, நூல்: புகாரி, எண்: 1076
129. நூல்: புகாரி, எண்: 1073

முன்பு கூறப்பட்ட, இப்னு உமர் ﵄ அவர்கள் அறிவித்த நபிமொழி தொழுகைக்கு வெளியில் நபி ﷺ அவர்கள் ஸஜ்தா திலாவத் செய்ததை அறிவிக்கிறது.

தொழுகைக்குள் ஸஜ்தா திலாவத் செய்வதற்கு ஆதாரம்:

**عَنْ أَبِي رَافِعٍ ﵀ قَالَ صَلَّيْتُ مَعَ أَبِي هُرَيْرَةَ ﵁ الْعَتَمَةَ فَقَرَأَ إِذَا السَّمَاءُ انْشَقَّتْ فَسَجَدَ فَقُلْتُ مَا هٰذِهِ قَالَ سَجَدْتُ بِهَا خَلْفَ أَبِي الْقَاسِمِ ﷺ فَلَا أَزَالُ أَسْجُدُ فِيهَا حَتَّى أَلْقَاهُ رواه البخاري برقم ١٠٧٨**

அபூ ராஃபி ﵀ கூறுகிறார்: "நான் அபூ ஹுரைரா ﵁ அவர்களுடன் இஷா தொழுதேன். அவர்கள் இதஸ் ஸமாவுன் ஷக்கத் என்ற சூராவை ஓதினார்கள். அதில் ஸஜ்தா செய்தார்கள். (அவர்கள் ஸஜ்தா செய்ததைப் பற்றி தொழுது முடித்த பினனர்) நான் கேட்டேன், இது என்ன என்று?" அவர்கள் கூறினார்கள்: "அபுல் காசிம் ﷺ அவர்களுக்குப் பின்னால் நான் தொழுத போது இந்த சூராவில் ஸஜ்தா செய்துள்ளேன். ஆகவே, நான் அவர்களை சந்திக்கின்ற வரை இந்த சூராவில் ஸஜ்தா செய்வேன்."[130]

ஸஜ்தா வசனத்தை ஓதியவர் ஸஜ்தா செய்யவில்லை என்றால் அதை செவியுற்றவரும் ஸஜ்தா செய்ய மாட்டார்.

**عَنْ زَيْدِ بْنِ ثَابِتٍ ﵁ قَالَ قَرَأْتُ عَلَى النَّبِيِّ ﷺ وَالنَّجْمِ فَلَمْ يَسْجُدْ فِيهَا رواه البخاري برقم ١٠٧٣**

ஸைது இப்னு ஸாபித் ﵁ கூறுகிறார்கள்: நான் நபி ﷺ அவர்களுக்கு முன்பாக வந்நஜ்ம் சூராவை ஓதினேன். அவர் (-ஸைது இப்னு ஸாபித் ﵁) அதில் ஸஜ்தா செய்யவில்லை.[131]

**கருத்து:** வந்நஜ்ம் சூராவை ஓதிய ஸைது ﵁ அவர்கள் ஸஜ்தா

130. நூல்: புகாரி, எண்: 1078
131. நூல்: புகாரி, எண்: 1073

செய்யாததால், அதை செவியுற்ற நபி ﷺ அவர்களும் ஸஜ்தா செய்யவில்லை.

2). ஸஜ்தா திலாவத் உடைய சிறப்பு

**عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا قَرَأَ ابْنُ آدَمَ السَّجْدَةَ فَسَجَدَ اعْتَزَلَ الشَّيْطَانُ يَبْكِي يَقُولُ يَا وَيْلِي أُمِرَ ابْنُ آدَمَ بِالسُّجُودِ فَسَجَدَ فَلَهُ الْجَنَّةُ وَأُمِرْتُ بِالسُّجُودِ فَأَبَيْتُ فَلِي النَّارُ رواه مسلم برقم ٨١**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஆதமின் மகன் ஸஜ்தா வசனத்தை ஓதி, ஸஜ்தா செய்தால் ஷைத்தான் விலகிச் சென்று அழுகின்றான். அவன் கூறுகிறான், எனக்கு ஏற்பட்ட நாசமே! ஸஜ்தா செய்வதற்கு ஆதமின் மகன் கட்டளையிடப்பட்டான். அவன் ஸஜ்தா செய்துவிட்டான். ஆகவே, அவனுக்கு சொர்க்கம் இருக்கிறது. ஸஜ்தா செய்வதற்கு நான் கட்டளையிடப்பட்டேன். ஆனால், நான் மறுத்துவிட்டேன். ஆகவே, எனக்கு நரகம்தான்.[132]

### ஸஜ்தா திலாவத் செய்கின்ற முறையும் அதன் விளக்கமும்

தக்பீர் கூறி ஒரே ஒரு ஸஜ்தா செய்ய வேண்டும். தொழுகையின் ஸுஜூதில் கூறுவதைப் போல் அதில் ஸுப்ஹான ரப்பியல் அஃலா என்று கூறவேண்டும். அல்லது ஸுஜூதில் ஓதப்படுகின்ற வேறு திக்ருகளையும் கூறலாம்.

அல்லது, பின்வருகின்ற நபிமொழியில் உள்ள துஆவையும் கூறலாம்.

**عَنْ عَائِشَةَ رضي الله عنها قَالَتْ كَانَ النَّبِيُّ ﷺ يَقُولُ فِي سُجُودِ الْقُرْآنِ بِاللَّيْلِ سَجَدَ وَجْهِي لِلَّذِي خَلَقَهُ وَشَقَّ سَمْعَهُ وَبَصَرَهُ بِحَوْلِهِ وَقُوَّتِهِ رواه الترمذي برقم ٣٣٤٧**

132. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 81

ஆயிஷா ﵂ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்கள் இரவில் தொழும்போது ஸஜ்தா திலாவத்தில்,

سَجَدَ وَجْهِي لِلَّذِي خَلَقَهُ وَشَقَّ سَمْعَهُ وَبَصَرَهُ بِحَوْلِهِ وَقُوَّتِهِ

என்று கூறுவார்கள்.

பொருள்: தனது வல்லமையாலும் ஆற்றலாலும் எனது முகத்தைப் படைத்து, அதில் கண், காது ஆகியவற்றை தனித்தனியாக அமைத்தவனுக்கு எனது முகம் ஸஜ்தா செய்துவிட்டது.[133]

## 4). குர்ஆனில் ஸஜ்தா திலாவத் செய்ய வேண்டிய இடங்கள்

கண்ணியமிக்க குர்ஆனில் ஸஜ்தா திலாவத் செய்ய வேண்டிய இடங்கள் மொத்தம் பதினைந்து ஆகும்.

1). சூரா அஃராஃப் 7, வசனம் 206.

2). சூரா ரஅத் 13, வசனம் 15.

3). சூரா நஹ்ல் 16, வசனம் 49, 50.

4). சூரா இஸ்ரா 17, வசனம் 107-109.

5). சூரா மர்யம் 19, வசனம் 58.

6). சூரா ஹஜ் 22, வசனம் 18.

7). சூரா ஹஜ் 22, வசனம் 77.

8). சூரா ஃபுர்கான் 25, வசனம் 60.

9). சூரா நம்ல் 27, வசனம் 25-26.

10). சூரா அஸ்ஸஜ்தா 32, வசனம் 15.

11) சூரா ஸாத் 38, வசனம் 24.

12). சூரா ஃபுஸ்ஸிலத் 41, வசனம் 37-38.

133. நூல்: திர்மிதி, எண்: 3347

13). சூரா நஜ்ம் 53, வசனம் 62.

14). சூரா இன்ஷிகாக் 84, வசனம் 20-21.

15). சூரா அலக் 96, வசனம் 19.

عَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ قَالَ ص لَيْسَ مِنْ عَزَائِمِ السُّجُودِ وَقَدْ رَأَيْتُ النَّبِيَّ ﷺ يَسْجُدُ فِيهَا رواه البخاري برقم ١٠٦٩

ஸாத் அத்தியாயத்தில் உள்ள வசனம் (24) ஸஜ்தா செய்வது அவசியமான இடங்களில் உள்ளது அல்ல. ஆனால், இதில் நபி ﷺ அவர்கள் ஸஜ்தா செய்ததை நான் பார்த்திருக்கின்றேன் என்று இப்னு அப்பாஸ் ﵄ கூறுகிறார்கள்.[134]

**ஆறாவது சட்டவிளக்கம்**

## ஸுஜூதுஷ் ஷுக்ர் – நன்றி செலுத்துவதற்காக செய்யப்படுகின்ற ஸஜ்தா

தனக்கு ஓர் அருட்கொடை கிடைத்தால், அல்லது தான் ஓர் ஆபத்திலிருந்து பாதுகாக்கப்பட்டால், அல்லது தனக்கு மகிழ்ச்சி தருகின்ற ஒரு செய்தியை யாராவது தன்னிடம் கூறினால் உடனே அல்லாஹ்விற்கு ஸுஜூத் செய்தவராக பூமியில் வீழ்ந்து விடுவது விரும்பத்தகுந்த ஒரு நல்ல அமலாகும். நபி ﷺ அவர்கள் இவ்வாறு செய்திருக்கின்றார்கள்.

இந்த வகை ஸஜ்தாவை செய்யும்போது கிப்லாவை முன்னோக்க வேண்டும் என்ற அவசியமில்லை. ஆனால், கிப்லாவை முன்னோக்கி இந்த ஸஜ்தாவை செய்வது சிறப்பாகும்.

عَنْ أَبِي بَكْرَةَ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا أَتَاهُ أَمْرٌ يَسُرُّهُ أَوْ بُشِّرَ بِهِ خَرَّ سَاجِدًا شُكْرًا لِلَّهِ تَبَارَكَ وَتَعَالَى رواه ابن ماجة برقم ١٣٨٤

---

134. நூல்: புகாரி, எண்: 1069

நபி ﷺ அவர்களிடம் அவர்களை மகிழ்விக்கின்ற ஒரு செய்தி வந்தால் அல்லது ஒரு செய்தியைக் கொண்டு அவர்களுக்கு நற்செய்தி அளிக்கப்பட்டால் அவர்கள் அல்லாஹ்விற்கு ஸுஜூது செய்தவர்களாக கீழே விழுந்து விடுவார்கள்.[135]

ஸஜ்தா திலாவத்துடைய சட்டம்தான் இந்த ஸஜ்தாவிற்கும் சட்டமாகும். அவ்வாறே ஸுஜூது செய்கின்ற முறையும் தன்மையும். (அதாவது, இந்த ஸஜ்தா சுன்னாவாகும். கட்டாயமல்ல. இந்த ஸஜ்தாவுடைய முறை தக்பீர் கூறி ஒரு ஸுஜூது செய்யவேண்டும். பிறகு தக்பீர் கூறி எழவேண்டும்.)

--------------------

135. அறிவிப்பாளர்: அபூ பகரா ؓ, நூல்: இப்னு மாஜா, எண்: 1384

*ஏழாவது பாடம்*

# الباب السابع في صلاة الجماعة
# ஜமாஅத் தொழுகை

இதில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்டவிளக்கம்**

## ஜமாஅத் தொழுகையின் சிறப்பும் அதன் சட்டமும்

1). மஸ்ஜிதுகளில் ஜமாஅத்தாக - கூட்டாக தொழுவது இஸ்லாமிய மார்க்கத்தின் மிகப் பெரிய அடையாளமாகும்.

கடமையான ஐந்து நேரத் தொழுகைகளை மஸ்ஜிதுகளில் ஜமாஅத்தாக - கூட்டாக நிறைவேற்றுவது வணக்க வழிபாடுகளில் மிக மகத்தான ஒன்றாகும் என்பதில் முஸ்லிம்கள் ஒருமித்த கருத்தில் இருக்கின்றனர்.

குறிப்பிட்ட நேரங்களில் ஒன்றுகூடி வழிபாடு செய்வதை இந்த உம்மத்திற்கு அல்லாஹ் மார்க்கமாக ஆக்கி இருக்கின்றான். அந்த அடிப்படையில் ஐந்து நேரத் தொழுகைகள், ஜுமுஆ தொழுகை, இரு பெருநாள் தொழுகைகள், கிரகண தொழுகை ஆகிய தொழுகைகளுக்கு ஒன்று கூடி தொழ வேண்டும் என்று மார்க்கம் கூறுகின்றது.

ஒன்றுகூடலில் மிக மகத்தானதும் மிகப் பெரியதும் முக்கியமானதும்

எதுவென்றால் அது அரஃபா மைதானத்தில் ஒன்று கூடுவதாகும். அரஃபாவில் ஒன்றுகூடுவது கொள்கை, வழிபாடு, இதர கடமைகள் என அனைத்திலும் இந்த இஸ்லாமிய சமுதாயத்தின் ஒருமைப்பாட்டை உணர்த்துகின்றது. இந்த ஒன்றுகூடல்கள் முஸ்லிம்களின் நன்மைகளுக்காக மார்க்கமாக்கப்பட்டுள்ளன.

இதனால், அவர்களுக்குள் ஒருவர் மற்றவருடன் உறவாட முடிகின்றது; ஒருவர் மற்றவரைப் பற்றி அறிய முடிகின்றது. இன்னும், இவை அல்லாத பல நாடுகளை சேர்ந்த, பலதரப்பட்ட கோத்திரங்களைச் சேர்ந்த முஸ்லிம் சமுதாயத்திற்கு தொடர்பான பல முக்கிய நன்மைகள் ஹஜ்ஜுடைய ஒன்றுகூடலில் உள்ளன.

அல்லாஹ் கூறுகின்றான்:

**يَا أَيُّهَا النَّاسُ إِنَّا خَلَقْنَاكُمْ مِنْ ذَكَرٍ وَأُنْثَى وَجَعَلْنَاكُمْ شُعُوبًا وَقَبَائِلَ لِتَعَارَفُوا إِنَّ أَكْرَمَكُمْ عِنْدَ اللهِ أَتْقَاكُمْ**

மக்களே! நிச்சயமாக நாம் உங்களை ஓர் ஆண், ஒரு பெண்ணிலிருந்து படைத்தோம். இன்னும் உங்களை பல நாட்டவர்களாக, பல கோத்திரங்களாக நாம் ஆக்கினோம், நீங்கள் ஒருவருக்கொருவர் அறிமுகமாகுவதற்காக. நிச்சயமாக உங்களில் அல்லாஹ்விடம் மிக கண்ணியமானவர் உங்களில் அல்லாஹ்வை அதிகம் அஞ்சுகின்றவர்தான். (அல்குர்ஆன் 49:13)

நபி ﷺ அவர்கள் ஜமாஅத் தொழுகைக்கு ஆர்வமூட்டியுள்ளார்கள்; அதன் சிறப்புகளையும் அதன் மகத்தான நன்மைகளையும் நற்கூலிகளையும் விவரித்துள்ளார்கள்.

**عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنهما أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ صَلَاةُ الْجَمَاعَةِ أَفْضَلُ مِنْ صَلَاةِ الْفَذِّ بِسَبْعٍ وَعِشْرِينَ دَرَجَةً رواه مسلم برقم ٦٥٠**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: ஜமாஅத்தாக தொழுவது தனியாக தொழுவதைவிட இருபத்தி ஏழு மடங்கு மிக சிறப்பானதாகும்.[136]

عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ صَلَاةُ الرَّجُلِ فِي الْجَمَاعَةِ تُضَعَّفُ عَلَى صَلَاتِهِ فِي بَيْتِهِ وَفِي سُوقِهِ خَمْسًا وَعِشْرِينَ ضِعْفًا وَذٰلِكَ أَنَّهُ إِذَا تَوَضَّأَ فَأَحْسَنَ الْوُضُوءَ ثُمَّ خَرَجَ إِلَى الْمَسْجِدِ لَا يُخْرِجُهُ إِلَّا الصَّلَاةُ لَمْ يَخْطُ خَطْوَةً إِلَّا رُفِعَتْ لَهُ بِهَا دَرَجَةٌ وَحُطَّ عَنْهُ بِهَا خَطِيئَةٌ فَإِذَا صَلَّى لَمْ تَزَلْ الْمَلَائِكَةُ تُصَلِّي عَلَيْهِ مَا دَامَ فِي مُصَلَّاهُ اللَّهُمَّ صَلِّ عَلَيْهِ اللَّهُمَّ ارْحَمْهُ وَلَا يَزَالُ أَحَدُكُمْ فِي صَلَاةٍ مَا انْتَظَرَ الصَّلَاةَ رواه البخاري برقم ٦٤٧

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் ஒரு மனிதர் ஜமாஅத்தில் தொழுவது தனது வீட்டில் தொழுவதை விடவும், தனது கடைத்தெருவில் தொழுவதை விடவும் இருபத்தி ஐந்து மடங்கு அதிகம் நன்மை உடையதாக இருக்கின்றது. அது ஏனெனில், அவர் உளுவை மிக அழகிய முறையில் செய்துவிட்டு தொழுகைக்காக மட்டும் பள்ளிக்கு புறப்பட்டு சென்றால் அவர் எடுத்து வைக்கின்ற ஒவ்வொரு கால் அடிக்கும் அவருக்கு ஒரு பதவி உயர்த்தப்படுகின்றது; ஒரு பாவம் அழிக்கப்படுகின்றது. அவர் தொழுதால் அவர் தொழுமிடத்தில் இருக்கின்றவரை, “அல்லாஹ்வே! அவர் மீது அருள் புரி! அவருக்கு கருணை காட்டு!” என்று வானவர்கள் அவருக்கு துஆ செய்கின்றார்கள். உங்களில் ஒருவர் தொழுகையை எதிர்பார்த்து இருக்கின்றவரை அவர் தொழுகையில்தான் நீடித்து இருக்கின்றார்.[137]

## 2). ஜமாஅத் தொழுகையின் சட்டம்

ஐந்து நேரத்தொழுகைகளை ஜமாஅத்தோடு நிறைவேற்றுவது “வாஜிப்”

136. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 650
137. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 647

கட்டாயமாகும். தொழுகைகளை ஜமாஅத்துடன் நிறைவேற்றுவது கட்டாயம் என்பதை குர்ஆனும் சுன்னாவும் மிகத் தெளிவாக அறிவிக்கின்றன.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَإِذَا كُنْتَ فِيهِمْ فَأَقَمْتَ لَهُمُ الصَّلَاةَ فَلْتَقُمْ طَائِفَةٌ مِنْهُمْ مَعَكَ

(நபியே!) நீர் அவர்களுடன் இருந்து அவர்களுக்கு தொழுகையை நடத்திக்கொடுத்தால் அவர்களில் ஒரு கூட்டம் உங்களுடன் நிற்கவும். (அல்குர்ஆன் 4:102)

போரில் அச்ச நிலையில் இருக்கும்போதே ஜமாஅத்தாக தொழ வேண்டும் என்று கட்டளை இடப்பட்டிருக்கும்போது பாதுகாப்பாக இருக்கின்ற நிலையில் ஜமாஅத் தொழுகை மிக கட்டாயம் என்பதை புரியமுடிகின்றது.

ஜமாஅத் தொழுகையைப் பற்றி நபிமொழிகள்

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ أَثْقَلَ الصَّلَاةِ عَلَى الْمُنَافِقِينَ صَلَاةُ الْعِشَاءِ وَصَلَاةُ الْفَجْرِ وَلَوْ يَعْلَمُونَ مَا فِيهِمَا لَأَتَوْهُمَا وَلَوْ حَبْوًا رواه ابن ماجة برقم ٧٨٩

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நிச்சயமாக நயவஞ்சகர்களுக்கு மிக சுமையான தொழுகை இஷா தொழுகையும் ஃபஜ்ர் தொழுகையும் ஆகும். அவர்கள் இந்த இரண்டில் உள்ள நன்மையை அறிந்தார்கள் என்றால் இந்த இரண்டிற்கும் தவழ்ந்தாவது வந்துவிடுவார்கள்.[138]

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ لَيْسَ صَلَاةٌ أَثْقَلَ عَلَى الْمُنَافِقِينَ مِنَ الْفَجْرِ وَالْعِشَاءِ وَلَوْ يَعْلَمُونَ مَا فِيهِمَا لَأَتَوْهُمَا وَلَوْ حَبْوًا لَقَدْ هَمَمْتُ أَنْ

138. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: இப்னு மாஜா, எண்: 789

آمُرَ الْمُؤَذِّنَ فَيُقِيمَ ثُمَّ آمُرَ رَجُلًا يَؤُمُّ النَّاسَ ثُمَّ آخُذَ شُعَلًا مِنْ نَارٍ فَأُحَرِّقَ عَلَى مَنْ لَا يَخْرُجُ إِلَى الصَّلَاةِ بَعْدُ رواه البخاري برقم ٦٥٧

நபி ﷺ கூறினார்கள்: ஃபஜ்ர் இன்னும் இஷாவைவிட நயவஞ்சகர்கள் மீது ஒரு சுமையான தொழுகை வேறு இல்லை. அவர்கள் இந்த இரண்டில் உள்ள நன்மையை அறிந்தால் தவழ்ந்தாவது வந்துவிடுவார்கள். நான் முஅத்தினுக்கு கட்டளையிட்டு அவர் அதான் இன்னும் இகாமத் கூற, மற்றொருவரை மக்களுக்கு தொழுகை நடத்தும்படி நான் கூறிவிட்டு, ஒரு நெருப்பு பந்தத்தை நான் எடுத்துச் சென்று, இதற்குப் பிறகு (-அதானுக்குப் பிறகு) மஸ்ஜிதுக்கு புறப்பட்டு வராதவர்களை எரித்துவிட திட்டமாக நாடுகின்றேன்.[139]

இந்த நபிமொழிகள், ஜமாஅத் தொழுகை வாஜிப் என்பதை அறிவிக்கின்றது.

ஏனெனில், ஜமாஅத்திற்கு வராதவரை நயவஞ்சகர் என்று முதல் நபிமொழியில் நபி ﷺ கூறினார்கள். ஒரு சுன்னத்தை செய்யாத காரணத்தால் ஒருவரை முனாஃபிக் (-நயவஞ்சகர்) என்று கூறமுடியாது. ஆகவே, ஜமாஅத் தொழுகை வாஜிப், அதனால்தான் அதற்கு வராமல் பின்தங்கிவிடுகின்றவரை முனாஃபிக் என்று கூறுகிறார்கள் என்பதை அறியமுடிகின்றது.

இரண்டாவது நபிமொழியில், ஜமாஅத்திற்கு வராமல் பின்தங்கி விடுகின்றவர்களை நபி ﷺ தண்டிக்க நாடினார்கள். தண்டனை என்பது வாஜிபை விடுவதற்குத்தான் கொடுக்கப்படும். அல்லாஹ்வைத் தவிர யாரும் யாரையும் நெருப்பால் தண்டிக்கக் கூடாது என்பதற்காகத்தான் நபி ﷺ அவ்வாறு செய்யவில்லை.

ஜமாஅத் தொழுகை யார் மீது கடமை இல்லையோ அப்படிப்பட்டவர்களும், உதாரணமாக: பெண்கள், சிறுவர்கள், வீடுகளில் இருப்பார்கள் என்பதால்தான் நபி ﷺ அவர்கள் அவ்வாறு செய்யவில்லை என்றும் சிலர் கூறுகிறார்கள்.

139. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி, எண்: 657

மற்றும் ஒரு நபிமொழி

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ جَاءَ أَعْمَى إِلَى رَسُولِ اللهِ ﷺ فَقَالَ إِنَّهُ لَيْسَ لِي قَائِدٌ يَقُودُنِي إِلَى الصَّلَاةِ فَسَأَلَهُ أَنْ يُرَخِّصَ لَهُ أَنْ يُصَلِّيَ فِي بَيْتِهِ فَأَذِنَ لَهُ فَلَمَّا وَلَّى دَعَاهُ قَالَ لَهُ أَتَسْمَعُ النِّدَاءَ بِالصَّلَاةِ قَالَ نَعَمْ قَالَ فَأَجِبْ رواه النسائي برقم ٨٤١

கண் பார்வையற்ற ஒருவர், ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் வந்தார். அவர் கூறினார், என்னை தொழுகைக்கு அழைத்து வருவதற்கு யாரும் இல்லை. ஆகவே, தனது வீட்டில் தான் தொழுவதற்கு நபி அவர்கள் அனுமதி அளிக்க வேண்டும் என்று அவர் கோரினார். நபி அவர்கள், அவருக்கு அனுமதி அளித்தார்கள். அவர் திரும்பிச் சென்றபோது நபி அவர்கள் அவரை அழைத்தார்கள். தொழுகைக்கு அதான் சொல்லப்படுவதை நீர் செவியுறுகின்றாயா என்று அவரிடம் கூறினார்கள். ஆம் என்று அவர் கூறினார். அப்படியென்றால் நீ அதானுக்கு பதில் அளி, (-மஸ்ஜிதுக்கு வா) என்று நபி ﷺ கூறினார்கள்.[140]

கண் பார்வை அற்ற இப்னு உம்மு மக்தூம் ؓ அவர்கள் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் ஜமாஅத்திற்கு தன்னை அழைத்து வருவதற்கு வழிகாட்டி சில நேரங்களில் இல்லாமல் போய்விடுவதால் தனக்கு வீட்டில் தொழுவதற்கு அனுமதி வழங்க கேட்டபோது நீங்கள் அதான் சப்தத்தை கேட்கின்றீர்களா என்று கூற, அவர்கள் கேட்கிறேன் என்று கூறியவுடன்,

لَا أَجِدُ لَكَ رُخْصَةً

அப்படி என்றால் நான் உனக்கு சலுகையை காணவில்லை என்று நபி ﷺ கூறியதாக வந்துள்ளது.[141]

140, அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: நசாயி, எண்: 841
141. அறிவிப்பாளர்: இப்னு உம்மு மக்தூம் ؓ, நூல்: அபூ தாவூத், எண் 465

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ مَنْ سَمِعَ النِّدَاءَ فَلَمْ يَأْتِهِ فَلَا صَلَاةَ لَهُ إِلَّا مِنْ عُذْرٍ رواه ابن ماجة برقم ٧٨٥**

நபி ﷺ கூறினார்கள்: யார் அதானை செவியுறுவாரோ, பிறகு, அவர் மஸ்ஜிதிற்கு வரவில்லையோ அவருக்கு தொழுகையே சேராது, தகுந்த காரணம் இருந்தாலே தவிர.[142]

**عَنْ عَبْدِ اللهِ ﵁ قَالَ مَنْ سَرَّهُ أَنْ يَلْقَى اللهَ غَدًا مُسْلِمًا فَلْيُحَافِظْ عَلَى هٰؤُلَاءِ الصَّلَوَاتِ حَيْثُ يُنَادَى بِهِنَّ فَإِنَّ اللهَ شَرَعَ لِنَبِيِّكُمْ ﷺ سُنَنَ الْهُدَى وَإِنَّهُنَّ مِنْ سُنَنِ الْهُدَى وَلَوْ أَنَّكُمْ صَلَّيْتُمْ فِي بُيُوتِكُمْ كَمَا يُصَلِّي هٰذَا الْمُتَخَلِّفُ فِي بَيْتِهِ لَتَرَكْتُمْ سُنَّةَ نَبِيِّكُمْ وَلَوْ تَرَكْتُمْ سُنَّةَ نَبِيِّكُمْ لَضَلَلْتُمْ وَمَا مِنْ رَجُلٍ يَتَطَهَّرُ فَيُحْسِنُ الطُّهُورَ ثُمَّ يَعْمِدُ إِلَى مَسْجِدٍ مِنْ هٰذِهِ الْمَسَاجِدِ إِلَّا كَتَبَ اللهُ لَهُ بِكُلِّ خَطْوَةٍ يَخْطُوهَا حَسَنَةً وَيَرْفَعُهُ بِهَا دَرَجَةً وَيَحُطُّ عَنْهُ بِهَا سَيِّئَةً وَلَقَدْ رَأَيْتُنَا وَمَا يَتَخَلَّفُ عَنْهَا إِلَّا مُنَافِقٌ مَعْلُومُ النِّفَاقِ وَلَقَدْ كَانَ الرَّجُلُ يُؤْتَى بِهِ يُهَادَى بَيْنَ الرَّجُلَيْنِ حَتَّى يُقَامَ فِي الصَّفِّ رواه مسلم برقم ٦٥٤**

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ﵁ கூறுகிறார்கள்: யாருக்கு நாளை மறுமையில் அல்லாஹ்வை, தான் முஸ்லிமாக இருக்கின்ற நிலையில் சந்திப்பது மகிழ்ச்சியளிக்குமோ அவர் இந்த தொழுகைகளை அதான் சொல்லப்படுகின்ற இடங்களில் -மஸ்ஜிதுகளில்- பேணுதலாக நிறைவேற்றட்டும். நிச்சயமாக அல்லாஹ் உங்கள் நபி ﷺ அவர்களுக்கு நேர்வழியின் சுன்னத்துகளை மார்க்கமாக்கியுள்ளான். நிச்சயமாக

142. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: இப்னு மாஜா, எண்: 785

இவை நேர்வழியின் சுன்னத்துகளாகும். இந்த பின்தங்குபவர் (-நயவஞ்சகர்) தனது வீட்டில் தொழுவதுபோன்று நீங்களும் உங்கள் வீடுகளில் தொழுதால் உங்கள் நபியின் சுன்னத்துகளை விட்டுவிடுவீர்கள். உங்கள் நபியின் சுன்னத்துகளை விட்டுவிட்டால் நீங்கள் வழிகெட்டுவிடுவீர்கள். யார் ஒருவர் அழகிய முறையில் உளு செய்து, இந்த மஸ்ஜிதுகளில் ஒரு மஸ்ஜிதை நோக்கி வருவாரோ அவர் எடுத்து வைக்கின்ற ஒவ்வொரு காலடி எட்டுக்கும் ஒரு நன்மையை அல்லாஹ் அவருக்கு எழுதுகின்றான்; அதன் மூலம் அவரை ஒரு பதவி உயர்த்துகின்றான்; அதன் மூலம் அவரைவிட்டும் ஒரு பாவத்தை அழிக்கின்றான். நான் எங்களை பார்த்திருக்கின்றேன், நயவஞ்சகர் என்று தெளிவாக அறியப்பட்ட முனாஃபிக்கைத் தவிர வேறு யாரும் ஜமாஅத் தொழுகையை விட்டு பின்தங்க மாட்டார். (முடியாத) ஒருவர் இரண்டு மனிதர்கள் தாங்களாக கொண்டுவரப்பட்டு வரிசையில் நிறுத்தப்படுவார்.[143]

ஜமாஅத் தொழுகை ஆண்கள் மீதுதான் வாஜிப் (-கட்டாயம்) ஆகும். பெண்கள் மீதும், பருவமடையாத சிறுவர்கள் மீதும் வாஜிப் அல்ல.

**عَنِ ابْنِ عُمَرَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا تَمْنَعُوا نِسَاءَكُمُ الْمَسَاجِدَ وَبُيُوتُهُنَّ خَيْرٌ لَهُنَّ رواه أبو داود برقم ٤٨٠**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்கள் பெண்களை மஸ்ஜிதுகளை விட்டும் தடுக்காதீர்கள். அந்த பெண்களுக்கு அவர்களுடைய வீடுகள்தான் சிறந்தவை.[144]

கணவனின் அனுமதியுடன், முழுமையான ஹிஜாப் உடன், பெண்கள் மஸ்ஜிதில் வந்து தொழுவதற்கு தடை ஏதும் இல்லை. ஒரு பெண் தான் மஸ்ஜிதிற்கு செல்வதில் ஃபித்னா - குழப்பத்தை உணர்ந்தால் மஸ்ஜிதிற்குச் செல்வதை அவள் தவிர்த்துக் கொள்வாள்.

143. நூல்: முஸ்லிம், எண்: 654
144. அறிவிப்பாளர்: இப்னு உமர் ؓ, நூல்: அபூ தாவூத், எண்: 480

யார் மீது ஜமாஅத் தொழுகை கடமையாகி விட்டதோ அந்த மனிதர் தனியாக தொழுதால் அவருடைய தொழுகை கூடிவிடும். ஆனால், அவர் தன் மீது கடமையான ஜமாஅத்தை தவறவிட்ட பாவத்திற்கு ஆளாகுவார்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## ஏற்கனவே தான் தொழுத தொழுகையை ஜமாஅத்துடன் மீண்டும் தொழவேண்டுமா?

ஒருவர் முன்பு தொழுது விட்டார். அவர் மஸ்ஜிதிற்கு வருகிறார். அங்கு ஜமாஅத் நடக்கின்றது. இப்போது, அவர் ஏற்கனவே தான் தொழுத தொழுகையை ஜமாஅத்துடன் மீண்டும் தொழவேண்டுமா?

இவர் மீது அது கட்டாயமல்ல. ஆனால், மீண்டும் ஜமாஅத்துடன் தொழுவது சுன்னாவாகும். முதலாவது தொழுதது ஃபர்ழாகவும், இரண்டாவது தொழுவது சுன்னாவாகவும் ஆகிவிடும்.

**عَنْ أَبِي ذَرٍّ ﵁ قَالَ قَالَ لِي رَسُولُ اللهِ كَيْفَ أَنْتَ إِذَا كَانَتْ عَلَيْكَ أُمَرَاءُ يُؤَخِّرُونَ الصَّلَاةَ عَنْ وَقْتِهَا قَالَ قُلْتُ فَمَا تَأْمُرُنِي قَالَ صَلِّ الصَّلَاةَ لِوَقْتِهَا فَإِنْ أَدْرَكْتَهَا مَعَهُمْ فَصَلِّ فَإِنَّهَا لَكَ نَافِلَةٌ رواه مسلم برقم ٦٤٨**

அபூ தர் ﵁ கூறுகிறார்கள்: தொழுகையை அதன் நேரத்தை விட்டும் தாமதப்படுத்துகின்ற அதிகாரிகள் உங்கள் மீது நியமிக்கப்பட்டு இருந்தால் நீ எப்படி நடந்துகொள்வாய் என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் என்னிடம் கூறினார்கள். நீங்கள் எனக்கு எதை ஏவுகிறீர்கள் என்று நான் கூறினேன். அவர்கள் கூறினார்கள்: தொழுகையை அதன் நேரத்தில் தொழுதுவிடு! பிறகு, நீ அந்த தொழுகையை அவர்களுடன் பெற்றுக்கொண்டால் அப்பொழுதும் நீ

தொழு! நிச்சயமாக அந்த தொழுகை உனக்கு நஃபிலாக -உபரியாக இருக்கும்.[145]

**عَنْ يَزِيدَ بْنِ الْأَسْوَدِ الْعَامِرِيِّ ﷺ قَالَ شَهِدْتُ مَعَ النَّبِيِّ ﷺ حَجَّتَهُ فَصَلَّيْتُ مَعَهُ صَلَاةَ الصُّبْحِ فِي مَسْجِدِ الْخَيْفِ قَالَ فَلَمَّا قَضَى صَلَاتَهُ وَانْحَرَفَ إِذَا هُوَ بِرَجُلَيْنِ فِي أُخْرَى الْقَوْمِ لَمْ يُصَلِّيَا مَعَهُ فَقَالَ عَلَيَّ بِهِمَا فَجِيءَ بِهِمَا تُرْعَدُ فَرَائِصُهُمَا فَقَالَ مَا مَنَعَكُمَا أَنْ تُصَلِّيَا مَعَنَا فَقَالَا يَا رَسُولَ اللهِ إِنَّا كُنَّا قَدْ صَلَّيْنَا فِي رِحَالِنَا قَالَ فَلَا تَفْعَلَا إِذَا صَلَّيْتُمَا فِي رِحَالِكُمَا ثُمَّ أَتَيْتُمَا مَسْجِدَ جَمَاعَةٍ فَصَلِّيَا مَعَهُمْ فَإِنَّهَا لَكُمَا نَافِلَةٌ رواه الترمذي برقم ٢٠٣**

யஸீது இப்னு அல்அஸ்வத் அல் ஆமிரி ரழி கூறுகிறார்கள்: நான் நபி ﷺ அவர்களுடன் அவர்களின் (இறுதி) ஹஜ்ஜில் கலந்துகொண்டேன். (மினாவின்) "மஸ்ஜிதுல் கைஃப்"ல் அவர்களுடன் நான் ஸுப்ஹு தொழுகை தொழுதேன். அவர்கள் தனது தொழுகையை முடித்து திரும்பியபோது கூட்டத்தின் இறுதியில் நபியவர்களுடன் தொழாமல் இருவர் இருந்ததை அவர்கள் கவனித்தார்கள். அவ்விருவரையும் தன்னிடம் அழைத்து வரும்படி கூறினார்கள். அவ்விருவரும் அவர்களின் புஜங்கள் நடுங்கியவர்களாக நபி அவர்களிடம் அழைத்து வரப்பட்டார்கள். நீங்கள் இருவரும் எங்களுடன் ஏன் தொழவில்லை என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் எங்கள் கூடாரங்களில் தொழுது விட்டோம் என்று அவ்விருவரும் கூறினார்கள். நபி அவர்கள் கூறினார்கள்: அப்படி செய்யாதீர்கள்! நீங்கள் உங்கள் கூடாரங்களில் (இருப்பிடங்களில்) தொழுதுவிட்டு, பிறகு, ஜமாஅத் நடைபெறுகின்ற ஒரு மஸ்ஜிதிற்கு வந்தால் அவர்களுடன் நீங்களும் தொழுங்கள்! நிச்சயமாக இது உங்களுக்கு நஃபில் -உபரியான தொழுகையாக இருக்கும்.[146]

145. அறிவிப்பாளர்: அபூ தர் ரழி, நூல்: முஸ்லிம், எண்: 648
146. அறிவிப்பாளர்: யஸீது இப்னு அல்அஸ்வத் அல்ஆமிரி ரழி, நூல்: திர்மிதி, எண்: 203

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## ஜமாஅத் தொழுகைக்கு குறைந்தது எத்தனை நபர்கள் தேவை?

ஜமாஅத் தொழுகைக்கு குறைந்தபட்சம் இருவர் தேவை. இதில் எவ்வித கருத்து வேற்றுமையும் இல்லை.

عَنْ مَالِكِ بْنِ الْحُوَيْرِثِ ﷺ قَالَ أَتَيْتُ النَّبِيَّ ﷺ أَنَا وَصَاحِبٌ لِي فَلَمَّا أَرَدْنَا الْإِقْفَالَ مِنْ عِنْدِهِ قَالَ لَنَا إِذَا حَضَرَتْ الصَّلَاةُ فَأَذِّنَا ثُمَّ أَقِيمَا وَلْيَؤُمَّكُمَا أَكْبَرُكُمَا رواه مسلم برقم ٦٧٤

மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ் ﷺ கூறுகிறார்: நானும் எனது தோழர் ஒருவரும் நபி ﷺ அவர்களிடம் வந்தோம். நான் அவர்களிடமிருந்து திரும்பிப்போக நாடியபோது நபி அவர்கள் எங்களுக்கு கூறினார்கள்: தொழுகை(யின் நேரம்) வந்துவிட்டால் நீங்கள் இருவரும் அதான் சொல்லுங்கள்! பிறகு, நீங்கள் இருவரும் இகாமத் சொல்லுங்கள்! உங்கள் இருவரில் வயதில் பெரியவர் உங்களுக்கு இமாமாக நின்று தொழுகை நடத்தட்டும்.[147]

கருத்து: நீங்கள் இருவரும் அதான் சொல்லுங்கள்! பிறகு, நீங்கள் இருவரும் இகாமத் சொல்லுங்கள்! என்பதன் பொருள் ஒவ்வொருவரும் அதானும் இகாமத்தும் கூறுங்கள் என்பதல்ல. அதாவது உங்களில் யார் வேண்டுமானாலும் அதான், இகாமத் கூறுங்கள் என்று பொருளாகும்.

**நான்காவது சட்டவிளக்கம்**

## ஜமாஅத் தொழுகையை எப்படி அடைவது?

தொழுகையின் ஒரு ரக்அத் கிடைத்துவிட்டால் ஜமாஅத் கிடைத்ததாக

147. அறிவிப்பாளர்: மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ் ﷺ, நூல்: முஸ்லிம், எண்: 674

ஆகிவிடும். யார் ஒருவர் தனது இமாமை ருகூஃ உடைய நிலையில் சந்தேகமின்றி பெற்றுக்கொண்டு, அவருடன் நிம்மதியாக ருகூஃ செய்து விடுகிறாரோ அவர் அந்த ரக்அத்தையும் ஜமாஅத்தையும் பெற்றவராக ஆகிவிடுவார்.

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا جِئْتُمْ إِلَى الصَّلَاةِ وَنَحْنُ سُجُودٌ فَاسْجُدُوا وَلَا تَعُدُّوهَا شَيْئًا وَمَنْ أَدْرَكَ الرَّكْعَةَ فَقَدْ أَدْرَكَ الصَّلَاةَ

**رواه أبو داود برقم ٧٥٩**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: நீங்கள் தொழுகைக்கு வரும்போது நாங்கள் ஸுஜூதில் இருந்தால் நீங்களும் ஸுஜூத் செய்யுங்கள்! ஆனால், அதை கணக்கில் எடுக்காதீர்கள். யார் ருகூஃஐ பெறுவாரோ அவர்தான் தொழுகையைப் பெறுவார்.[148]

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## ஜமாஅத் தொழுகையை விடுவது யாருக்கு அனுமதி அளிக்கப்பட்டுள்ளது?

பின்வருகின்ற சூழ்நிலைகளில் ஜமாஅத்தை விடுவது அனுமதிக்கப் படுகின்றது.

1). ஜமாஅத் தொழுகைக்கு செல்வதில் சிரமத்தை சந்திக்கக்கூடிய நோயாளி.

அல்லாஹ் கூறுகின்றான்:

لَيْسَ عَلَى الْأَعْمَى حَرَجٌ وَلَا عَلَى الْأَعْرَجِ حَرَجٌ وَلَا عَلَى الْمَرِيضِ حَرَجٌ

குருடர் மீது குற்றமில்லை, நொண்டியின் மீது குற்றமில்லை, நோயாளியின் மீது குற்றமில்லை. (அல்குர்ஆன் 48:17)

148. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 759

நபி ﷺ அவர்கள் நோயுற்றபோது அவர்களால் ஜமாஅத்தில் கலந்து கொள்ள முடியாமல் ஆகிவிட்டது. ஆகவே, அபூ பக்ர் ؓ அவர்கள் மக்களுக்கு தொழுகை நடத்தும்படி நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[149]

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ؓ கூறுகிறார்கள்:

لَقَدْ رَأَيْتُنَا وَمَا يَتَخَلَّفُ عَنِ الصَّلَاةِ إِلَّا مُنَافِقٌ قَدْ عُلِمَ نِفَاقُهُ أَوْ مَرِيضٌ

யாருடைய நயவஞ்சகம் அறியப்பட்டுள்ளதோ அந்த முனாஃபிக், அல்லது நோயாளியைத் தவிர தொழுகையை விட்டு யாரும் பின்தங்காமல் இருக்கின்ற நிலையில்தான் நான் எங்களை பார்த்திருக்கின்றேன்.[150]

அவ்வாறே, வெளியில் செல்வதால் நோய் தாக்கிவிடும் என்ற பயம் இருந்தாலும் அவர் ஜமாஅத்தை விடுவதற்கு அனுமதிக்கப்படுவார்.

2). மலம், ஜலம், அவசரமாக வந்துவிட்டால் அல்லது உணவின் நாட்டம் இருப்பதுடன் உணவு முன்னால் வந்துவிட்டால் ஜமாஅத்தை விடுவது அனுமதிக்கப்படுகின்றது.

لَا صَلَاةَ بِحَضْرَةِ الطَّعَامِ وَلَا هُوَ يُدَافِعُهُ الْأَخْبَثَانِ

ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்கள் கூறினார்கள்: உணவு ஆஜரானப் பிறகும், ஒருவருக்கு மலம் ஜலம் அவசரமாக வரும்போதும் தொழுகை இல்லை (-தொழுவது கூடாது).[151]

3). காணாமல் போன பொருள் அல்லது மனிதர் வந்துவிடுவார் என்ற ஆதரவில் எதிர்பார்த்து இருப்பவரும் ஜமாஅத் தொழுகையை விடலாம். மேலும், பொருளுக்கு பாதுகாப்பாக இருப்பவர் பொருளை விட்டுவிட்டு ஜமாஅத் தொழுகைக்குச் சென்றால் பொருள் தொலைந்து விடும் என்ற பயம் இருந்தால், அவரும் ஜமாஅத்தை விட்டுவிடலாம்.

149. அறிவிப்பாளர்: அபூ மூசா ؓ, நூல்: புகாரி, எண்: 637

150. நூல்: முஸ்லிம், எண்: 654

151. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: முஸ்லிம், எண்: 560

عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ سَمِعَ الْمُنَادِيَ فَلَمْ يَمْنَعْهُ مِنْ اتِّبَاعِهِ عُذْرٌ قَالُوا وَمَا الْعُذْرُ قَالَ خَوْفٌ أَوْ مَرَضٌ لَمْ تُقْبَلْ مِنْهُ الصَّلَاةُ الَّتِي صَلَّى رواه أبو داود برقم ٤٦٤

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் அதான் சொல்பவரின் அதானை செவியுற்று அதை பின்பற்றிச் சென்று தொழ அவரை தகுந்த காரணம் ஏதும் தடுக்கவில்லையோ அவர் தொழுத தொழுகை அவரிடமிருந்து ஏற்கப்படாது. மக்கள் கூறினார்கள்: தகுந்த காரணம் என்றால் எது?. நபி رضي الله عنه கூறினார்கள்: (தகுந்த காரணம் என்பது) பயம் அல்லது நோய் ஆகும்.[152]

ஆகவே, இவ்வாறு தனது உயிர் மீது, அல்லது தனது செல்வத்தின் மீது, அல்லது தனது மனைவியின் மீது, அல்லது தனது பிள்ளைகளின் மீது ஒருவர் பயந்தால், அவர் ஜமாஅத்தை விடுவதற்கு அனுமதிக்கப்படுவார். பயம் என்பதும் ஒரு **عذر** -தகுந்த காரணம் ஆகும்.

4). மழை, அல்லது பனி, அல்லது இரவின் இருள் கடுமையாக இருந்து, குளிர்ந்த காற்றும் வீசினால் ஜமாஅத்தை விடுவது அனுமதிக்கப்படுகின்றது.

عَنْ نَافِعٍ رضي الله عنه أَنَّ ابْنَ عُمَرَ رضي الله عنه أَذَّنَ بِالصَّلَاةِ فِي لَيْلَةٍ ذَاتِ بَرْدٍ وَرِيحٍ ثُمَّ قَالَ أَلَا صَلُّوا فِي الرِّحَالِ ثُمَّ قَالَ إِنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يَأْمُرُ الْمُؤَذِّنَ إِذَا كَانَتْ لَيْلَةٌ ذَاتُ بَرْدٍ وَمَطَرٍ يَقُولُ أَلَا صَلُّوا فِي الرِّحَالِ رواه البخاري برقم ٦٦٦

இப்னு உமர் رضي الله عنه அவர்கள் குளிரும் காற்றும் நிறைந்த ஓர் இரவில் அதான் கூறினார்கள். பிறகு (அதை தொடர்ந்து) உங்கள் இல்லங்களில் நீங்கள் தொழுது கொள்ளுங்கள்! என்று கூறினார்கள். பிறகு, கூறினார்கள்: நிச்சயமாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் குளிரும்

152. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنهما, நூல்: அபூ தாவூத், எண்: 464

மழையும் உள்ள இரவில் " أَلَا صَلُّوا فِي الرِّحَالِ " உங்கள் இல்லங்களில் தொழுது கொள்ளுங்கள்! என்று கூறும்படி அதான் சொல்பவருக்கு கட்டளையிடுபவர்களாக இருந்தார்கள்.[153]

5). (நபிமொழிகளிலும் நபித்தோழர்களின் சான்றுகளிலும் உள்ள அளவைவிட) மிக அதிகமான அளவு இமாம் தொழுகை நீட்டி தொழ வைத்தால் அப்போதும் ஜமாஅத்தை விடுவது கூடும்.

**عن جَابِرِ بْن عَبْدِ اللهِ ﵁ قَالَ كَانَ مُعَاذُ بْنُ جَبَلٍ يُصَلِّي مَعَ النَّبِيِّ ﷺ ثُمَّ يَرْجِعُ فَيَؤُمُّ قَوْمَهُ فَصَلَّى الْعِشَاءَ فَقَرَأَ بِالْبَقَرَةِ فَانْصَرَفَ الرَّجُلُ فَكَأَنَّ مُعَاذًا تَنَاوَلَ مِنْهُ فَبَلَغَ النَّبِيَّ ﷺ فَقَالَ فَتَّانٌ فَتَّانٌ فَتَّانٌ ثَلَاثَ مِرَارٍ أَوْ قَالَ فَاتِنًا فَاتِنًا فَاتِنًا وَأَمَرَهُ بِسُورَتَيْنِ مِنْ أَوْسَطِ الْمُفَصَّلِ رواه البخاري برقم ٧٠١**

முஆத் ﵁ அவர்கள் நபி ﷺ அவர்களுடன் தொழுவார்கள். பிறகு திரும்பச் சென்று தனது மக்களுக்கு தொழவைப்பார்கள். (ஒரு நாள்) இஷா தொழுகையில் சூரா பகரா ஓதி தொழ வைத்தார்கள். ஒரு தோழர் (அவருக்கு அது சிரமமாக இருந்ததால்) அவர் திரும்பிச் சென்றார். அவரை முஆத் அவர்கள் குறை கூறினார்கள். இந்த செய்தி நபி ﷺ அவர்களிடம் வர, நபி ﷺ அவர்கள் முஆத் அவர்களை கடிந்து கொண்டார்கள். குழப்பம் செய்பவரா! குழப்பம் செய்பவரா! குழப்பம் செய்பவரா! என்று கூறினார்கள். பிறகு அவ்சாத் அல்முஃபஸ்ஸலிலிருந்து[154] ஓதுமாறு முஆது ﵁ அவர்களுக்கு அறிவுரை கூறினார்கள்.[155]

153. நூல்: புகாரி, எண்: 666

154. **திவால் முபஸ்ஸல்** என்பது சூரா கஃப்' (50)ல் இருந்து சூரா வல்முர்ஸலாத் (77) வரை ஆகும். **அவ்சாத் முபஸ்ஸல்** என்பது சூரா அந்நபா (78)ல் இருந்து சூரா அல்லைல் (92) வரை ஆகும். **கிஸார் முபஸ்ஸல்** என்பது சூரா வழ்ழுஹா (93)ல் இருந்து சூரா அந்நாஸ் (114) வரை ஆகும். இவ்வாறு இமாம் அலாவுத்தீன் அல்மர்தாவி ﵀ (இறப்பு ஹிஜ்ரி 885) அவர்கள் தமது நூல் **الإنصاف في معرفة الراجح من الخلاف** 'அல் இன்ஸாஃப்'ல் கூறியுள்ளார்கள். இது விஷயமாக அறிஞர்களிடம் இன்னும் சில மாறுபட்ட கருத்துகள் உள்ளன.

155. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் ﵁, நூல்: புகாரி, எண்: 701. பாடம்: **بَاب إِذَا طَوَّلَ الْإِمَامُ وَكَانَ لِلرَّجُلِ حَاجَةٌ فَخَرَجَ فَصَلَّى** இமாம் தொழுகையை நீட்டித்

6). பயணத்தில் இருக்கும்போது உடன் இருக்கின்ற பயணிகள் தன்னை விட்டுவிட்டு சென்று விடுவார்கள் என்று பயம் ஏற்பட்டால் ஜமாஅத்தை விடுவது கூடும். இந்த நிலையில் ஜமாஅத்துடன் தொழுதால், தான் தவறி விடுவோமோ, தன்னை விட்டு தோழர்கள் சென்று விடுவார்களோ என்ற பயத்தினால் மன ஓர்மையுடன் தொழ முடியாது.

7). உறவினர் ஒருவர் மரணத் தருவாயில் இருக்க, தான் ஜமாஅத் தொழுகைக்கு சென்றுவிட்டால் அந்த நேரத்தில் அவர் மரணித்து விட வாய்ப்பு இருக்கிறது, அந்த நேரத்தில் அவருடன் இருக்க முடியாமல் போய்விடும், ஷஹாதா சொல்லிக்கொடுக்க முடியாமல் ஆகிவிடும் என்று பயந்தாலும் ஜமாஅத்தை விடுவது கூடும்.

8). கடன் கொடுத்தவர் தன்னை அவருடைய கட்டுப்பாட்டில் வைத்திருக்கின்றார். கடனை நிறைவேற்ற எதுவும் இல்லை. இப்படிப்பட்டவரும் ஜமாஅத்தை விடுவதற்கு அனுமதிக்கப்படுவார்.

**ஆறாவது சட்டவிளக்கம்**

## ஒரே மஸ்ஜிதில் இரண்டாவது ஜமாஅத் நடத்துவது

மஸ்ஜிதில் பணியில் இருக்கின்ற இமாமுடன் சிலருக்கு ஜமாஅத் தவறிவிட்டால் அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து இரண்டாவதாக ஜமாஅத் வைத்து அதே மஸ்ஜிதில் தொழுவது கூடும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

وَإِنَّ صَلَاةَ الرَّجُلِ مَعَ الرَّجُلِ أَزْكَى مِنْ صَلَاتِهِ وَحْدَهُ

---

தொழவைக்க, ஒருவருக்கு ஒரு தேவை இருந்து அவர் (மஸ்ஜிதிலிருந்து) வெளியேறி சென்று தொழுகிறார்.

ஒரு மனிதர் இன்னொரு மனிதருடன் சேர்ந்து தொழுவது நிச்சயமாக அவர் தனியாக தொழுவதைவிட அதிக நன்மையுடையதாகும்.[156]

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﷺ أَنَّ رَجُلًا دَخَلَ الْمَسْجِدَ وَقَدْ صَلَّى رَسُولُ اللَّهِ ﷺ بِأَصْحَابِهِ فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ مَنْ يَتَصَدَّقُ عَلَى هَذَا فَيُصَلِّيَ مَعَهُ فَقَامَ رَجُلٌ مِنْ الْقَوْمِ فَصَلَّى مَعَهُ رواه أحمد برقم ١٠٩٨٠

ஒருவர் மஸ்ஜிதில் நுழைந்தார். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தமது தோழர்களுடன் தொழுது முடித்து இருந்தார்கள். அப்போது ரஸூலுல்லாஹ், இவருக்கு யார் தர்மம் செய்வார் என்று கூற, மக்களில் இருந்து ஒருவர் எழுந்து அவருடன் சேர்ந்து தொழுதார்.[157]

இவ்வாறுதான் கடைத்தெருக்களில், பாதைகளில் உள்ள மஸ்ஜிதுகளிலும் இரண்டாவது ஜமாஅத் வைத்து தொழுவது குற்றமில்லை. குறிப்பாக, மஸ்ஜிதில் இமாம் யாரும் பணியமர்த்தப்படாமல் இருந்தால் அந்த பள்ளிக்கு வழிப்போக்கர்கள், பயணிகள், கடைக்காரர்கள் தங்கள் வசதிக்கு ஏற்ப ஜமாஅத்தாக தொழுதுவிட்டு செல்வது குற்றமில்லை.

முஹல்லாவாசிகள் வேண்டுமென்றே சோம்பேறித்தனமாக இருந்துவிட்டு, முஹல்லாக்களில் உள்ள மஸ்ஜிதுகளில் இரண்டாவது, மூன்றாவது ஜமாஅத் நடத்துவது கூடாது. இது ஒற்றுமையை குலைப்பதும் அசல் ஜமாஅத்தை புறக்கணிப்பதும் அலட்சியம் செய்வதும் ஆகும். இது இப்படியே சென்றால் மக்கள் தொழுகையை அதன் நேரத்தை விட்டு தாமதப்படுத்த வழி ஏற்பட்டுவிடும்.

**ஏழாவது சட்டவிளக்கம்**

## தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்ட பின்னர் (சுன்னத்) தொழுவது

156. அறிவிப்பாளர்: உபை இப்னு கஅப் ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 467
157. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ﵁, நூல்: முஸ்னத் அஹ்மது, எண்: 10980

ஃபர்ழான தொழுகையின் ஜமாஅத்துக்கு இகாமத் கூற ஆரம்பித்து விட்டால் புதிதாக ஒரு நஃபில் (-சுன்னத்) தொழுகையை ஆரம்பிக்கக் கூடாது.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ إِذَا أُقِيمَتْ الصَّلَاةُ فَلَا صَلَاةَ إِلَّا الْمَكْتُوبَةُ رواه مسلم برقم ٧١٠**

நபி ﷺ கூறினார்கள்: தொழுகைக்கு இகாமத் கூறப்பட்டால் ஃபர்ழான தொழுகையைத் தவிர வேறு தொழுகை (தொழுவது) கூடாது.[158]

**عَنْ عَبْدِ اللهِ بْنِ مَالِكٍ ابْنِ بُحَيْنَةَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ مَرَّ بِرَجُلٍ يُصَلِّي وَقَدْ أُقِيمَتْ صَلَاةُ الصُّبْحِ فَكَلَّمَهُ بِشَيْءٍ لَا نَدْرِي مَا هُوَ فَلَمَّا انْصَرَفْنَا أَحَطْنَا نَقُولُ مَاذَا قَالَ لَكَ رَسُولُ اللهِ ﷺ قَالَ قَالَ لِي يُوشِكُ أَنْ يُصَلِّيَ أَحَدُكُمْ الصُّبْحَ أَرْبَعًا رواه مسلم برقم ٧١١**

ஸுப்ஹு தொழுகைக்கு இகாமத் கூறப்பட்ட பின்னர் தொழ ஆரம்பித்த ஒரு மனிதரை ரஸூலுல்லாஹ் ﷺ கடந்து வந்தார்கள். அவரிடம் ஏதோ பேசினார்கள். ஆனால் அது என்ன என்று நாங்கள் அறியமாட்டோம். நாங்கள் தொழுதுமுடித்த போது அவரை சுற்றிக்கொண்டு ரஸூலுல்லாஹ் ﷺ உன்னிடம் என்ன கூறினார்கள் என்று கூறினோம். அவர் கூறினார்: உங்களில் ஒருவர் ஸுப்ஹு தொழுகையை நான்கு ரக்அத் தொழப் போகிறாரோ?![159]

ஒருவர் சுன்னத் தொழுது கொண்டிருக்கின்ற நிலையில் தொழுகைக்கு இகாமத் கூறப்பட்டு விட்டால், அவர் அந்த தொழுகையை மிக சுருக்கமாக தொழுது முடித்துவிட்டு இமாமுடன் சேரவேண்டும்.

158. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 710

159. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மாலிக் இப்னு புஜைனா ﵁, நூல்; முஸ்லிம், எண்: 711

தக்பீரத்துல் இஹ்ராமை அடைய அவர் முயற்சிக்க வேண்டும். ஃபர்ழான தொழுகையில் சேர்வதற்கு அவர் தீவிரம் காட்ட வேண்டும்.

ஆனால், அறிஞர்கள் சிலர் கூறுவதாவது: முதல் ரக்அத்தில் இருந்தால் அதை அப்படியே முடித்துவிட்டு ஜமாஅத்தில் சேர்ந்து விட வேண்டும். இரண்டாவது ரக்அத்தில் இருந்தால் மட்டும் அவர் அதை சுருக்கமாக நிறைவேற்றிவிட்டு ஜமாஅத்தில் சேர வேண்டும்.[160]

--------------------

160. இதுதான் மிக ஏற்றமான கூற்றாகும்.

எட்டாவது பாடம்

## الباب الثامن في الإمامة في الصلاة

## தொழுகைக்கு இமாமத் செய்வது

தொழுகைக்கு இமாமத் செய்வது -தொழுகையை முன்னின்று நடத்துவது, அப்படி நடத்தக்கூடியவரை பின்பற்றி மக்கள் தங்கள் தொழுகையை நிறைவேற்றுவது.

இதில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்டவிளக்கம்:**

## இமாமத்திற்கு யார் அதிகம் தகுதியானவர்?

இது குறித்து நபி ﷺ அவர்களின் பின்வரும் நபிமொழி தெளிவுபடுத்துகிறது.

**عَنْ أَبِي مَسْعُودٍ الْأَنْصَارِيِّ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ يَؤُمُّ الْقَوْمَ أَقْرَؤُهُمْ لِكِتَابِ اللهِ فَإِنْ كَانُوا فِي الْقِرَاءَةِ سَوَاءً فَأَعْلَمُهُمْ بِالسُّنَّةِ فَإِنْ كَانُوا فِي السُّنَّةِ سَوَاءً فَأَقْدَمُهُمْ هِجْرَةً فَإِنْ كَانُوا فِي الْهِجْرَةِ سَوَاءً فَأَقْدَمُهُمْ سِلْمًا وَلَا يَؤُمَّنَّ الرَّجُلُ الرَّجُلَ فِي سُلْطَانِهِ وَلَا يَقْعُدْ فِي بَيْتِهِ عَلَى تَكْرِمَتِهِ إِلَّا بِإِذْنِهِ رواه مسلم برقم ٦٧٣**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: மக்களுக்கு அவர்களில் அல்லாஹ்வின் வேதத்தை அதிகம் கற்றவர் இமாமத் செய்வார். அவர்கள் குர்ஆனை கற்றதில் சமமாக இருந்தால் அவர்களில் ஸுன்னாவை அதிகம் அறிந்தவர் தொழுகை நடத்துவார். அவர்கள் சுன்னாவின் ஞானத்திலும் சமமாக இருந்தால் அவர்களில் ஹிஜ்ரத்தில் முந்தியவர் தொழுகை நடத்துவார். அவர்கள் ஹிஜ்ரத்திலும் சமமாக இருந்தால் அவர்களில் இஸ்லாமை தழுவியதில் முந்தியவர் தொழுகை நடத்துவார். ஒருவரின் அதிகாரத்தில் யாரும் அவருக்கு இமாமத் செய்யமாட்டார். ஒருவரின் வீட்டில் அவருடைய தலையணையில் அவருடைய அனுமதியின்றி யாரும் உட்கார மாட்டார்.[161]

இந்த நபிமொழியின் நோக்கமாவது: முஸ்லிம்களுக்கு தொழுகை நடத்த தகுதியுள்ளவர்கள் யார் என்பதை வரிசைப்படி விவரிப்பதாகும்.

**முதலாமவர்**: குர்ஆனை மிக திருத்தமாக, மிக சரியாக பரிபூரணமான முறையில் ஓதுகின்றவர் ஆவார். அத்துடன் அவர் தொழுகை தொடர்பான சட்டங்களையும் அறிந்திருக்க வேண்டும்.

ஒருவர் குர்ஆனை நன்றாக ஓத அறிந்திருக்கின்றார். ஆனால் அவருக்கு தொழுகையின் சட்டங்கள் அதிகம் தெரியாது. மற்றொருவர் முந்தியவரை விட குர்ஆன் ஓதுவதில் மிகவும் தேர்ச்சி பெற்றவராக இல்லையென்றாலும் தொழுகையின் சட்டங்களை நன்கு அறிந்திருக்கின்றார் என்றால் இவரைத்தான் இமாமத்திற்கு முற்படுத்த வேண்டும். ஏனெனில், தொழவைப்பதற்கு குர்ஆனை நன்கு ஓத தெரிந்திருப்பதை விட தொழுகை சம்பந்தமான சட்டங்களை அறிந்திருப்பதுதான் மிகவும் அவசியத் தேவையாகும்.

**இரண்டாமவர்**: நபி ﷺ அவர்களின் ஸுன்னாவை நன்கு கற்ற மார்க்க ஞானம் உள்ளவர்.

இரு இமாம்கள் இருக்க, அந்த இருவரும் குர்ஆனை ஓதுவதில் சரிசமமாக இருந்தால் அவர்களில் யார் ஸுன்னாவை

161. அறிவிப்பாளர்: அபூ மஸ்வூத் அல்அன்ஸாரி ؓ, நூல்: முஸ்லிம், எண்: 673

அதிகம் கற்றுத்தேர்ந்தவராக இருப்பாரோ அவர் இமாமத்திற்கு முற்படுத்தப்படுவார். ஏனெனில், நபி கூறினார்கள்:

فَإِنْ كَانُوا فِي الْقِرَاءَةِ سَوَاءً فَأَعْلَمُهُمْ بِالسُّنَّةِ

அவர்கள் குர்ஆனை கற்றதில் சமமாக இருந்தால் அவர்களில் ஸுன்னாவை அதிகம் அறிந்தவர் தொழுகை நடத்துவார்.

**மூன்றாமவர்**: குர்ஆன் ஓதுவதிலும் சுன்னாவை அறிந்திருப்பதிலும் எல்லோரும் சமமாக இருந்தால் அப்போது, ஹிஜ்ரத்தில் முந்தியவர் முற்படுத்தப்படுவார். அதாவது குஃப்ர் - நிராகரிப்பு நிறைந்த நாட்டை விட்டு இஸ்லாம் மிகைத்துள்ள நாட்டிற்கு ஹிஜ்ரா செய்து - குடிபெயர்ந்து யார் வந்தாரோ அவர் முற்படுத்தப்படுவார்.

**நான்காமவர்**: எல்லோரும் ஹிஜ்ரத்தில் சமமாக இருந்தால் அவர்களில் யார் இஸ்லாமை முதலில் ஏற்றாரோ அவரை முற்படுத்த வேண்டும்.

**ஐந்தாமவர்**: மேற்கூறப்பட்ட தன்மைகளில் எல்லோரும் சமமாக இருந்தால் வயதில் மூத்தவரை முற்படுத்த வேண்டும். ஏனெனில், மேற்குறிப்பிட்ட நபிமொழியில் நபி ﷺ கூறினார்கள்:

فَإِنْ كَانُوا فِي الْهِجْرَةِ سَوَاءً فَأَقْدَمُهُمْ سِلْمًا

அவர்கள் ஹிஜ்ரத்திலும் சமமாக இருந்தால் அவர்களில் இஸ்லாமை தழுவியதில் முந்தியவர் தொழுகை நடத்துவார்.

இந்த நபிமொழியின் மற்றோர் அறிவிப்பில் வந்துள்ளது:

فَإِنْ كَانُوا فِي الْهِجْرَةِ سَوَاءً فَلْيَؤُمَّهُمْ أَكْبَرُهُمْ سِنًّا

அவர்கள் ஹிஜ்ரத்திலும் சமமாக இருந்தால் அவர்களில் வயதால் பெரியவர் தொழுகை நடத்துவார்.[162]

162. நூல்: முஸ்லிம், எண்: 673

மற்றொரு நபிமொழியில் வந்துள்ளது:

**عَنْ مَالِكِ بْنِ الْحُوَيْرِثِ ﷺ أَتَيْتُ النَّبِيَّ ﷺ فِي نَفَرٍ مِنْ قَوْمِي فَأَقَمْنَا عِنْدَهُ عِشْرِينَ لَيْلَةً وَكَانَ رَحِيمًا رَفِيقًا فَلَمَّا رَأَى شَوْقَنَا إِلَى أَهَالِينَا قَالَ ارْجِعُوا فَكُونُوا فِيهِمْ وَعَلِّمُوهُمْ وَصَلُّوا فَإِذَا حَضَرَتْ الصَّلَاةُ فَلْيُؤَذِّنْ لَكُمْ أَحَدُكُمْ وَلْيَؤُمَّكُمْ أَكْبَرُكُمْ رواه البخاري برقم ٦٢٨**

மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ் ﷺ கூறுகிறார்: நான் எனது சமுதாய மக்களில் சிலருடன் நபி ﷺ அவர்களிடம் வந்தேன். நாங்கள் அவர்களிடம் இருபது இரவுகள் தங்கியிருந்தோம். நபி அவர்கள் மிக கருணையுள்ளவர்களாக, மிக மென்மையானவர்களாக இருந்தார்கள். நாங்கள் எங்கள் மனைவி மக்களிடம் செல்வதற்கு ஆசைப்படுவதை நபி அவர்கள் பார்த்தபோது அவர்கள் (எங்களுக்கு) கூறினார்கள்: நீங்கள் திரும்பச் செல்லுங்கள்! அவர்களுடன் (-உங்கள் குடும்பத்துடன்) இருங்கள்! அவர்களுக்கு கல்வி போதியுங்கள்! நீங்கள் தொழுங்கள்! தொழுகையின் நேரம் வந்துவிட்டால் உங்களில் ஒருவர் அதான் கூறட்டும். உங்களில் (வயதில்) பெரியவர் தொழ வைக்கட்டும்.[163]

மேற்குறிப்பிடப்பட்ட எல்லாத் தன்மைகளிலும் எல்லோரும் சமமாக இருந்தால் அவர்களுக்கு மத்தியில் சீட்டுக் குலுக்கி போடப்படும். யாருடைய பெயர் வருகிறதோ அவர் தொழுகை நடத்துவார்.

ஒருவரின் வீட்டுக்குச் சென்றால் விருந்தாளியாக சென்றவரை விட அந்த வீட்டில் உள்ளவர்தான் தொழுகை நடத்த தகுதியானவர் ஆவார்.

நபி ﷺ கூறினார்கள்:

**وَلَا تَؤُمَّنَّ الرَّجُلَ فِي أَهْلِهِ وَلَا فِي سُلْطَانِهِ**

163. நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 628

நீ ஒருவருக்கு அவருடைய வீட்டில் அல்லது அவருடைய அதிகாரத்தில் இமாமத் -தொழுகை நடத்தாதீர்.[164]

அவ்வாறே, அரசராக இருப்பவர் தொழுகை நடத்துவதற்கு மற்றவர்களை விட மிக உரிமை உள்ளவராக, அதிகம் தகுதி உள்ளவராக இருப்பார்.

இதற்கும் முந்திய நபிமொழிதான் ஆதாரமாகும்.

அவ்வாறே, ஒரு மஸ்ஜிதில் தொழுகை நடத்துவதற்காக நியமிக்கப்பட்ட இமாம் ஒருவர் இருந்தால் அவர்தான் அந்த மஸ்ஜிதில் இமாமத் செய்வதற்கு மிக உரிமையுள்ளவர் ஆவார். ஆனால், அந்த இடத்தில் அரசர் இருந்தாலே தவிர. அப்படி அரசர் அங்கு இருந்தால் அரசர்தான் மிக உரிமை உள்ளவர் ஆவார்.

இதற்கும் முந்திய நபிமொழிதான் ஆதாரமாகும். இந்த நபிமொழி மிகவும் பொதுவானது. ஒருவருக்கு அதிகாரமுள்ள இடத்தில் மற்றவர் தொழுகை நடத்த முந்துவதை நபி ﷺ அவர்கள் தடுத்தார்கள்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## யாருடைய இமாமத் ஹராம் ஆகும்?

பின் வரக்கூடிய சூழ்நிலைகளில் ஒருவர் இமாமத் செய்வது ஹராம் -தடுக்கப்பட்டது ஆகும்.

1). ஆணுக்கு பெண் இமாமத் செய்வது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

لَنْ يُفْلِحَ قَوْمٌ وَلَّوْا أَمْرَهُمْ اِمْرَأَةً

தங்கள் காரியத்தை ஒரு பெண்ணிடம் பொறுப்பு ஒப்படைத்தவர்கள் ஒருபோதும் வெற்றி பெற முடியாது.[165]

---

164. அறிவிப்பாளர்: அபூ மஸ்ஊத் ؓ, நூல்: முஸ்லிம், எண்: 673
165. அறிவிப்பாளர்: அபூ பக்ரா ؓ, நூல்: புகாரி, எண்: 7099

தொழுகைக்குரிய வரிசைகளில் பெண்கள் இறுதி வரிசைகளில் நிற்கும்படி மார்க்கம் கூறுகிறது. காரணம், அவர்களை பாதுகாப்பதற்காகவும் அவர்களை பேணுவதற்காகவும் மார்க்கம் இவ்வாறு கூறியுள்ளது. ஆகவே, இதற்கு மாற்றமாக தொழுகை நடத்துவதற்கு பெண் முற்படுத்தப்பட்டால் மார்க்கத்தின் அடிப்படைக்கே அது முரணாக ஆகிவிடும்.

2). ஒருவருக்கு சிறு தொடக்கு ஏற்பட்டுவிட்டால், அல்லது ஒருவர் மீது அசுத்தம் இருந்தால் அவர் இமாமத்திற்கு முந்தக்கூடாது. அவர் இமாமத்தில் இருகின்ற நிலையில் இவ்வாறு ஆகிவிட்டால் அவர் உடனடியாக வேறு ஒருவரை இமாமத்திற்கு நியமித்துவிட்டு அவர் வெளியேறிவிட வேண்டும்.

ஒருவர் ஹதஸ் -தொடக்கு உள்ள நிலையில் தொழவைத்து விட்டால் பின்னால் தொழுத மக்களின் தொழுகை கூடிவிடும். தொழவைத்தவர் குற்றவாளியாக ஆகுவார்.

3). அறவே குர்ஆனை ஓத தெரியாதவர் தொழ வைப்பதும் ஹராம் ஆகும். ஒருவருக்கு சூரா ஃபாத்திஹாவை மனப்பாடமாகவும் ஓத தெரியவில்லை. பார்த்தும் ஓதத் தெரியவில்லை. அல்லது ஓதினாலும் பொருள் மாறுபடும்படி அவர் தப்புத் தப்பாக ஓதுகிறார். அல்லது எழுத்துகளை மாற்றி ஓதுகிறார். அல்லது ஷத் இல்லாத இடத்தில் ஷத் வைத்து ஓதுகிறார். இப்படிப்பட்டவர் தொழவைப்பது கூடாது. ஏனெனில், குர்ஆன் ஓதுவது தொழுகையின் மிக முக்கியமான ஒரு ருக்னாகும். ஒரு மஸ்ஜிதில் ஒன்றுகூடி இருக்கின்ற எல்லோரும் இவரைப் போன்று இதே நிலையில் இருந்தால் அப்போது இத்தகையவர் இமாமத் செய்யலாம்.

4) பாவம் செய்யக்கூடியவர், மார்க்கத்தில் இல்லாத அனாசாரங்களை செய்பவர் ஆகியோருடைய இமாமத்தும் சரியானதாக நிறைவேறாது. அதாவது, யார் வெளிப்படையாக, பகிரங்கப்படுத்தி பாவம் செய்கிறாரோ அவர் தொழவைப்பதும் கூடாது. அவ்வாறே, ஒருவர் குஃப்ரில் தள்ளிவிடக்கூடிய மிகப்பெரிய பித்அத் ஒன்றை

செய்வதற்கு மக்களை வெளிப்படையாக தூண்டுகிறார். இந்த இருவரின் இமாமத்தும் சரியானதாக நிறைவேறாது. ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றான்:

أَفَمَنْ كَانَ مُؤْمِنًا كَمَنْ كَانَ فَاسِقًا لَا يَسْتَوُونَ

முஃமினாக - நம்பிக்கையாளராக இருப்பவர் பாவிகளாக இருப்பவர்களுக்கு சமமாகுவார்களா? அவர்கள் இரு வகுப்பாரும் சமமாக மாட்டார்கள். (அல்குர்ஆன் 32:18)

5). ருகூஃ, சுஜூத், நிற்பது, உட்காருவது இவற்றை செய்யமுடியாத அளவிற்கு ஒருவர் பலவீனமடைந்துவிட்டால் அவர், ஆரோக்கியமாக இருப்பவர்களுக்கு இமாமத் செய்வது கூடாது.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## இமாமத் செய்வது வெறுக்கப்பட்ட நபர்கள்

1). குர்ஆன் ஓதுவதில் அதிகம் தவறு செய்பவர், பிழையாக ஓதுபவர் இமாமத் செய்வது வெறுக்கப்பட்டதாகும்.

ஃபாத்திஹா சூரா அல்லாத துணை சூராவில் ஒருவர் தவறாக ஓதினால் அது தொழுகையை பாதிக்காது என்று அறிஞர்கள் கூறுகின்றனர். ஃபாத்திஹா சூராவில் பொருள் மாறும்படி ஒருவர் தவறாக ஓதினால் தொழுகை கூடாது. ஏனெனில், குர்ஆனை நன்கு ஓதத் தெரிந்தவர்தான் இமாமத் செய்ய வேண்டும் என்று நபி ﷺ கூறியதை முன்பு படித்தோம். ஆகவே, யார் பொருள் மாறுகின்ற அளவிற்கு குர்ஆனை பிழையாக ஓதுவாரோ அதுவும், தொழுகையில் அவசியம் ஓதவேண்டிய ஃபாத்திஹா சூராவில் அவர் தவறு செய்தால் தொழுகை எப்படி நிறைவேறும். ஃபாத்திஹா சூராவை ஓதுவது தொழுகையின் ருக்னு ஆயிற்றே!

2). மக்கள் எல்லோரும் அல்லது அதிகமானவர்கள் யாரை வெறுக்கின்றார்களோ அத்தகையவர் அம்மக்களுக்கு இமாமத் செய்வது வெறுக்கப்பட்டதாகும்.

عَنِ ابْنِ عَبَّاسٍ ﷺ عَنْ رَسُولِ اللهِ ﷺ قَالَ ثَلَاثَةٌ لَا تَرْتَفِعُ صَلَاتُهُمْ فَوْقَ رُءُوسِهِمْ شِبْرًا رَجُلٌ أَمَّ قَوْمًا وَهُمْ لَهُ كَارِهُونَ وَامْرَأَةٌ بَاتَتْ وَزَوْجُهَا عَلَيْهَا سَاخِطٌ وَأَخَوَانِ مُتَصَارِمَانِ رواه ابن ماجة برقم ٩٦١

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: மூன்று மனிதர்களின் தொழுகை அவர்களின் தலைக்கு மேல் ஒரு ஜான் கூட உயராது. 1). மக்கள் தன்னை வெறுக்கின்ற நிலையில் அம்மக்களுக்கு இமாமத் செய்பவர். 2). கணவன் தன் மீது கோபமுள்ள நிலையில் இரவு கழிக்கின்ற பெண். 3). சண்டை செய்துகொண்ட இரு சகோதரர்கள்.[166]

3). யார் சில எழுத்துகளை சரியாக உச்சரிக்க முடியாமல் இருக்கின்றார்களோ அல்லது ஒரு குறிப்பிட்ட எழுத்தை பல முறை உச்சரிக்கின்றார்களோ அத்தகைய நபர்கள் இமாமத் செய்வதும் வெறுக்கப்பட்டதாகும்.

**நான்காவது சட்டவிளக்கம்**

## இமாம் எந்த இடத்தில் நிற்க வேண்டும்?

தன்னை பின்பற்றி தொழுபவர்கள் இரண்டு அல்லது அதைவிட அதிகமானவர்களாக இருந்தால் அவர்களை தனக்குப் பின்னால் நிற்கவைத்து, அவர்களுக்கு முன்பாக இமாம் நிற்க வேண்டும்.

நபி ﷺ அவர்கள் எப்போதும் மக்களை முந்தி நிற்பார்கள். நபி ﷺ அவர்களை பின்பற்றி தொழுகின்றவர்கள் நபி ﷺ அவர்களுக்குப் பின்னால் நிற்பார்கள்.

ஒரு முறை நபி ﷺ அவர்கள் தொழுகைக்கு நின்றபோது ஜாபிர், ஜப்பார் என்ற இருவர்கள் எழுந்து ஒருவர் நபி ﷺ அவர்களின் வலது பக்கத்திலும் மற்றொருவர் நபி அவர்களின் இடது பக்கத்திலும் தொழுகைக்காக நின்றார்கள். நபி ﷺ அவர்கள் அவ்விருவரின்

166. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﷺ, நூல்: இப்னு மாஜா, எண்: 961

கரங்களைப் பிடித்து தனக்கு பின்னால் அவ்விருவரையும் நிற்க வைத்தார்கள்.[167]

عَنْ أَنَسٍ ﵁ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ أَحْسَنَ النَّاسِ خُلُقًا وَكَانَ لِي أَخٌ يُقَالُ لَهُ أَبُو عُمَيْرٍ وَكَانَ إِذَا جَاءَ قَالَ يَا أَبَا عُمَيْرٍ مَا فَعَلَ النُّغَيْرُ نُغَرٌ كَانَ يَلْعَبُ بِهِ فَرُبَّمَا حَضَرَ الصَّلَاةَ وَهُوَ فِي بَيْتِنَا فَيَأْمُرُ بِالْبِسَاطِ الَّذِي تَحْتَهُ فَيُكْنَسُ وَيُنْضَحُ ثُمَّ يَقُومُ وَنَقُومُ خَلْفَهُ فَيُصَلِّي بِنَا رواه البخاري برقم ٦٢٠٣

அனஸ் ﵁ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்கள் மக்களில் மிகவும் நற்குணமுள்ளவராக இருந்தார்கள். எனக்கு ஒரு சகோதரர் இருந்தார். அவரை அபூ உமைர் என்று கூறப்படும். அவரிடம் ஒரு குருவி இருந்தது. அவர் அதை வைத்து விளையாடுவார். நபி அவர்கள் எங்கள் வீட்டுக்கு வந்தால் அபூ உமைரே உமது குட்டிக் குருவி என்ன செய்கிறது என்று அவரிடம் கூறுவார்கள். சில நேரங்களில் நபி அவர்கள் எங்கள் வீட்டில் இருக்கின்ற போதே தொழுகையின் நேரம் வந்துவிடும். தான் அமர்ந்திருந்த விரிப்பை சரிசெய்யும்படி கூறுவார்கள். பிறகு, அந்த விரிப்பை கூட்டிப் பெருக்கி அதன் மீது தண்ணீர் தெளிக்கப்படும். பிறகு, அவர்கள் (அந்த விரிப்பின் மீது) தொழுகைக்காக நிற்பார்கள். நாங்கள் அவர்களுக்குப் பின்னால் நிற்போம். நபி அவர்கள் எங்களுக்கு தொழவைப்பார்கள்.[168]

இமாமைப் பின்பற்றி தொழுபவர் ஒருவர் மட்டும் இருந்தால் இமாமும் அவரும் சமமாகவும், அவர் இமாமின் வலது பக்கத்திலும் நிற்க வேண்டும்.

இது குறித்த நபிமொழியாவது:

فَقَامَ يُصَلِّي فَقُمْتُ عَنْ يَسَارِهِ فَأَخَذَ بِأُذُنِي فَأَدَارَنِي عَنْ يَمِينِهِ

167. பார்க்க : நூல்; முஸ்லிம், அபூ தாவூத்.
168. நூல்: புகாரி, எண்: 6203

(ஒரு முறை இரவில்) நபி ﷺ அவர்கள் (இரவுத் தொழுகைக்கு) நின்றபோது நான் (-இப்னு அப்பாஸ்) நபி அவர்களின் இடது பக்கத்தில் நின்றேன். அப்போது நபி ﷺ அவர்கள் எனது காதைப் பிடித்து என்னை சுற்றிக்கொண்டு வந்து அவர்களின் வலது பக்கத்தில் நிறுத்தினார்கள்.[169]

அவ்வாறே மற்றொரு நபிமொழியில் வருவதாவது:

**عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ ﵄ قَالَ كُنْتُ مَعَ رَسُولِ اللهِ ﷺ فِي سَفَرٍ فَانْتَهَيْنَا إِلَى مَشْرَعَةٍ فَقَالَ أَلَا تُشْرِعُ يَا جَابِرُ قُلْتُ بَلَى قَالَ فَنَزَلَ رَسُولُ اللهِ ﷺ وَأَشْرَعْتُ قَالَ ثُمَّ ذَهَبَ لِحَاجَتِهِ وَوَضَعْتُ لَهُ وَضُوءًا قَالَ فَجَاءَ فَتَوَضَّأَ ثُمَّ قَامَ فَصَلَّى فِي ثَوْبٍ وَاحِدٍ خَالَفَ بَيْنَ طَرَفَيْهِ فَقُمْتُ خَلْفَهُ فَأَخَذَ بِأُذُنِي فَجَعَلَنِي عَنْ يَمِينِهِ رواه مسلم برقم ٧٦٦**

ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ﵁ கூறுகிறார்கள்: ஒரு பயணத்தில் நான் நபி ﷺ அவர்களுடன் இருந்தேன். மக்கள் நீர் அள்ளுகின்ற ஒரு நீர் நிலைக்கு நாங்கள் வந்தோம். ஜாபிரே! நீங்கள் இதிலிருந்து தண்ணீர் அள்ளமாட்டீர்களா என்று கூறினார்கள். ஏன் அள்ளமாட்டேன்? என்று கூறினேன். பிறகு, ரஸூலுல்லாஹ் அவர்களும் இறங்கி தண்ணீர் அள்ளினார்கள். நான் தண்ணீர் அள்ளினேன். பிறகு, தனது (சுய) தேவைக்காக நபி ﷺ அவர்கள் சென்றுவிட்டார்கள். நான் அவர்களுக்காக உளூ செய்வதற்கு தண்ணீர் ஏற்பாடு செய்து வைத்தேன். அவர்கள் (சுய தேவையை நிறைவேற்றி) வந்த பிறகு உளூ செய்தார்கள். பிறகு, அவர்கள் (அணிந்திருந்த) ஒரே ஓர் ஆடையிலேயே தொழுவதற்கு நின்றுவிட்டார்கள். அந்த ஓர் ஆடையை தனக்கு இரண்டு பக்கங்களிலும் அவர்கள் மாற்றி போட்டுக் கொண்டார்கள். நானும் எழுந்து நபி ﷺ அவர்களுக்குப்

169. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: புகாரி, எண்: 6316

பின்னால் நின்றுகொண்டேன். ஆகவே, அவர்கள் என் காதைப் பிடித்து (இழுத்து) என்னை அவர்களின் வலது பக்கத்தில் ஆக்கிக் கொண்டார்கள்.[170]

இடம் குறுகலாக அல்லது சிறியதாக இருந்தால் இமாம் மக்களுக்கு நடுவிலும் நின்று தொழ வைக்கலாம்.

**عَنْ عَبْدِ الرَّحْمٰنِ بْنِ الْأَسْوَدِ ﷺ عَنْ أَبِيهِ قَالَ اسْتَأْذَنَ عَلْقَمَةُ وَالْأَسْوَدُ عَلَى عَبْدِ اللّٰهِ وَقَدْ كُنَّا أَطَلْنَا الْقُعُودَ عَلَى بَابِهِ فَخَرَجَتْ الْجَارِيَةُ فَاسْتَأْذَنَتْ لَهُمَا فَأَذِنَ لَهُمَا ثُمَّ قَامَ فَصَلَّى بَيْنِي وَبَيْنَهُ ثُمَّ قَالَ هَكَذَا رَأَيْتُ رَسُولَ اللّٰهِ ﷺ فَعَلَ رواه أبو داود برقم ٥١٨**

அல்கமா மற்றும் அல்அஸ்வத் ﷺ இருவரும் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ﷺ அவர்களின் வீட்டுக்குள் நுழைய அனுமதி கேட்டார்கள். (தொடர்ந்து அவ்விருவரும் கூறினார்கள்:) நாங்கள் அவர்களின் வீட்டு வாசலில் நீண்ட நேரம் அமர்ந்திருந்தோம். அடிமைப் பெண் வெளியே வந்தாள். பிறகு, அவ்விருவருக்காகவும் அனுமதி கோரினாள். அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ﷺ அவர்கள் அனுமதி அளித்தார்கள். பிறகு, அவர்கள் எனக்கும் அல்கமாவிற்கும் நடுவில் நின்று தொழவைத்தார்கள். பிறகு, கூறினார்கள்: இப்படித்தான் நான் ரஸூலுல்லாஹ் அவர்கள் செய்ததைப் பார்த்தேன்.[171]

தொழுகையில் பெண்களும் கலந்துகொண்டால் ஆண்களின் வரிசைகளுக்குப் பின்னால் பெண்கள் நிற்பார்கள்.

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷺ أَنَّ جَدَّتَهُ مُلَيْكَةَ دَعَتْ رَسُولَ اللّٰهِ ﷺ لِطَعَامٍ صَنَعَتْهُ فَأَكَلَ مِنْهُ فَقَالَ قُومُوا فَلِأُصَلِّيَ بِكُمْ فَقُمْتُ إِلَى حَصِيرٍ لَنَا**

---

170. நூல்: முஸ்லிம், எண்: 766

171. அறிவிப்பாளர்: அப்துர்ரஹ்மான் இப்னுல் அஸ்வத் ﷺ, நூல்: அபூ தாவூத், எண்: 518

**قَدْ اسْوَدَّ مِنْ طُولِ مَا لَبِثَ فَنَضَحْتُهُ بِمَاءٍ فَقَامَ رَسُولُ اللّٰهِ ﷺ وَالْيَتِيمُ مَعِي وَالْعَجُوزُ مِنْ وَرَائِنَا فَصَلَّى بِنَا رَكْعَتَيْنِ رواه البخاري برقم ٨٦٠**

அனஸ் இப்னு மாலிக் ﵁ கூறுகிறார்கள்: தனது பாட்டி முலைக்கா ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களை தான் செய்த ஓர் உணவை உண்ணுவதற்கு அழைத்தார்கள். நபி அதிலிருந்து கொஞ்சம் சாப்பிட்டார்கள். பிறகு, நீங்கள் எழுங்கள், நான் உங்களுக்கு தொழவைக்கிறேன் என்று கூறினார்கள். நான் எங்களிடம் இருந்த ஒரு பழைய பாயை எடுத்து அதில் தண்ணீர் தெளித்தேன். அந்த பாய் நீண்ட நாள்களாக பயன்பாட்டில் இருப்பதால் கருப்பாகி இருந்தது. ரஸூலுல்லாஹ் அவர்கள் தொழுகைக்கு நின்றார்கள். (நான் நபி அவர்களுக்கு பின்னால் நின்றேன். எங்கள் வீட்டில் இருந்த) அனாதை(யும்) என்னுடன் நின்றுகொண்டார். அந்த மூதாட்டிப் பெண் எங்களுக்குப் பின்னால் நின்று தொழுதார். நபி அவர்கள் எங்களுக்கு இரண்டு ரக்அத்துகள் தொழ வைத்தார்கள்.[172]

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## மஃமூம் - பின்னால் தொழுபவர் சார்பாக இமாம் எதையெல்லாம் சுமந்து கொள்வார்?

சப்தமாக ஓதப்படுகின்ற தொழுகைகளில் மஃமூமுடைய திலாவத்தை இமாம் சுமந்துகொள்வார். அதாவது, மஃமூம் துணை சூரா ஓதவேண்டிய அவசியமில்லை.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ إِنَّمَا جُعِلَ الْإِمَامُ لِيُؤْتَمَّ بِهِ فَإِذَا كَبَّرَ فَكَبِّرُوا وَإِذَا قَرَأَ فَأَنْصِتُوا رواه ابن ماجة برقم ٨٣٧**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: இமாம் ஏற்படுத்தப்பட்டது ஏனென்றால் அவரைப் பின்பற்றுவதற்குதான். ஆகவே, அவர்

172, அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: புகாரி, எண்: 860

தக்பீர் கூறினால் நீங்கள் தக்பீர் கூறுங்கள்! அவர் ஓதினால் நீங்கள் அமைதியாக இருங்கள்![173]

عَنْ جَابِرٍ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ مَنْ كَانَ لَهُ إِمَامٌ فَقِرَاءَتُهُ لَهُ قِرَاءَةٌ رواه أحمد برقم ١٤١١٦

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: யாருக்கு ஓர் இமாம் இருப்பாரோ அந்த இமாம் ஓதுவது இவருக்கும் ஓதுவதாக ஆகிவிடும்.[174]

இரகசியமாக ஓதப்படுகின்ற தொழுகையாக இருந்தால் இமாம் ஓதுவது பின்னால் தொழுபவர்களுக்கு போதுமாகாது. மஃமூம் ஓதியாக வேண்டும்.

**ஆறாவது சட்டவிளக்கம்**

## இமாமை முந்துவது

இமாமை பின்பற்றி தொழுபவர் தொழுகையின் செயல்களில் தனது இமாமை முந்தக்கூடாது.

யார் இமாம் தக்பீர் தஹ்ரீமா சொல்வதற்கு முன்பாக தக்பீர் கூறி தொழுகையை ஆரம்பித்தாரோ அவருடைய தொழுகை கூடாது. இமாம் தக்பீர் கூறி தொழுகையை ஆரம்பித்தவுடன்தான் மஃமூம் தக்பீர் தஹ்ரீமா கூற வேண்டும். ஆகவே, இமாமுக்கு முன்பாக தக்பீர் கட்டியவரின் தொழுகை சேராது.

தொழுகையின் எல்லா செயல்களிலும் இமாம் செய்ய ஆரம்பித்தவுடன்தான் மஃமூம் அந்த செயலை செய்ய ஆரம்பிக்க வேண்டும்.

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ؓ أَنَّهُ قَالَ خَرَّ رَسُولُ اللهِ ﷺ عَنْ فَرَسٍ فَجُحِشَ

173. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: இப்னு மாஜா, எண்: 837
174. அறிவிப்பாளர்: ஜாபிர் ؓ, நூல்: அஹ்மது, எண்: 14116

**فَصَلَّى لَنَا قَاعِدًا فَصَلَّيْنَا مَعَهُ قُعُودًا ثُمَّ انْصَرَفَ فَقَالَ إِنَّمَا جُعِلَ الْإِمَامُ لِيُؤْتَمَّ بِهِ فَإِذَا كَبَّرَ فَكَبِّرُوا وَإِذَا رَكَعَ فَارْكَعُوا وَإِذَا رَفَعَ فَارْفَعُوا وَإِذَا قَالَ سَمِعَ اللَّهُ لِمَنْ حَمِدَهُ فَقُولُوا رَبَّنَا لَكَ الْحَمْدُ وَإِذَا سَجَدَ فَاسْجُدُوا رواه البخاري برقم ٧٣٣**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் குதிரையில் இருந்து கிழே விழுந்து விட்டார்கள். அவர்களுக்கு சிராய்ப்பு காயம் ஏற்பட்டுவிட்டது. அவர்கள் எங்களுக்கு உட்கார்ந்து தொழ வைத்தார்கள். நாங்களும் அவர்களுடன் உட்கார்ந்து தொழுதோம். பிறகு, (எங்களைப் பார்த்து) திரும்பினார்கள். மேலும், கூறினார்கள்: இமாம் ஏற்படுத்தப்பட்டதெல்லாம் அவரை மக்கள் பின்பற்றுவதற்குத்தான். அவர் தக்பீர் கூறினால் தக்பீர் கூருங்கள்! அவர் ருகூஃ செய்தால் ருகூஃ செய்யுங்கள்! அவர் தலையை உயர்த்தினால் உயர்த்துங்கள்! அவர் ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்று கூறினால் ரப்பனா லகல் ஹம்து என்று கூறுங்கள்! அவர் ஸுஜூத் செய்தால் ஸுஜூத் செய்யுங்கள்![175]

**عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللَّهِ مَا يَأْمَنُ الَّذِي يَرْفَعُ رَأْسَهُ فِي صَلَاتِهِ قَبْلَ الْإِمَامِ أَنْ يُحَوِّلَ اللَّهُ صُورَتَهُ فِي صُورَةِ حِمَارٍ رواه مسلم برقم ٤٢٧**

இமாமுக்கு முன்பாக தொழுகையில் தனது தலையை உயர்த்துபவர் அவருடைய உருவத்தை ஒரு கழுதையின் உருவத்தில் அல்லாஹ் மாற்றி விடுவான் என்பதை பயப்பட வேண்டாமா?[176]

தக்பீர் தஹ்ரீமாவிலும் ஸலாம் கொடுப்பதிலும் இமாமுடன் சேர்ந்து செய்தால் அது வெறுக்கப்பட்ட செயலாக இருக்கும். காரணம் இது சுன்னாவிற்கு மாற்றமான செயலாகும். ஆனால், தொழுகை முறிந்து

175. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 733
176. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 427

விடாது. ஏனெனில், இவர் இமாமுடன் சேர்ந்து செய்தார். ஆனால், இமாமை முந்தி செய்யவில்லை. இமாமை முந்தி செய்வதுதான் ஹராம் - தடுக்கப்பட்ட பாவமான செயலாகும்.

عَنْ أَنَسٍ ﷺ قَالَ صَلَّى بِنَا رَسُولُ اللهِ ﷺ ذَاتَ يَوْمٍ فَلَمَّا قَضَى الصَّلَاةَ أَقْبَلَ عَلَيْنَا بِوَجْهِهِ فَقَالَ أَيُّهَا النَّاسُ إِنِّي إِمَامُكُمْ فَلَا تَسْبِقُونِي بِالرُّكُوعِ وَلَا بِالسُّجُودِ وَلَا بِالْقِيَامِ وَلَا بِالِانْصِرَافِ رواه مسلم برقم ٤٢٦

ஒரு நாள் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் எங்களுக்கு தொழவைத்தார்கள். தொழுகை முடித்தபோது எங்களை முன்னோக்கி அமர்ந்தார்கள். மேலும், கூறினார்கள்: மக்களே! நிச்சயமாக நான் உங்கள் இமாம் ஆவேன். ஆகவே, ருகூஃவிலும் ஸுஜூதிலும் நிலையிலும் தொழுகையை முடிப்பதிலும் என்னை முந்தாதீர்கள்![177]

**ஏழாவது சட்டவிளக்கம்**

## இமாமத், ஜமாஅத் தொடர்பான பலதரப்பட்ட பொது சட்டங்கள்

இமாமத் - தொழுகை நடத்துவது, ஜமாஅத் - கூட்டுத் தொழுகை தொடர்பான பலதரப்பட்ட பொது சட்டங்கள்.

மேற்கூறப்பட்ட சட்டங்களை தவிர்த்து இன்னும் பல சட்டங்கள் இமாமத், மற்றும் ஜமாஅத் தொடர்பாக உள்ளன.

1). இமாமுக்கு அருகில் அறிவு சாதுர்யமான, புத்திக் கூர்மையான மனிதர்கள் நிற்கவேண்டும். ஆகவே, கல்வி கற்றவர்கள், அறிவு ஞானமுள்ளவர்கள், அடக்கமானவர்கள், மேன்மையான பண்புள்ளவர்கள் இமாமுக்கு பின்னால், அவருக்கு அருகில் நிற்க வேண்டும்.

177. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ؓ, நூல்: முஸ்லிம், எண்: 426

**عَنْ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ لِيَلِنِي مِنْكُمْ أُولُو الْأَحْلَامِ وَالنُّهَى ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ ثَلَاثًا وَإِيَّاكُمْ وَهَيْشَاتِ الْأَسْوَاقِ رواه مسلم برقم ٤٣٢**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் நல்ல அறிவு சாதுர்யமான, புத்திக் கூர்மையானவர்கள் என்னை அடுத்து நிற்கட்டும். பிறகு, அவர்களை அடுத்துள்ளவர்கள் நிற்கட்டும். இவ்வாறு மூன்று முறை கூறினார்கள். கடைத்தெருவின் கூச்சல் குழப்பங்களை(யும் சண்டை சச்சரவுகளையும் மஸ்ஜிதில் செய்வதை) விட்டு உங்களை நான் எச்சரிக்கின்றேன்.[178]

இதில் உள்ள தத்துவம் என்னவென்றால், இமாம் ஓதுவதில் இருந்து இவர்கள் கற்றுக்கொள்வார்கள்; இமாமுக்கு கிராஅத்தில் தடுமாற்றம் ஏற்பட்டால் இவர்கள் எடுத்துக் கொடுப்பார்கள். இமாமுக்கு ஏதும் பிரச்சனை ஏற்பட்டால் இவர்களில் ஒருவரை அவர் தனக்கு பிரதிநிதியாக நிற்கவைக்க முடியும்.

2). முதல் ஸஃப்பில் - முதல் வரிசையில் நிற்க ஆசைப்பட வேண்டும்.

மஸ்ஜிதில் தொழுகைக்கு வருகின்ற தொழுகையாளிகள் முதல் வரிசையில் நின்று ஜமாஅத் தொழுகையை நிறைவேற்ற ஆசைப்பட வேண்டும். பின்னால் உள்ள வரிசைகளுக்கு செல்வதை தவிர்க்க வேண்டும்.

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﵁ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ رَأَى فِي أَصْحَابِهِ تَأَخُّرًا فَقَالَ لَهُمْ تَقَدَّمُوا فَأْتَمُّوا بِي وَلْيَأْتَمَّ بِكُمْ مَنْ بَعْدَكُمْ لَا يَزَالُ قَوْمٌ يَتَأَخَّرُونَ حَتَّى يُؤَخِّرَهُمُ اللَّهُ رواه مسلم برقم ٤٣٨**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தங்கள் தோழர்களிடம் பின்தங்குகின்ற

178. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ﵁, நூல்: முஸ்லிம், எண்: 432

பழக்கத்தை (-பின்னால் உள்ள வரிசைகளில் அமருகின்ற பழக்கத்தை) கவனித்தார்கள். உடனே, அவர்களுக்கு கூறினார்கள்: முன்வரிசைக்கு வாருங்கள்! என்னைப் பின்பற்றி தொழுங்கள்! உங்களுக்குப் பின்னால் உள்ளவர்கள் உங்களை பின்பற்றட்டும். சில மக்கள் பின்தங்கிகொண்டே இருப்பார்கள். இறுதியாக, அல்லாஹ் அவர்களை (தொழுகையை விட்டே) பிற்படுத்திவிடுவான்.[179]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ لَوْ يَعْلَمُ النَّاسُ مَا فِي النِّدَاءِ وَالصَّفِّ الْأَوَّلِ ثُمَّ لَمْ يَجِدُوا إِلَّا أَنْ يَسْتَهِمُوا عَلَيْهِ لَاسْتَهَمُوا وَلَوْ يَعْلَمُونَ مَا فِي التَّهْجِيرِ لَاسْتَبَقُوا إِلَيْهِ وَلَوْ يَعْلَمُونَ مَا فِي الْعَتَمَةِ وَالصُّبْحِ لَأَتَوْهُمَا وَلَوْ حَبْوًا رواه البخاري برقم ٦١٥**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: அதான் சொல்வதிலும் முதல் வரிசையில் தொழுவதிலும் உள்ள நன்மையை மக்கள் அறிந்தால், பிறகு சீட்டு குலுக்கிப் போடுவதைத் தவிர வேறு வழி இல்லை என்றால் அவர்கள் சீட்டு குலுக்கி போட்டிருப்பார்கள். விரைவாக மஸ்ஜிதிற்கு வருவதில் உள்ள நன்மையை அவர்கள் அறிந்தால் அவர்கள் மஸ்ஜிதிற்கு முந்தி வந்திருப்பார்கள். இஷா தொழுகையிலும் ஸுப்ஹ் தொழுகையிலும் உள்ள நன்மையை அவர்கள் அறிந்தால் அவ்விரண்டுக்கும் தவழ்ந்தாவது அவர்கள் வந்துவிடுவார்கள்.[180]

3. ஜமாஅத் தொழுகையில் பெண்கள் தங்கள் வரிசைகளில் கடைசி வரிசைகளில் நிற்பது மிகச் சிறந்ததாகும்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ خَيْرُ صُفُوفِ الرِّجَالِ أَوَّلُهَا وَشَرُّهَا آخِرُهَا وَخَيْرُ صُفُوفِ النِّسَاءِ آخِرُهَا وَشَرُّهَا أَوَّلُهَا رواه مسلم برقم ٤٤٠**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: ஆண்களின் வரிசைகளில் மிகச்

179. அறிவிப்பாளர்: அபூ ஸயீது அல்குத்ரி ﵁, நூல்: முஸ்லிம், எண்: 438
180. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: புகாரி, எண்: 615

சிறந்தது அவற்றில் முதலாவதாகும். பெண்களின் வரிசைகளில் மிகச் சிறந்தது அவற்றில் இறுதியானதாகும். அவற்றில் மிகக் கெட்டது அவற்றில் முந்தியதாகும்.[181]

4). வரிசைகளை சரி செய்வது, நெருக்கமாக நிற்பது, ஒருவர் ஒருவருடன் ஒட்டி நிற்பது.

இடைவெளிகளை அடைத்து நிற்பது அவசியமாகும். முதல் வரிசைகளை ஒவ்வொன்றாக முழுமைப்படுத்துவது அவசியமாகும். முந்திய வரிசைகளில் இடம் இருக்க, பிந்திய வரிசைகளில் நிற்பது கூடாது.

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ سَوُّوا صُفُوفَكُمْ فَإِنَّ تَسْوِيَةَ الصُّفُوفِ مِنْ إِقَامَةِ الصَّلَاةِ رواه البخاري برقم ٧٢٣**

நபி ﷺ கூறினார்கள்: நீங்கள் உங்கள் வரிசைகளை சரிசெய்யுங்கள்! நிச்சயமாக வரிசைகளை சரிசெய்வது தொழுகையை நிலை நிறுத்துவதில் உள்ளதாகும்.[182]

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ أَقِيمُوا صُفُوفَكُمْ فَإِنِّي أَرَاكُمْ مِنْ وَرَاءِ ظَهْرِي وَكَانَ أَحَدُنَا يُلْزِقُ مَنْكِبَهُ بِمَنْكِبِ صَاحِبِهِ وَقَدَمَهُ بِقَدَمِهِ رواه البخاري برقم ٧٢٥**

நபி ﷺ கூறினார்கள்: உங்கள் வரிசைகளை நீங்கள் நிலை நிறுத்துங்கள்! நிச்சயமாக நான் உங்களை எனக்குப் பின்னால் இருந்து பார்க்கிறேன். எங்களில் ஒருவர் தனது புஜத்தை தனது தோழரின் புஜத்துடனும் தனது பாதத்தை தனது தோழரின் பாதத்துடனும் சேர்த்துவைப்பவராக இருந்தார்.[183]

181. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: முஸ்லிம், எண்: 440
182. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﷺ, நூல்: புகாரி, எண்: 723
183. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﷺ, நூல்: புகாரி, எண்: 725

5. முதல் வரிசையை முழுமைப்படுத்த வேண்டும். பிறகு, அதை அடுத்துள்ளதை முழுமைப்படுத்த வேண்டும். இவ்வாறு ஒவ்வொரு வரிசையையும் நிறைவு செய்ய வேண்டும். இறுதி வரிசையில் வேண்டுமானால் மீதம் இருக்கலாம். ஒரு வரிசையில் இடம் மீதமிருக்க அடுத்த வரிசையை ஆரம்பிக்கக்கூடாது.

**عَنْ جَابِرِ بْنِ سَمُرَةَ ﷺ قَالَ خَرَجَ عَلَيْنَا رَسُولُ اللهِ ﷺ فَقَالَ أَلَا تَصُفُّونَ كَمَا تَصُفُّ الْمَلَائِكَةُ عِنْدَ رَبِّهَا فَقُلْنَا يَا رَسُولَ اللهِ وَكَيْفَ تَصُفُّ الْمَلَائِكَةُ عِنْدَ رَبِّهَا قَالَ يُتِمُّونَ الصُّفُوفَ الْأُوَلَ وَيَتَرَاصُّونَ فِي الصَّفِّ**

**رواه مسلم برقم ٤٣٠**

ஜாபிர் இப்னு சமுரா ﷺ கூறுகிறார்கள்: (ஒரு நாள்) ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் எங்களிடம் வந்தார்கள். வானவர்கள் தங்கள் இரட்சகனிடம் வரிசையாக நிற்பதைப் போன்று நீங்கள் வரிசையாக நிற்க மாட்டீர்களா? என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதரே! வானவர்கள் தங்கள் இரட்சகனிடம் எப்படி வரிசையில் நிற்கிறார்கள் என்று நாங்கள் கூறினோம். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: வானவர்கள் முதல் வரிசைகளை முழுமைப்படுத்துவார்கள். வரிசையில் இடைவெளியில்லாமல் ஒட்டி நிற்பார்கள்.[184]

6). முந்திய வரிசையில் இடமிருக்க ஒருவர் மட்டும் தனியாக ஒரு வரிசையில் நிற்பது கூடாது. இப்படி தொழுபவரின் தொழுகை நிறைவேறாது.

**وَرَأَى رَجُلًا يُصَلِّي خَلْفَ الصَّفِّ فَوَقَفَ حَتَّى انْصَرَفَ الرَّجُلُ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ اسْتَقْبِلْ صَلَاتَكَ فَلَا صَلَاةَ لِرَجُلٍ فَرْدٍ خَلْفَ الصَّفِّ**

**رواه أحمد برقم ١٥٧٠٨**

184. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு சமுரா ﷺ, நூல்: முஸ்லிம், எண்: 430

வரிசைக்குப் பின்னால் ஒருவர் மட்டும் தனியாக தொழுவதை நபி ﷺ அவர்கள் பார்த்தார்கள். ஆகவே, நபி ﷺ அவர்கள் நின்று விட்டார்கள். இறுதியாக அந்த மனிதர் (தொழுது முடித்து) திரும்பி செல்ல புறப்பட்டார். ரஸூலுல்லாஹ் ﷺ (அவருக்கு) கூறினார்கள்: உமது தொழுகையை மீண்டும் தொழு! வரிசைக்குப் பின்னால் தனியாக நிற்கின்ற மனிதருக்கு தொழுகை சேராது.[185]

**عَنْ وَابِصَةَ رضي الله عنه أَنَّ رَسُولَ اللهِ ﷺ رَأَى رَجُلًا صَلَّى وَحْدَهُ خَلْفَ الصَّفِّ فَأَمَرَهُ أَنْ يُعِيدَ صَلَاتَهُ رواه أحمد برقم ١٧٣١٤**

வரிசைக்குப் பின்னால் தனியாக ஒருவர் மட்டும் தொழுவதை ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் பார்த்தார்கள். அவர் தனது தொழுகையை திரும்பத் தொழுவதற்கு நபி ﷺ அவருக்கு கட்டளையிட்டார்கள்.[186]

-------------------------

185. அறிவிப்பாளர்: அலி இப்னு ஷைபான், நூல்: அஹ்மது, எண்: 15708
186. அறிவிப்பாளர்: வாபிஸா, நூல்: அஹமது, எண்: 17314

ஒன்பதாவது பாடம்

## الباب التاسع في صلاة أهل الأعذار

## தகுந்த காரணம் உள்ளவர்களின் தொழுகை

நோயாளிகள், பயணிகள், அச்சமுடையவர்கள் ஆகியோரை அஹ்லுல் அஃதார் என்று கூறப்படுகிறது.

தொழுகையை மற்றவர்கள் எப்படி முழுமையாக நிறைவேற்றுவார்களோ அவ்வாறு இவர்களால் நிறைவேற்ற முடியாது. ஆகவே, இவர்களுக்கு மார்க்கம் சில சலுகைகளையும் இலகுவான சட்டங்களையும் வழங்கியுள்ளது. எனவே, இவர்கள் தங்கள் சக்திக்கு ஏற்ப மார்க்கம் வழங்கி இருக்கக்கூடிய சலுகையை பயன்படுத்தி தொழுவார்கள்.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَمَا جَعَلَ عَلَيْكُمْ فِي الدِّينِ مِنْ حَرَجٍ

அல்லாஹ் இந்த மார்க்கத்தில் எவ்விதமான சிரமத்தையும் ஏற்படுத்தவில்லை. (அல்குர்ஆன் 22:78)

மேலும், அல்லாஹ் கூறுகின்றான்:

لَا يُكَلِّفُ اللّٰهُ نَفْسًا إِلَّا وُسْعَهَا

அல்லாஹ் ஓர் ஆன்மாவை அதன் சக்திக்கு உட்பட்டே தவிர சிரமப்படுத்த மாட்டான். (அல்குர்ஆன் 2:286)

மேலும், அல்லாஹ் கூறுகின்றான்:

فَاتَّقُوا اللّٰهَ مَا اسْتَطَعْتُمْ

உங்களால் இயன்ற அளவு அல்லாஹ்வை அஞ்சுங்கள்!
(அல்குர்ஆன் 44:16)

ஆகவே, சிரமம் ஏற்பட்டால் சட்டங்கள் இலகுவாகிவிடும்.

## அ). நோயாளி தொழுவதின் முறை

உடல் ஆரோக்கியம் முழுமையாக அல்லது பகுதியாக பாதிக்கப்பட்டவரை நோயாளி என்கிறோம்.

நோயாளி நின்று தொழவேண்டும். அவரால் எப்படி, எந்தளவு நிற்க முடியுமோ அந்தளவு நின்று தொழுகையை நிறைவேற்ற வேண்டும். நேராக, நிமிர்ந்து நிற்க முடியவில்லை என்றால் குனிந்தாவது நின்று தொழ வேண்டும். ஒரு சுவரில், அல்லது ஒரு தூணில், அல்லது ஒரு கைத்தடியில் சாய்ந்தாவது அவர் நின்று தொழ முயற்சிக்க வேண்டும்.

நபி ﷺ கூறினார்கள்

فَإِذَا نَهَيْتُكُمْ عَنْ شَيْءٍ فَاجْتَنِبُوهُ وَإِذَا أَمَرْتُكُمْ بِأَمْرٍ فَأْتُوا مِنْهُ مَا اسْتَطَعْتُمْ رواه البخاري برقم ٧٢٨٨

நான் உங்களை ஒரு காரியத்தை விட்டுத் தடுத்தால் அதை நீங்கள் தவிர்த்து விடுங்கள்! நான் உங்களுக்கு ஒரு காரியத்தை ஏவினால் நீங்கள் அதை உங்களால் முடிந்தளவு செய்யுங்கள்![187]

நோயாளியால் நிற்க முடியவில்லை என்றால் அவர் உட்கார்ந்து

187. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி, எண்: 7288

தொழவேண்டும். உட்கார்ந்தும் தொழமுடியவில்லை என்றால் படுத்து தொழவேண்டும்.

عَنْ عِمْرَانَ بْنِ حُصَيْنٍ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ كَانَتْ بِي بَوَاسِيرُ فَسَأَلْتُ النَّبِيَّ ﷺ عَنِ الصَّلَاةِ فَقَالَ صَلِّ قَائِمًا فَإِنْ لَمْ تَسْتَطِعْ فَقَاعِدًا فَإِنْ لَمْ تَسْتَطِعْ فَعَلَى جَنْبٍ

رواه البخاري برقم ١١١٧

இம்ரான் இப்னு ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள்: எனக்கு மூல நோய் இருந்தது. ஆகவே, (நான் எப்படி தொழுவது என்று) நபி ﷺ அவர்களிடம் கேட்டேன். அவர்கள் கூறினார்கள்: "நின்று தொழுங்கள்! உங்களுக்கு முடியவில்லை என்றால் உட்கார்ந்து தொழுங்கள்! முடியவில்லை என்றால் படுத்து தொழுங்கள்![188]

இப்படி எந்த வகையிலும் ஒரு நோயாளியால் தொழ முடியவில்லை என்றால் அவருக்கு எப்படி தொழுவது சாத்தியமோ அப்படி அவர் தொழுகையை நிறைவேற்றலாம்.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَاتَّقُوا اللَّهَ مَا اسْتَطَعْتُمْ

உங்களால் இயன்ற அளவு அல்லாஹ்வை அஞ்சுங்கள்!

(அல்குர்ஆன் 64:16)

ஒரு நோயாளியால் உடலை அசைத்து தொழமுடியவில்லை என்றால் தலையால் சாடை செய்து தொழவேண்டும். அதுவும் முடியவில்லை என்றால் கண்ணால் சாடை செய்து தொழவேண்டும்.

தனது மனதில் நிய்யத் செய்து தொழுவதற்கு ஒரு நோயாளிக்கு ஆற்றல் இருக்கின்ற வரை, இன்னும் அவருக்கு சுய நினைவு இருக்கின்ற வரை, அவர் தொழுகையை விடுவது கூடாது.

188. அறிவிப்பாளர்: இம்ரான் இப்னு ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு, நூல்: புகாரி, எண்: 1117

உட்கார்ந்து தொழுகையை நிறைவேற்றுகின்ற நோயாளி ருகூஃ, ஸுஜூது செய்ய முடியவில்லை என்றால் அவர் தனது தலையால் அசைத்து, சாடை செய்து ருகூஃ, ஸுஜூதை நிறைவேற்ற வேண்டும். ருகூஃஐ விட சற்று தாழ்வாக ஸுஜூதுக்கு தலையை தாழ்த்த வேண்டும். தலையால் சாடை செய்து தொழ முடியவில்லை என்றால் தனது கண்ணால் சாடை செய்து தொழ வேண்டும்.

### ஆ) பயணியின் தொழுகை

பயணியின் தொழுகையில் இரண்டு முக்கியமான அம்சங்கள் உள்ளன.

**முதலாவது அம்சம்:** நான்கு ரக்அத்துகள் உடைய தொழுகையை இரண்டு ரக்அத்துகளாக சுருக்கி தொழுவது.

இது குறித்து பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

### முதலாவது சட்டவிளக்கம்

## கஸ்ர் தொழுகையின் சட்டம்

பயணிகள் நான்கு ரக்அத்துகள் உடைய தொழுகையை கஸ்ர் -சுருக்கி தொழுவதில் அறிஞர்களுக்கு மத்தியில் மாறுபட்ட கருத்துக்கள் இல்லை.

குர்ஆன், ஸுன்னா, மற்றும் இஜ்மா என்ற ஏகோபித்த முடிவு இதற்கு ஆதாரமாக இருக்கின்றது.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَإِذَا ضَرَبْتُمْ فِي الْأَرْضِ فَلَيْسَ عَلَيْكُمْ جُنَاحٌ أَنْ تَقْصُرُوا مِنَ الصَّلَاةِ إِنْ خِفْتُمْ أَنْ يَفْتِنَكُمُ الَّذِينَ كَفَرُوا

நீங்கள் பூமியில் பயணித்தால், நிராகரித்தவர்கள் உங்களை தாக்கி விடுவார்கள் என்று பயந்தால் தொழுகையை நீங்கள் சுருக்குவது உங்கள் மீது குற்றமில்லை. (அல்குர்ஆன் 4:101)

பயணம் செய்யும்போது எதிரிகளின் அச்சம் இருந்தாலும் இல்லை என்றாலும் தொழுகையை சுருக்குவது கூடும்.

عَنْ يَعْلَى بْنِ أُمَيَّةَ ﷺ قَالَ قُلْتُ لِعُمَرَ بْنِ الْخَطَّابِ {لَيْسَ عَلَيْكُمْ جُنَاحٌ أَنْ تَقْصُرُوا مِنْ الصَّلَاةِ إِنْ خِفْتُمْ أَنْ يَفْتِنَكُمْ الَّذِينَ كَفَرُوا} فَقَدْ أَمِنَ النَّاسُ فَقَالَ عَجِبْتُ مِمَّا عَجِبْتَ مِنْهُ فَسَأَلْتُ رَسُولَ اللَّهِ ﷺ عَنْ ذَلِكَ فَقَالَ صَدَقَةٌ تَصَدَّقَ اللَّهُ بِهَا عَلَيْكُمْ فَاقْبَلُوا صَدَقَتَهُ رواه مسلم برقم ٦٨٦

யஃலா இப்னு உமய்யா ﷺ கூறுகிறார்:

وَإِذَا ضَرَبْتُمْ فِي الْأَرْضِ فَلَيْسَ عَلَيْكُمْ جُنَاحٌ أَنْ تَقْصُرُوا مِنَ الصَّلَاةِ إِنْ خِفْتُمْ أَنْ يَفْتِنَكُمُ الَّذِينَ كَفَرُوا

நீங்கள் பூமியில் பயணித்தால், நிராகரித்தவர்கள் உங்களை தாக்கி விடுவார்கள் என்று பயந்தால் தொழுகையை நீங்கள் சுருக்குவது உங்கள் மீது குற்றமில்லை. (அல்குர்ஆன் 4:101)

என்று அல்லாஹ் கூறுகின்றான். ஆகவே, இப்போது மக்கள் அச்சமற்று இருக்கின்றார்களே, அப்படி இருக்க தொழுகையை சுருக்கி தொழவேண்டுமா என்று உமர் இப்னுல் கத்தாப் ﷺ அவர்களிடம் நான் கேட்டேன். நீ எதைப் பற்றி ஆச்சரியப்பட்டாயோ அதைப் பற்றி நானும்தான் ஆச்சரியப்பட்டேன். ஆகவே, அது குறித்து ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் நான் கேட்டேன். அதற்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: “இது அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய தர்மமாகும். ஆகவே, அவனுடைய தர்மத்தை நீங்கள் பெற்றுக் கொள்ளுங்கள்!”[189]

மேலும், நபி ﷺ அவர்கள், மற்றும் நபியவர்களின் நான்கு கலீஃபாக்கள்

189. நூல்: முஸ்லிம், எண்: 686

பயணத்தில் தொழுகையை சுருக்கி தொழுது வந்தார்கள். இதுதான் வாழ்நாள் எல்லாம் அவர்களின் வழக்கமாக இருந்து வந்தது.

**عَنْ عِيسَى بْنِ حَفْصِ بْنِ عَاصِمِ بْنِ عُمَرَ بْنِ الْخَطَّابِ ﵁ عَنْ أَبِيهِ قَالَ صَحِبْتُ ابْنَ عُمَرَ فِي طَرِيقِ مَكَّةَ قَالَ فَصَلَّى لَنَا الظُّهْرَ رَكْعَتَيْنِ ثُمَّ أَقْبَلَ وَأَقْبَلْنَا مَعَهُ حَتَّى جَاءَ رَحْلَهُ وَجَلَسَ وَجَلَسْنَا مَعَهُ فَحَانَتْ مِنْهُ الْتِفَاتَةٌ نَحْوَ حَيْثُ صَلَّى فَرَأَى نَاسًا قِيَامًا فَقَالَ مَا يَصْنَعُ هَؤُلَاءِ قُلْتُ يُسَبِّحُونَ قَالَ لَوْ كُنْتُ مُسَبِّحًا لَأَتْمَمْتُ صَلَاتِي يَا ابْنَ أَخِي إِنِّي صَحِبْتُ رَسُولَ اللَّهِ ﷺ فِي السَّفَرِ فَلَمْ يَزِدْ عَلَى رَكْعَتَيْنِ حَتَّى قَبَضَهُ اللَّهُ وَصَحِبْتُ أَبَا بَكْرٍ فَلَمْ يَزِدْ عَلَى رَكْعَتَيْنِ حَتَّى قَبَضَهُ اللَّهُ وَصَحِبْتُ عُمَرَ فَلَمْ يَزِدْ عَلَى رَكْعَتَيْنِ حَتَّى قَبَضَهُ اللَّهُ ثُمَّ صَحِبْتُ عُثْمَانَ فَلَمْ يَزِدْ عَلَى رَكْعَتَيْنِ حَتَّى قَبَضَهُ اللَّهُ وَقَدْ قَالَ اللَّهُ {لَقَدْ كَانَ لَكُمْ فِي رَسُولِ اللَّهِ أُسْوَةٌ حَسَنَةٌ} رواه مسلم برقم ٦٨٩**

ஹஃப்ஸ் இப்னு ஆஸிம் இப்னு உமர் இப்னுல் கத்தாப் ﵁ கூறுகிறார்: "நான் மக்காவிற்கு செல்லும் வழியில் இப்னு உமர் அவர்களுடன் இருந்தேன். அவர்கள் எங்களுக்கு ளுஹ்ர் தொழுகையை இரண்டு ரக்அத்துகளாக தொழ வைத்தார்கள். பிறகு எங்களை அவர்கள் முன்னோக்க, நாங்களும் அவர்களை முன்னோக்கி சென்றோம். இறுதியாக, அவர்கள் தமது தங்குமிடத்திற்கு வந்து அமர்ந்தார்கள். நாங்களும் அவர்களுடன் அமர்ந்தோம். அப்போது, அவர்கள் தொழுத இடத்தில் அவர்கள் திரும்பிப் பார்த்தபோது அங்கு சிலர் நின்று தொழுவதை அவர்கள் கவனித்தார்கள். இவர்கள் என்ன செய்கிறார்கள் என்று அவர்கள் கேட்டார்கள். இவர்கள் நஃபில் (சுன்னத்தான தொழுகைகளை) தொழுகிறார்கள் என்று நான் கூறினேன். அதற்கு, நான் நஃபில் (சுன்னத்) தொழுவதாக இருந்தால்

எனது (ஃபர்ழான) தொழுகையை நான் முழுமையாக தொழுது இருப்பேன். என் சகோதரரின் மகனே! நான் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடன் பயணத்தில் உடன் இருந்திருக்கின்றேன். அவர்களை அல்லாஹ் உயிர் கைப்பற்றுகின்ற வரை அவர்கள் இரண்டு ரக்அத்துகளுக்கு மேலாக அதிகம் தொழவில்லை. இன்னும், அபூ பக்ர் ؓ அவர்களுடனும் நான் (பயணத்தில்) இருந்திருக்கின்றேன். அவர்களை அல்லாஹ் உயிர் கைப்பற்றுகின்ற வரை அவர்கள் இரண்டு ரக்அத்துகளுக்கு மேலாக அதிகம் தொழவில்லை. இன்னும் உமர் ؓ அவர்களுடனும் நான் (பயணத்தில்) இருந்திருக்கின்றேன். அவர்களை அல்லாஹ் உயிர் கைப்பற்றுகின்ற வரை அவர்கள் இரண்டு ரக்அத்துகளுக்கு மேலாக அதிகம் தொழவில்லை. பிறகு, உஸ்மான் ؓ அவர்களுடனும் நான் பயணத்தில் இருந்திருக்கின்றேன். அவர்களை அல்லாஹ் உயிர் கைப்பற்றுகின்ற வரை அவர்கள் இரண்டு ரக்அத்துகளுக்கு மேலாக அதிகம் தொழவில்லை.

அல்லாஹ் கூறியிருக்கின்றான்:

لَقَدْ كَانَ لَكُمْ فِي رَسُولِ اللهِ أُسْوَةٌ حَسَنَةٌ

திட்டமாக அல்லாஹ்வுடைய தூதரிடம் உங்களுக்கு மிக அழகிய முன்மாதிரி இருக்கின்றது.[190] (அல்குர்ஆன் 33:21)

மேலும், இவ்விடத்தில் இப்னு உமர் ؓ அறிவிக்கின்ற ஓர் அறிவிப்பும் மிக முக்கியம் வாய்ந்ததாகும்.

عَنِ ابْنِ عُمَرَ ؓ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ اللهَ يُحِبُّ أَنْ تُؤْتَى رُخَصُهُ كَمَا يَكْرَهُ أَنْ تُؤْتَى مَعْصِيَتُهُ رواه أحمد برقم ٥٦٠٠

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் தனது சலுகைகள் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என்று

190. நூல்: முஸ்லிம், எண்: 689

விரும்புகிறான், தான் தடுத்த பாவங்கள் செய்யப்படுவதை அவன் வெறுப்பது போன்று.[191]

ஏகோபித்த முடிவு என்னவென்றால், பயணத்தில் சுருக்கி தொழுவது இம்மார்க்கத்தில் மிகத் தெள்ளத்தெளிவாக அறியப்பட்ட அடிப்படை விஷயங்களில் உள்ள ஒன்றாகும். இது விஷயத்தில் இந்த சமுதாயம் ஒருமித்த கருத்துடையதாக இருக்கின்றது. ஆகவே, இந்த ஸுன்னாவை பேணுதலாக பின்பற்றுவதும் இந்த சலுகையை விடாமல் கடைப்பிடிப்பதும் மிக ஏற்றமானதும் மிக சிறப்புடையதும் ஆகும்.

பயணத்தில் சுருக்கி தொழாமல், முழுமையாக தொழுவதை சில அறிஞர்கள் வெறுக்கப்பட்ட செயலாகக் கருதுகின்றனர். அதற்கு காரணம், நபி ﷺ அவர்களும் அவர்களின் தோழர்களும் இந்த சுன்னாவை நிரந்தரமாக பின்பற்றி வந்துள்ளார்கள். இதுதான் நபி ﷺ அவர்களின் வழிமுறையாகவும், வழிகாட்டலாகவும் இருந்தது.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## எந்த தொழுகையை சுருக்கி தொழுவது கூடும்?

நான்கு ரக்அத்துகளுடைய தொழுகையான ளுஹ்ர், அஸ்ர், இஷா ஆகியவற்றை இரண்டு ரக்அத்துகளாக சுருக்கி தொழுவது கூடும். மஃக்ரிபு மற்றும் ஸுப்ஹ் தொழுகையை சுருக்கி தொழுவது கூடாது. இதுதான் ஏகோபித்த முடிவாகும். நபி ﷺ அவர்களும் நபித்தோழர்களும் இப்படித்தான் செய்திருக்கின்றார்கள்.

மேலும் இப்னு அப்பாஸ் رضي الله عنه அவர்கள் இது குறித்த ஒரு நபிமொழியை அறிவிக்கின்றார்கள்.

**عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنه قَالَ فَرَضَ اللهُ الصَّلَاةَ عَلَى لِسَانِ نَبِيِّكُمْ ﷺ فِي الْحَضَرِ أَرْبَعًا وَفِي السَّفَرِ رَكْعَتَيْنِ وَفِي الْخَوْفِ رَكْعَةً رواه مسلم برقم ٦٨٧**

191. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنه, நூல்: அஹ்மது, எண்: 5600

உங்கள் நபி ﷺ அவர்களுடைய நாவினால் உள்ளூரில் தொழுகையை நான்கு ரக்அத்துகளாகவும் பயணத்தில் இரண்டு ரக்அத்துகளாகவும் (எதிரிகளின்) அச்சம் ஏற்படும்போது (அல்லது யுத்தம் நடக்கும்போது) ஒரு ரக்அத்தாகவும் அல்லாஹ் கடமையாக்கினான்.[192]

**கருத்து:** இந்த அறிவிப்பு, நான்கு ரக்அத்துகளுடைய தொழுகையைத்தான் பயணத்தில் சுருக்கி தொழவேண்டும் என்று மிகத் தெளிவாக உணர்த்துகிறது.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## தொழுகையை சுருக்கி தொழுவதற்கு பயணம் எவ்வளவு தூரமுடையதாக, எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும்?

**பயண தூரம்:**

பயண தூரம் ஏறக்குறைய பதினாறு ஃபர்ஸக் இருக்க வேண்டும். பதினாறு ஃபர்ஸக் என்பது நான்கு பரீதுகள் ஆகும். அதாவது மைல்களில் நாற்பத்தி எட்டும், கிலோமீட்டர் கணக்கில் ஏறக்குறைய எண்பதும் ஆகும்.

நடுத்தரமான நடையில் ஓர் இரவு ஒரு பகல் பயணிப்பதை நபி ﷺ அவர்கள் பயணம் என்று குறிப்பிட்டுள்ளதை நபிமொழிகளில் நாம் பார்க்கின்றோம்.

عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ قَالَ النَّبِيُّ ﷺ لَا يَحِلُّ لِامْرَأَةٍ تُؤْمِنُ بِاللّٰهِ وَالْيَوْمِ الْآخِرِ أَنْ تُسَافِرَ مَسِيرَةَ يَوْمٍ وَلَيْلَةٍ لَيْسَ مَعَهَا حُرْمَةٌ رواه البخاري برقم ١٠٨٨

நபி ﷺ கூறினார்கள்: அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட பெண் தன்னுடன் இரத்த சொந்தமான ஆண் உறவினர் இல்லாமல் ஒரு பகல், ஓர் இரவு அளவு பயணம் செய்வது ஆகுமானதல்ல.[193]

192. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 687
193. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1088

பதினாறு ஃபர்ஸக் அளவுள்ள, நான்கு பரீது தூரமுள்ள பயணத்தில் இப்னு அப்பாஸ் ﵄ அவர்களும், இப்னு உமர் அவர்களும் தொழுகையை சுருக்கி தொழுகின்றவர்களாகவும் நோன்பை விடுகின்றவர்களாகவும் இருந்தார்கள்.

**பயணத்தின் வகை:**

பயணம் ஆகுமான பயணமாக இருக்க வேண்டும். உதாரணமாக, வியாபாரப் பயணம், தொழில் துறை பயணம் மற்றும் சுற்றுலாப் பயணம் அல்லது கடமையான பயணமாக இருக்க வேண்டும்.

உதாரணமாக, ஹஜ்ஜுக்கு செல்வது, ஜிஹாதுக்கு செல்வது (மார்க்க கல்வி கற்க செல்வது) போல். அல்லது சுன்னத்தான பயணமாக இருக்க வேண்டும். உதாரணமாக, உறவுகளை சந்திப்பதற்காக பயணிப்பது, நஃபிலான ஹஜ், உம்ராவிற்கு பயணிப்பது போல்.

ஒருவரின் பயணம் பாவமானதாக இருந்தால் அவர் அந்த பயணத்தில் தொழுகையை சுருக்குவது கூடாது என்று இந்த சட்டத்தின் அடிப்படையில் அதிகமான அறிஞர்கள் கூறுகிறார்கள்.

**நான்காவது சட்டவிளக்கம்**

## ஓர் இடத்தில் 'இகாமத்' தங்குவதை மனதில் முடிவு செய்துவிட்டால் அவர் தொழுகையை சுருக்கலாமா?

இது குறித்த விளக்கத்தை நாம் அறிய வேண்டும். ஒருவர் ஓர் ஊரில் கால வரம்பு இன்றி தங்குவதை முடிவு செய்துவிட்டால் அவர் அந்த ஊரில் கஸ்ர் செய்வது -சுருக்கி தொழுவது கூடாது. ஏனெனில், சுருக்கி தொழுவதை ஆகுமாக்கக்கூடிய காரணம் அவருக்கு இல்லை.

அவ்வாறே, ஒருவர் ஓர் ஊரில் நான்கு நாள்களுக்கு மேலாக தங்குவதை முடிவு செய்தாலும் அவர் தொழுகையை சுருக்க மாட்டார். அல்லது ஒரு தேவைக்காக ஓர் ஊருக்கு வந்திருக்கின்றார். அந்த தேவை முடிவதற்கு நான்கு நாள்களுக்கு மேலாக ஆகும்

என்று அறிந்தாலும் தொழுகையை சுருக்கி தொழாமல், பூரணமாக தொழ வேண்டும்.

நபி ﷺ அவர்கள் ஹஜ்ஜுக்கு வந்தபோது பிறை நான்கில் மக்காவிற்கு வந்தார்கள். அங்கு இருபத்தி ஒன்று தொழுகைகளை தொழுதார்கள். அதில் நான்கு ரக்அத்துகள் உடைய தொழுகைகளை சுருக்கித்தான் தொழுதார்கள். எட்டாவது நாள் ஸுப்ஹ் தொழுதுவிட்டு ளுஹ்ர் தொழுகைக்கு மினாவிற்கு சென்று விட்டார்கள். ஆகவே, யார் நான்கு நாட்கள் மட்டும் அல்லது அதைவிடவும் குறைவாக ஓர் ஊரில் தங்குவதாக முடிவு செய்வாரோ அவர் தொழுகையை சுருக்கி தொழ வேண்டும். யார் இதற்கும் அதிகமாக தங்குவதற்கு முடிவு செய்வாரோ அவர் தொழுகைகளை முழுமையாக தொழவேண்டும். இவ்வாறுதான் ஹதீஸ், மற்றும் ஃபிக்ஹ் கலை அறிஞரான இமாம் அஹ்மது ரحمه الله கூறுகின்றார்கள்.

**سُئِلَ أَنَس بْنُ مَالِكٍ رضي الله عنه عَنْ قَصْرِ الصَّلَاةِ فَقَالَ سَافَرْنَا مَعَ النَّبِيِّ ﷺ مِنَ الْمَدِينَةِ إِلَى مَكَّةَ فَصَلَّى بِنَا رَكْعَتَيْنِ حَتَّى رَجَعْنَا فَسَأَلْتُهُ هَلْ أَقَامَ؟ فَقَالَ نَعَمْ أَقَمْنَا بِمَكَّةَ عَشْرً رواه أحمد برقم ١٢٩٧٥**

தொழுகையை சுருக்குவது பற்றி அனஸ் இப்னு மாலிக் رضي الله عنه அவர்களிடம் கேட்கப்பட்டது. அவதற்கு அவர்கள் கூறினார்கள்: "நாங்கள் மதீனாவிலிருந்து மக்காவிற்குச் சென்றோம். நாங்கள் திரும்பி வருகின்ற வரை எங்களுக்கு நபி ﷺ அவர்கள் இரண்டு ரக்அத்துகள்தான் தொழ வைத்தார்கள். அறிவிப்பாளர் கூறுகிறார்: நான் அனஸ் رضي الله عنه அவர்களிடம், நபி ﷺ அவர்கள் அங்கு தங்கினார்களா என்று கேட்டேன். அதற்கு அவர்கள் கூறினார்கள்: ஆம். நாங்கள் மக்காவில் பத்து நாள்கள் தங்கி இருந்தோம்."[194]

இதன் கருத்து என்னவென்றால், மக்காவில் நபி ﷺ அவர்கள் தங்கி இருந்தது, மற்றும் மினா, அரஃபா, முஸ்தலிஃபாவில் தங்கி இருந்தது

194. நூல்: முஸ்னது அஹ்மது, எண்: 12975

என அனைத்தையும் சேர்த்து பத்து நாள்கள் என்று அனஸ் ﷺ அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் ஓர் ஊருக்கு ஒரு தேவைக்காக செல்கின்றார். அந்த தேவை எப்போது முடியும், எத்தனை நாள்களில் நிறைவேறும் என்று அவருக்கு தெரியாமல் இருக்கின்றது. இந்த மனிதர் அந்த ஊரில் எத்தனை நாள்கள் தங்கி இருந்தாலும் அவர் தொழுகையை கஸ்ர் செய்துதான் தொழுவார். இவர் தொழுகையை முழுமைப்படுத்த மாட்டார். அவ்வாறே, ஒருவர் அநியாயமாக ஓர் இடத்தில் அடைக்கப்பட்டு விட்டால், அல்லது மழை காரணமாக எங்காவது அவர் தங்க வேண்டியதாக ஆகிவிட்டால் அவரும் தொழுகையை சுருக்கித் தொழுவார்.

அறிஞர் இப்னுல் முன்திர் ﵀ கூறுகிறார்: ஒரு பயணி ஓர் ஊரில் தான் எத்தனை நாள்கள் அங்கே தங்குவது என்று முடிவு செய்ய முடியாமல் இருந்தால், அவரும் தொழுகையை சுருக்கித் தொழுவார். (அவர் இந்த நிலையில் எத்தனை நாள்கள் தங்கி இருந்தாலும் சரி.)

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## பயணிகள் தொழுகையை முழுமையாக தொழ வேண்டிய நேரங்கள்

ஒருவர் பயணியாக இருந்தாலும் குறிப்பிட்ட சில நேரங்களில் அல்லது குறிப்பிட்ட சில சூழ்நிலைகளில் அவர் தொழுகையை சுருக்காமல் முழுமையாக தொழவேண்டும்.

1). **مقيم** - முகீம்: உள்ளூரில் இருப்பவர் தொழவைக்க, அவரை பின்பற்றி முஸாஃபிர் - பயணி தொழுதால் அவர் கண்டிப்பாக தொழுகையை முழுமையாக தொழவேண்டும்.

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّمَا جُعِلَ الْإِمَامُ لِيُؤْتَمَّ بِهِ رواه ابن ماجة برقم ٨٣٧

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: இமாம் ஏற்படுத்தப்பட்டது ஏனென்றால் அவரை பின்பற்றுவதற்காகத்தான்.[195]

عَنْ مُوسَى بْنِ سَلَمَةَ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ كُنَّا مَعَ ابْنِ عَبَّاسٍ بِمَكَّةَ فَقُلْتُ إِنَّا إِذَا كُنَّا مَعَكُمْ صَلَّيْنَا أَرْبَعًا وَإِذَا رَجَعْنَا إِلَى رِحَالِنَا صَلَّيْنَا رَكْعَتَيْنِ قَالَ تِلْكَ سُنَّةُ أَبِي الْقَاسِمِ ﷺ رواه أحمد برقم ١٧٦٥

நாங்கள் இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுடன் மக்காவில் இருந்தோம். அப்போது, நாங்கள் உங்களுடன் இருந்தால் நான்கு ரக்அத்துகள் தொழுகின்றோம். எங்கள் இருப்பிடங்களுக்கு திரும்பச்சென்றால் இரண்டு ரக்அத்துகள் (மட்டும்தானே) தொழுகின்றோம் என்று நான் கூறினேன். அதற்கு இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு கூறினார்கள்: இது அபுல் காசிம் ﷺ அவர்களுடைய வழிமுறையாகும்.[196]

2). தொழவைப்பவர் பயணியா அல்லது உள்ளூர்வாசியா என்று தெரியவில்லை என்றாலும் அவர் பின்னால் தொழுகின்ற பயணி தனது தொழுகையை முழுமையாக தொழவேண்டும். உதாரணமாக, விமான நிலையம் அல்லது வெளியூர்களுக்கு செல்கின்ற விரைவு சாலைகள் போன்ற பயண இடங்களில் உள்ள மஸ்ஜிதில் ஒரு பயணி தொழ செல்கின்றார். அங்கு தொழுகை நடந்துகொண்டு இருக்கின்றது. இவர் தொழுகைக்கு இடையில் வந்து சேருகிறார். தொழவைப்பவர் பயணியா அல்லது அந்த இடத்தை சேர்ந்தவரா என்று உறுதியாகத் தெரியவில்லை என்றால் இந்த பயணி மீதமுள்ள தனது தொழுகையை முழுமையாக நிறைவேற்ற வேண்டும். ஏனெனில், சுருக்கி தொழுவதற்கு உறுதியான நிய்யத் - முடிவு இருக்க வேண்டும். முடிவில் (நிய்யத்தில்) தடுமாற்றம் இருந்தால் அவர் முழுமையாகத்தான் தொழுதாக வேண்டும்.

3). பயணத்தில் சென்றுகொண்டு இருக்கும்போது தனக்கு உள்ளூரில்

195. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: இப்னு மாஜா, எண்: 837
196. அறிவிப்பாளர்: மூஸா இப்னு சலமா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: அஹமது, எண்: 1765

தவறிவிட்ட தொழுகை நினைவுக்கு வந்தால் அந்த தொழுகையை பயணத்தில் இருந்தாலும் முழுமையாகத்தான் தொழவேண்டும். உதாரணமாக, ஒருவர் அஸ்ர் தொழுவதற்கு மறந்துவிட்டார். மக்ரிபுக்குப் பின்னர் அவர் பயணத்தில் புறப்பட்டுவிட்டார். பயணத்தில் இருக்கும் போது இவருக்கு தான் அஸ்ர் தொழவில்லை என்று ஞாபகம் வருகிறது. இவர் அந்த அஸ்ர் தொழுகையை நான்கு ரக்அத்துகளாகத்தான் நிறைவேற்ற வேண்டும்.

ஒருமுறை பயணத்தில் இருக்கும்போது தூக்கம் மிகுதியால் நபி ﷺ அவர்களுக்கும் தோழர்களுக்கும் தொழுகை தவறிவிட்டது. விழித்தவுடன் அந்த இடத்தை விட்டு வேறு ஓர் இடத்திற்கு சென்று நபி ﷺ அவர்கள் ஜமாஅத்தாக தொழுகையை நிறைவேற்றிவிட்டு, பின்வருமாறு கூறினார்கள்:

**فَإِذَا رَقَدَ أَحَدُكُمْ عَنِ الصَّلَاةِ أَوْ نَسِيَهَا ثُمَّ فَزِعَ إِلَيْهَا فَلْيُصَلِّهَا كَمَا كَانَ يُصَلِّيهَا فِي وَقْتِهَا رواه مالك فى الموطأ برقم ٢٣**

உங்களில் ஒருவர் தொழாமல் தூங்கிவிட்டால் அல்லது தொழுகையை மறந்து இருந்துவிட்டால் பிறகு, அவர் அந்த தொழுகையை நிறைவேற்ற விரைந்தால் அந்த தொழுகையின் நேரத்தில் அதை எப்படி தொழுபவராக இருந்தாரோ அப்படியே அதை அவர் தொழட்டும்.[197]

உள்ளூரில் இருக்கும்போது தொழுகை முழுமையாகத்தான் இவர் மீது கடமையானது. ஆகவே, உள்ளூரில் தவறிய தொழுகையை பயணத்தில் நிறைவேற்றினாலும் அதை முழுமையாகத்தான் நிறைவேற்ற வேண்டும்.

4). பயணி ஒருவர் உள்ளூரில் இருப்பவரை பின்பற்றி தொழும்போது அவருக்கு உளூ முறிந்து விடுவதால் அவருடைய தொழுகை முறிந்து விடுகின்றது. அவர் உளூ செய்துவிட்டு வருகிறார். ஜமாஅத் தொழுகையும் முடிந்து விடுகின்றது. அவர் பயணியாக இருந்தாலும்

197. அறிவிப்பாளர்: சைது இப்னு அஸ்லம் ﵁, நூல்: முவத்தா இமாம் மாலிக், எண்: 23

அந்த தொழுகையை முழுமையாகத்தான் தொழவேண்டும். ஏனெனில், முழுமையாக தொழவேண்டிய ஒரு தொழுகையைத்தான் அவர் இப்போது மீட்டித் தொழுகிறார்.

5). பயணி ஓர் ஊரில் பொதுவாக, காலவரை இன்றி தங்குவதை (நிய்யத்) முடிவு செய்துவிட்டால் அல்லது அந்த ஊரிலேயே நிரந்தரமாக தங்கிவிட முடிவு செய்தால் அவர் தனது தொழுகையை முழுமையாக நிறைவேற்ற வேண்டும். ஏனெனில், இவருடைய விஷயத்தில் பயணத்தின் சட்டம் முடிந்து விட்டது.

**பயணியின் தொழுகையில் இரண்டு முக்கியமான அம்சங்களில் இரண்டாவது அம்சம்:**

**இரு தொழுகைகளை ஒன்று சேர்த்து ஒரே நேரத்தில் தொழுவது.**

இதில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்டவிளக்கம்**

## இரண்டு தொழுகைகளை எப்போது சேர்த்து தொழுவது, அது யாருக்கு அனுமதிக்கப்பட்டது?

தொழுகையை சுருக்கி தொழுவதற்கு அனுமதிக்கப்பட்ட பயணமாக இருந்தால் அந்த பயணத்தில் ளுஹ்ர் இன்னும் அஸ்ர் தொழுகைகளை சேர்த்து ளுஹ்ருடைய நேரத்தில் அல்லது அஸ்ருடைய நேரத்தில் தொழுவது கூடும். அவ்வாறே, மக்ரிப் மற்றும் இஷா தொழுகைகளை ஒன்று சேர்த்து மக்ரிபுடைய நேரத்தில் அல்லது இஷா உடைய நேரத்தில் தொழுவது கூடும்.

عَنْ مُعَاذِ بْنِ جَبَلٍ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ فِي غَزْوَةِ تَبُوكَ إِذَا ارْتَحَلَ قَبْلَ زَيْغِ الشَّمْسِ أَخَّرَ الظُّهْرَ إِلَى أَنْ يَجْمَعَهَا إِلَى الْعَصْرِ فَيُصَلِّيَهُمَا جَمِيعًا وَإِذَا ارْتَحَلَ بَعْدَ زَيْغِ الشَّمْسِ عَجَّلَ الْعَصْرَ إِلَى الظُّهْرِ وَصَلَّى الظُّهْرَ وَالْعَصْرَ

**جَمِيعًا ثُمَّ سَارَ وَكَانَ إِذَا ارْتَحَلَ قَبْلَ الْمَغْرِبِ أَخَّرَ الْمَغْرِبَ حَتَّى يُصَلِّيَهَا مَعَ الْعِشَاءِ وَإِذَا ارْتَحَلَ بَعْدَ الْمَغْرِبِ عَجَّلَ الْعِشَاءَ فَصَلَّاهَا مَعَ الْمَغْرِبِ رواه الترمذي برقم ٥٠٨**

நபி ﷺ அவர்கள் தபூக் போருக்காக பயணத்தில் இருந்தபோது சூரியன் நடுப்பொழுதில் இருந்து சாய்வதற்கு முன்பாக பயணம் புறப்பட்டால் ளுஹ்ர் தொழுகையை அஸ்ர் உடன் ஒன்றுசேர்த்து தொழுகின்ற வரை பிற்படுத்தி, அவ்விரண்டையும் (அஸ்ர் உடைய நேரத்தில்) தொழுவார்கள். சூரியன் நடுப்பொழுதில் இருந்து சாய்ந்த பின்பு பயணம் புறப்பட்டால் அஸ்ர் தொழுகையை தீவிரப்படுத்தி, ளுஹ்ர் தொழுகையையும் அஸ்ர் தொழுகையையும் ஒன்றாக சேர்த்து தொழுவார்கள். பிறகு, மக்ரிப் தொழுகைக்கு முன்பாக பயணம் புறப்பட்டால் மக்ரிபை பிற்படுத்தி, இஷாவுடன் தொழுவார்கள். மக்ரிபுக்கு பின்பு பயணம் புறப்பட்டால் இஷாவை தீவிரப்படுத்தி அதை மக்ரிபுடன் தொழுவார்கள்.[198]

**عن ابْنِ عَبَّاسٍ رضي الله عنه أَنَّ رَسُولَ اللهِ ﷺ جَمَعَ بَيْنَ الصَّلَاةِ فِي سَفْرَةٍ سَافَرَهَا فِي غَزْوَةِ تَبُوكَ فَجَمَعَ بَيْنَ الظُّهْرِ وَالْعَصْرِ وَالْمَغْرِبِ وَالْعِشَاءِ قَالَ سَعِيدٌ فَقُلْتُ لِابْنِ عَبَّاسٍ مَا حَمَلَهُ عَلَى ذٰلِكَ قَالَ أَرَادَ أَنْ لَا يُحْرِجَ أُمَّتَهُ رواه مسلم برقم ٧٠٥**

இப்னு அப்பாஸ் رضي الله عنه கூறுகின்றார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தபூக் போருக்கு மேற்கொண்ட பயணத்தில் ளுஹ்ர் மற்றும் அஸ்ர் தொழுகையையும் மக்ரிப் மற்றும் இஷா தொழுகையையும் சேர்த்து தொழுதார்கள். இதன் அறிவிப்பாளர் சயீது رحمه الله கூறுகிறார்: நபி ﷺ அவர்கள் இப்படி செய்வதற்கு என்ன காரணம் என்று இப்னு

198. அறிவிப்பாளர்: முஆத் இப்னு ஜபல் رضي الله عنه, நூல்: திர்மிதி, எண்: 508

அப்பாஸ் ﵄ அவர்களிடம் நான் கேட்டேன். நபி ﷺ அவர்கள் தனது உம்மத்திற்கு சிரமம் தராமல் இருக்க வேண்டும் என்று விரும்பினார்கள் என இப்னு அப்பாஸ் ﵄ கூறினார்கள்.[199]

பயணம் செய்துகொண்டிருக்கின்ற நிலையிலும் அல்லது பயணத்தில் ஓர் இடத்தில் தங்கி இருக்கின்ற நிலையிலும் இவ்வாறு சேர்த்து தொழுவது கூடும். ஏனெனில், இது பயணத்தின் சலுகைகளில் ஒரு சலுகையாகும். ஆகவே, வாகனத்தில் பயணித்துக் கொண்டிருக்கின்ற நிலையில்தான் சேர்த்து தொழுவது கூடும் என்று கூறமுடியாது. பயணத்தின் மற்ற சலுகைகளை பயணத்தில் அனுபவிப்பது அனுமதிக்கப்பட்டது போன்றே சேர்த்து தொழுகின்ற இந்த சலுகையும் பயணத்தின் எல்லா நேரங்களிலும் அனுமதிக்கப்பட்டதாகும். இருப்பினும் பயணத்தின் நடுவில் அல்லது இறுதியில் ஓர் இடத்தில் தங்கி இருக்கின்றபோது ஒவ்வொரு தொழுகையையும் அந்தந்த நேரத்தில் தொழுவது சிறப்பாகும்.

நபி ﷺ அவர்கள் ஹஜ்ஜுடைய காலத்தில் மினாவில் தங்கி இருந்தபோது ஒவ்வொரு தொழுகையையும் அதன் அதன் நேரத்தில் தொழுதார்கள். நான்கு ரக்அத்துகளை சுருக்கி தொழுதார்கள். அரஃபா மற்றும் முஸ்தலிஃபாவில் சுருக்கியும் சேர்த்தும் தொழுதார்கள்.

மினாவில் சேர்த்து தொழாததற்கு காரணம் அங்கு அவர்கள் தங்கிவிட்டார்கள். அரஃபா மற்றும் முஸ்தலிஃபாவில் சேர்த்து தொழுததற்கு காரணம் அந்த இரண்டு இடங்களிலும் அவர்கள் சில மணி நேரங்கள்தான் தங்கினார்கள்.

உள்ளூரில் தங்கி இருக்கின்ற நோயாளி சேர்த்து தொழுவதை விடுவதால் அவருக்கு சிரமம் ஏற்படும் என்று இருந்தால் சேர்த்து தொழுவது அத்தகைய உள்ளூர் நோயாளிக்கும் அனுமதிக்கப்பட்டதாகும்.

199. நூல்: முஸ்லிம், எண்: 705

**عَنْ سَعِيدِ بْنِ جُبَيْرٍ عَنِ ابْنِ عَبَّاسٍ ﷺ قَالَ جَمَعَ رَسُولُ اللّٰهِ ﷺ بَيْنَ الظُّهْرِ وَالْعَصْرِ وَالْمَغْرِبِ وَالْعِشَاءِ بِالْمَدِينَةِ فِي غَيْرِ خَوْفٍ وَلَا مَطَرٍ وَفِي حَدِيثِ أَبِي مُعَاوِيَةَ قِيلَ لِابْنِ عَبَّاسٍ مَا أَرَادَ إِلَى ذٰلِكَ قَالَ أَرَادَ أَنْ لَا يُحْرِجَ أُمَّتَهُ رواه مسلم برقم ٧٠٥**

ஒரு சமயம் மதீனாவில் பயமும் மழையும் இல்லாமல் இருந்தபோதும் ளுஹ்ர் மற்றும் அஸ்ர் தொழுகையையும் மக்ரிப் மற்றும் இஷா தொழுகையையும் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் சேர்த்து தொழுதார்கள். நபி ﷺ அவர்கள் இப்படி செய்வதன் நோக்கம் என்ன என்று இப்னு அப்பாஸ் ؓ அவர்களிடம் நான் (-ஸயீது இப்னு ஜுபைர்) கேட்டபோது. நபி ﷺ அவர்கள் தனது உம்மத்திற்கு சிரமம் தராமல் இருக்க வேண்டும் என்று விரும்பினார்கள் என இப்னு அப்பாஸ் ؓ கூறினார்கள்.[200]

மழை மற்றும் எதிரிகளின் அச்சம் இல்லை என்றால் அங்கு நோயைத் தவிர வேறு ஒரு காரணம் இல்லை.

இமாம் திர்மிதி ؒ அவர்கள் ஹம்னா பின்த் ஜஹஷ் ؓ வாயிலாக அறிவிக்கின்ற நபிமொழியில்[201], இஸ்திஹாழா உள்ள பெண் இரு நேரத் தொழுகைகளை சேர்த்து தொழும்படி நபி ﷺ அவர்கள் கூறியதை பதிவு செய்துள்ளார்கள். மாதவிடாயை விட அதிகமாக வருகின்ற உதிரபோக்கைத்தான் இஸ்திஹாழா என்று கூறப்படுகின்றது. இது ஒரு நோயாகும். அதனால்தான் இஸ்திஹாழா உள்ள பெண் தொழுகைகளை சேர்த்து தொழட்டும் என நபி ﷺஅவர்கள் கூறினார்கள்.

இரண்டு நேரத் தொழுகைகளை நபி ﷺ அவர்கள் ஏன் சேர்த்து தொழுதார்கள் என்ற கேள்விக்கு தனது சமுதாய மக்களை

---

200. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ؓ, நூல்: முஸ்லிம், எண்: 705
201. நூல்: திர்மிதி எண்: 118. பாடம்: முஸ்தஹாழா இரு நேரத் தொழுகைகளை சேர்ப்பாள்.

சிரமப்படுத்தாமல் இருக்கவேண்டும் என்பதுதான் நபி ﷺ அவர்களின் இந்த செயலுக்கு காரணம் என்று இப்னு அப்பாஸ் ؓ கூறினார்கள். ஆகவே, சேர்த்து தொழவில்லை என்றால் அங்கு சிரமம் ஏற்படும் என்று இருந்தால் அப்போது சேர்த்து தொழுவது ஆகுமாகிவிடும். இந்த நேரத்தில் நோயாளி, நோயற்றவர், அல்லது வேறு ஏதாவது காரணத்தால் சிரமப்படுபவர், அல்லது பயணி, உள்ளூர்வாசி என்றெல்லாம் காரணம் கவனிக்கப்படாது. "தொழுகையை சேர்த்து தொழுவதுதான் இலகுவானது; இந்த நேரத்தில் அப்படி செய்யவில்லை என்றால் அது மிகுந்த சிரமத்தை ஏற்படுத்திவிடும்" என்று இருந்தால் அப்போது சேர்த்து தொழுவது கூடும்.

**தொழுகையை சேர்த்து தொழுவதற்கு பயணம், நோய் அல்லாத மற்ற காரணங்கள் பின்வருமாறு:**

1). ஆடைகள் நனைந்துவிடுகின்ற அளவிற்கு பெய்யக்கூடிய மழை, அந்த மழையில் நனைந்து செல்வதால் தொழுகையாளிக்கு சிரமம் ஏற்படும் என்று இருந்தால் சேர்த்து தொழலாம்.

2). மஸ்ஜிதிற்கு செல்கின்ற பாதைகள் சேரும் சகதியுமாக இருந்து, அதில் நடந்து செல்வது சிரமமாக இருந்தால் சேர்த்து தொழுவது கூடும்.

3). வழக்கத்தை விட வேகமாக காற்று வீசுகின்றபோதும் சேர்த்து தொழுவது கூடும்.

இன்னும் இதுபோன்ற வேறு சிரமங்கள் இருந்தால், அந்த நேரத்தில் தொழுகையை சேர்த்து தொழவில்லை என்றால் அதிக சிரமம் ஏற்படும் என்று இருக்கும்போது சேர்த்து தொழுவது கூடும்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## சேர்த்து தொழுவதின் மார்க்க வரையறை

பயணி அல்லது சேர்த்து தொழுவது அனுமதிக்கப்பட்டவர்கள் ளுஹ்ர்

இன்னும் அஸ்ர் தொழுகையை சேர்த்து ளுஹ்ருடைய நேரத்தில் அல்லது அஸ்ர் உடைய நேரத்தில் தொழலாம். அவ்வாறே, மக்ரிப் இன்னும் இஷா தொழுகையை மக்ரிபுடைய நேரத்தில் அல்லது இஷா உடைய நேரத்தில் சேர்த்து தொழலாம்.

இதற்கு ஆதாரம் முன்னர் கூறப்பட்ட இப்னு அப்பாஸ் ﵄ அவர்களின் அறிவிப்பாகும். இந்த நடைமுறையை அபூ பக்ர் ﵁ அவர்களும் உமர் ﵁ அவர்களும் பின்பற்றி இருக்கின்றார்கள்.

-----------------------

பத்தாவது பாடம்

# الباب العاشر في صلاة الجمعة

## ஜுமுஆ தொழுகை

இதில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதலாவது சட்டவிளக்கம்**

## ஜுமுஆ தொழுகையின் சட்டம் மற்றும் அதன் ஆதாரம்

ஜுமுஆ தொழுகை ஆண்கள் மீது **فرض العين** ஃபர்முல் அய்ன் -கட்டாயக் கடமையாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا إِذَا نُودِيَ لِلصَّلَاةِ مِنْ يَوْمِ الْجُمُعَةِ
فَاسْعَوْا إِلَى ذِكْرِ اللهِ وَذَرُوا الْبَيْعَ

நம்பிக்கையாளர்களே! வெள்ளிக்கிழமையில் தொழுகைக்கு அழைக்கப்பட்டால் அல்லாஹ்வின் நினைவின் பக்கம் விரையுங்கள்! வர்த்தகத்தை விட்டுவிடுங்கள்! (அல்குர்ஆன் 62:9)

عَنْ حَفْصَةَ رضي الله عنها زَوْجِ النَّبِيِّ ﷺ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ رَوَاحُ الْجُمُعَةِ وَاجِبٌ عَلَى كُلِّ مُحْتَلِمٍ رواه النسائي برقم ١٥٣٤

நிச்சயமாக நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: ஜுமுஆவிற்கு செல்வது வயது வந்த அனைவர் மீது கடமையாகும்.[202]

عن عَبْدِ اللهِ بْنِ عُمَرَ وَأَبِي هُرَيْرَةَ رضي الله عنهم إِنَّهُمَا سَمِعَا رَسُولَ اللهِ ﷺ يَقُولُ عَلَى أَعْوَادِ مِنْبَرِهِ لَيَنْتَهِيَنَّ أَقْوَامٌ عَنْ وَدْعِهِمْ الْجُمُعَاتِ أَوْ لَيَخْتِمَنَّ اللهُ عَلَى قُلُوبِهِمْ ثُمَّ لَيَكُونُنَّ مِنَ الْغَافِلِينَ رواه مسلم برقم ٨٦٥

அப்துல்லாஹ் இப்னு உமர், அபூ ஹுரைரா رضي الله عنهم இருவரும் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தமது மிம்பரின் கட்டைகளின் மீது நின்று பின்வருமாறு கூறியதை செவியுற்றார்கள்: (அதாவது) சில மக்கள் ஜுமுஆக்களை அவர்கள் விடுவதை விட்டும் விலகிக் கொள்ளட்டும். இல்லையென்றால் அல்லாஹ் அவர்களுடைய உள்ளங்கள் மீது முத்திரை இட்டுவிடுவான். பிறகு, அவர்கள் **غَافِلِينَ** - காஃபிலீன் அலட்சியக்காரர்களில் ஆகிவிடுவார்கள்.[203]

இந்த ஹதீஸுக்கு விளக்கம் தரும்போது இமாம் நவவி رحمه الله கூறுகிறார்கள்: ஜுமுஆ தொழுகை ஃபர்ழ் அய்ன் என்பதற்கு இந்த நபிமொழியில் ஆதாரம் உள்ளது.[204]

عَنْ طَارِقِ بْنِ شِهَابٍ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ الْجُمُعَةُ حَقٌّ وَاجِبٌ عَلَى كُلِّ مُسْلِمٍ فِي جَمَاعَةٍ إِلَّا أَرْبَعَةً عَبْدٌ مَمْلُوكٌ أَوْ امْرَأَةٌ أَوْ صَبِيٌّ أَوْ مَرِيضٌ رواه أبو داود برقم ٩٠١

---

202. அறிவிப்பாளர்: நபி ﷺ மனைவியார் ஹஃப்ஸா رضي الله عنها, நூல்: நசாயி, எண்: 1354
203. நூல்: முஸ்லிம், எண்: 865
204. ஸஹீஹ் முஸ்லிமுக்கு இமாம் நவவி رحمه الله அவர்கள் எழுதிய விரிவுரை

நபி ﷺ கூறினார்கள்: ஒவ்வொரு முஸ்லிம் மீதும் ஜமாஅத்துடன் (கூட்டாக) ஜுமுஆ தொழுவது கட்டாயக் கடமையாகும். ஆனால், நான்கு மனிதர்களைத் தவிர. 1). அடிமை, 2). பெண், 3). சிறுவர், 4). நோயாளி. (ஆகியோர் மீது ஜுமுஆ கடமையல்ல).[205]

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## ஜுமுஆ தொழுகை யார் மீது கடமை?

- முஸ்லிமாக இருக்க வேண்டும்
- ஆடவராக இருக்க வேண்டும்
- சுதந்திரமானவராக இருக்க வேண்டும்
- பருவ வயது அடைந்தவராக இருக்க வேண்டும்
- புத்தி சுவாதினமுள்ளவராக இருக்க வேண்டும்
- ஜுமுஆ தொழுகையை நிறைவேற்ற ஆற்றல் உள்ளவராக இருக்க வேண்டும்
- முகீமாக (-ஓர் ஊரில் தங்கியவராக) இருக்க வேண்டும்.

மேற்கூறப்பட்ட நிபந்தனைகளில் ஒன்று தவறினாலும் அவர் மீது ஜுமுஆ கடமையாகாது. ஆகவே, அடிமைகள், பெண்கள், சிறுவர்கள், பைத்தியமானவர்கள், நோயாளிகள், பயணிகள் மீது ஜுமுஆ தொழுகை கடமை இல்லை.

عَنْ طَارِقِ بْنِ شِهَابٍ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ الْجُمُعَةُ حَقٌّ وَاجِبٌ عَلَى كُلِّ مُسْلِمٍ فِي جَمَاعَةٍ إِلَّا أَرْبَعَةً عَبْدٌ مَمْلُوكٌ أَوْ امْرَأَةٌ أَوْ صَبِيٌّ أَوْ مَرِيضٌ رواه أبو داود برقم ٩٠١

நபி ﷺ கூறினார்கள்: ஒவ்வொரு முஸ்லிம் மீதும் ஜமாஅத்துடன் (கூட்டாக) ஜுமுஆ தொழுவது கட்டாயக் கடமையாகும். ஆனால்,

205. அறிவிப்பாளர்: தாரிக் இப்னு ஷிஹாப் رضي الله عنه, நூல்: அபூ தாவூத். எண்: 901

நான்கு மனிதர்களைத் தவிர. 1). அடிமை, 2). பெண், 3). சிறுவர், 4). நோயாளி. (ஆகியோர் மீது ஜுமுஆ கடமையல்ல).[206]

பயணிகள் மீதும் ஜுமுஆ கடமை இல்லை. நபி ﷺ அவர்கள் தமது பயணங்களில் ஜுமுஆ தொழுததில்லை. அவர்கள் ஹஜ் செய்ய மக்கா வந்திருந்தபோது வெள்ளிக்கிழமை அரஃபா மைதானத்தில் தங்கி இருந்தார்கள். ஆனால், அவர்கள் ஜுமுஆ தொழாமல், ளுஹ்ரையும் அஸரையும் சேர்த்து தொழுதார்கள். பயணியாக இருக்கின்ற ஒருவர் ஜுமுஆ தொழுகை நடைபெறுகின்ற ஊரில் தங்கினால் அவர் அந்த ஊர் முஸ்லிம்களுடன் சேர்ந்து ஜுமுஆ தொழுகையை நிறைவேற்ற வேண்டும்.

அவ்வாறே, பெண்கள், அடிமைகள், நோயாளிகள், சிறுவர்கள், பயணிகள் ஜுமுஆ தொழுகையில் கலந்துகொண்டால் அது அவர்களுக்கு ளுஹ்ர் தொழுகைக்கு பதிலாக போதுமானதாக ஆகிவிடும்.

**மூன்றாவது சட்டவிளக்கம்:**

## ஜுமுஆ தொழுகையின் நேரம்

ளுஹ்ர் தொழுகையின் நேரம்தான் ஜுமுஆ தொழுகையின் நேரம் ஆகும். அதாவது, சூரியன் நடுவானத்திலிருந்து சாய்ந்த உடன் ஆரம்பமாகி ஒரு பொருளின் நிழல் அதுபோன்ற அளவு வருகின்ற வரை இதன் நேரம் நீடித்து இருக்கும்.

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷺ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يُصَلِّي الْجُمُعَةَ حِينَ تَمِيلُ الشَّمْسُ**

**رواه البخاري برقم ٩٠٤**

நபி ﷺ அவர்கள், சூரியன் (நடுவானிலிருந்து) சாய்கின்ற நேரத்தில் ஜுமுஆவை தொழுபவர்களாக இருந்தார்கள்.[207]

206. அறிவிப்பாளர்: தாரிக் இப்னு ஷிஹாப் ﷺ, நூல்: அபூ தாவூத். எண்: 901
207. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﷺ, நூல்: புகாரி, எண்: 904

இவ்வாறுதான் ஜுமுஆத் தொழுகையை நபித்தோழர்கள் தொழுது வந்தார்கள் என்று இமாம் இப்னு ஹஜர் ﷬ அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.[208]

ஆகவே, ஜுமுஆவின் நேரம் முடிவதற்கு முன்பாக யார் ஒரு ரக்அத்தை முழுமையாக தொழுகின்ற அளவு நேரத்தை அடைவாரோ அவர் ஜுமுஆவை அடைந்தவராவார். அப்படி இல்லையென்றால் அவர் ளுஹ்ர்தான் தொழவேண்டும்.

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ مَنْ أَدْرَكَ رَكْعَةً مِنْ الصَّلَاةِ فَقَدْ أَدْرَكَ الصَّلَاةَ رواه البخاري برقم ٥٨٠ ومسلم ٦٠٧

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் தொழுகையில் இருந்து ஒரு ரக்அத்தை பெற்றுக்கொள்வாரோ அவர் அந்த தொழுகையை பெற்றுக்கொண்டார்.[209]

**நான்காவது சட்டவிளக்கம்**

## ஜுமுஆ தொழுகைக்கு குத்பா

ஜுமுஆ தொழுகைக்கு குத்பா - பிரசங்கம் மிக முக்கியமான ஒரு ருக்னாகும். குத்பா இல்லாமல் ஜுமுஆ தொழுகை நிறைவேறாது. நபி ﷺ அவர்கள் ஒருபோதும் குத்பா இல்லாமல் ஜுமுஆ தொழுகையை நிறைவேற்றியதில்லை. வாழ்நாள் எல்லாம் குத்பாவுடன்தான் ஜுமுஆ தொழுகையை நபி ﷺ நிறைவேற்றி வந்தார்கள்.

- இந்த பிரசங்கத்தில் இரண்டு அமர்வுகள் இருக்க வேண்டும்.
- இந்த பிரசங்கம் தொழுகைக்கு முன்பாக நடைபெற வேண்டும்.

208. ஸஹீஹுல் புகாரியின் விரிவுரை ஃபத்ஹுல் பாரி.
209. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: புகாரி, எண்: 580, முஸ்லிம், எண்: 607.

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## குத்பாவின் சுன்னத்துகள்

குத்பாவின் சுன்னத்துகள் - பிரசங்கத்தில் பின்பற்ற வேண்டிய நபிவழிகள் பின்வருமாறு:

1). பிரசங்கம் செய்பவர் தனது பிரசங்கத்தில் முஸ்லிம்களின் இம்மை மறுமை நன்மைகளுக்காக துஆ கேட்க வேண்டும். முஸ்லிம்களின் ஆட்சியாளர்களின் நேர்வழி மற்றும் நல்வழிக்காகவும் துஆ கேட்க வேண்டும்.

عَنِ الزُّهْرِيِّ ﵁ أَنَّهُ قَالَ كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ إِذَا خَطَبَ يَوْمُ الْجُمْعَةِ دَعَا فَأَشَارَ بِأُصْبُعِهِ وَأَمَّنَ النَّاسُ رَوَاهُ حَرْبٌ فِي مَسَائِلِهِ وَعَلَّقَهُ الْبَيْهَقِيُّ مُرْسَلًا

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் வெள்ளிக்கிழமை பிரசங்கம் செய்யும் போது துஆ கேட்பார்கள். அப்போது தனது விரலால் (அதை உயர்த்தி) சைக்கினை செய்வார்கள். மக்கள் ஆமீன் கூறுவார்கள்.[210]

2). குத்பா -பிரசங்கத்தையும் தொழுகையையும் ஒருவர் நடத்த வேண்டும்.

3). பிரசங்கம் செய்பவர் முடிந்தளவு குரலை உயர்த்தி தெளிவாக பேசவேண்டும்.

4). நின்றவராக பிரசங்கம் நிகழ்த்த வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَإِذَا رَأَوْا تِجَارَةً أَوْ لَهْوًا انْفَضُّوا إِلَيْهَا وَتَرَكُوكَ قَائِمًا

அவர்கள் ஏதாவது வியாபாரத்தை அல்லது வேடிக்கையை பார்த்தால் நீர் நிற்கின்ற நிலையில் உம்மை விட்டுவிட்டு அதன் பக்கம் ஓடிவிடுவார்கள். (அல்குர்ஆன் 62:11)

---

210. அறிவிப்பாளர்: தாபியி ஸுஹ்ரி﵀, நூல்: இமாம் ஹர்ப் அவர்கள் எழுதிய மஸாயில்

**கருத்து:** இந்த வசனத்தில் **قَائِمًا** - காயிமா என்று வந்துள்ள வார்த்தை நபி ﷺ அவர்கள் நின்றவராக குத்பா - பிரசங்கம் நிகழ்த்தினார்கள் என்பதை தெளிவுபடுத்துகிறது.

**عَنْ جَابِرِ بْنِ سَمُرَةَ رضي الله عنه أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يَخْطُبُ قَائِمًا ثُمَّ يَجْلِسُ ثُمَّ يَقُومُ فَيَخْطُبُ قَائِمًا فَمَنْ نَبَّأَكَ أَنَّهُ كَانَ يَخْطُبُ جَالِسًا فَقَدْ كَذَبَ فَقَدْ وَاللهِ صَلَّيْتُ مَعَهُ أَكْثَرَ مِنْ أَلْفَيْ صَلَاةٍ رواه مسلم برقم ٨٦٢**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் நின்றவர்களாக பிரசங்கம் செய்வார்கள். பிறகு, அமர்வார்கள். பிறகு, எழுந்து பிரசங்கம் செய்வார்கள். நபி ﷺ அவர்கள் உட்கார்ந்தவர்களாக பிரசங்கம் நிகழ்த்துவார்கள் என்று யாராவது உமக்கு செய்தி கூறினால் அவர் பொய் கூறுகிறார். அல்லாஹ்வின் மீது சத்தியமாக நான் அவர்களுடன் இரண்டாயிரம் தொழுகைக்கு அதிகமாக தொழுதிருக்கின்றேன்.[211]

5). பிரசங்கம் ஓர் உயரமான இடத்தில் அல்லது ஒரு மேடையின் மீது இருக்க வேண்டும்.

இமாம் புகாரி رحمه الله அவர்கள் "மிம்பர் -மேடையின் மீது நின்று பிரசங்கம் நிகழ்த்துவது" என்ற பாடத்தில் இது பற்றி பல நபிமொழிகளை பதிவு செய்துள்ளார்கள். அவற்றில் ஒன்று:

**عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ رضي الله عنه قَالَ سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَخْطُبُ عَلَى الْمِنْبَرِ فَقَالَ مَنْ جَاءَ إِلَى الْجُمُعَةِ فَلْيَغْتَسِلْ رواه البخاري برقم ٩١٩**

நபி ﷺ அவர்கள் மிம்பர் மீது பிரசங்கம் நிகழ்த்தியவர்களாக, "யார் ஜுமுஆவிற்கு வருவாரோ அவர் குளிக்கட்டும்" என்று கூறியதை நான் செவியுற்றேன் என அப்துல்லாஹ் இப்னு உமர் رضي الله عنه அறிவிக்கின்றார்கள்.[212]

211. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு சமுரா رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 862
212. நூல்: புகாரி, 919

உயரமான இடத்தில் இருந்து பிரசங்கம் நிகழ்த்துவது கருத்துகளை எடுத்துச்சொல்வதில் மிக அழுத்தமாகவும் உபதேசத்திற்கு ஆழ்ந்த தாக்கத்தை ஏற்படுத்தக்கூடியதாகவும் இருக்கும்.

6). பிரசங்கத்தின் நடுவில் சிறிது நேரம் அமர்ந்து பிறகு மீண்டும் பிரசங்கத்தை தொடர வேண்டும். அதாவது இரண்டு பிரசங்கங்கள் இடம் பெறவேண்டும்.

**عَنْ جَابِرِ بْنِ سَمُرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يَخْطُبُ قَائِمًا ثُمَّ يَجْلِسُ ثُمَّ يَقُومُ فَيَخْطُبُ قَائِمًا رواه مسلم برقم ٨٦٢**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் நின்றவர்களாக பிரசங்கம் செய்வார்கள். பிறகு, அமர்வார்கள். பிறகு, எழுந்து, நின்றவர்களாக பிரசங்கம் செய்வார்கள்.[213]

**عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ ﵄ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ يَخْطُبُ خُطْبَتَيْنِ يَقْعُدُ بَيْنَهُمَا رواه البخاري برقم ٩٢٨**

நபி ﷺ அவர்கள் இரண்டு பிரசங்கம் நிகழ்த்துவார்கள். அந்த இரண்டுக்கும் இடையில் அமர்வார்கள்.[214]

7). இரண்டு குத்பாக்களும் சுருக்கமாக இருக்க வேண்டும். இரண்டாவது குத்பா முதலாவதைவிட சுருக்கமாக இருக்க வேண்டும்.

**عَنْ وَاصِلِ بْنِ حَيَّانَ ﵁ قَالَ قَالَ أَبُو وَائِلٍ خَطَبَنَا عَمَّارٌ فَأَوْجَزَ وَأَبْلَغَ فَلَمَّا نَزَلَ قُلْنَا يَا أَبَا الْيَقْظَانِ لَقَدْ أَبْلَغْتَ وَأَوْجَزْتَ فَلَوْ كُنْتَ تَنَفَّسْتَ فَقَالَ إِنِّي سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ إِنَّ طُولَ صَلَاةِ الرَّجُلِ وَقِصَرَ خُطْبَتِهِ مَئِنَّةٌ**

---

213. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு சமுரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 862

214. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ﵄, நூல்: புகாரி, எண்: 928

مِنْ فِقْهِهِ فَأَطِيلُوا الصَّلَاةَ وَاقْصُرُوا الْخُطْبَةَ وَإِنَّ مِنَ الْبَيَانِ سِحْرًا رواه مسلم برقم ٨٦٩

அபூ வாயில் ﵁ கூறுகிறார், அம்மார் ﵁ அவர்கள் எங்களுக்கு (ஜுமுஆ) குத்பா பிரசங்கம் நிகழ்த்தினார்கள். மிகவும் சுருக்கமாகவும் மிகவும் ஆழமாகவும் அந்த பிரசங்கத்தை நிகழ்த்தினார்கள். அவர்கள் (மிம்பரிலிருந்து) இறங்கியபோது, "அபுல் யக்ளான் அவர்களே! மிகவும் சுருக்கமாகவும் மிகவும் ஆழமாகவும் அந்த பிரசங்கத்தை நிகழ்த்தினீர்கள். (குத்பாவை) கொஞ்சம் நீங்கள் நீட்டி இருக்கலாமே!" என்று கூறினோம். அதற்கு அவர்கள் கூறினார்கள்: "நிச்சயமாக ஒரு மனிதரின் தொழுகை நீளமாக இருப்பதும், அவரது பிரசங்கம் சுருக்கமாக இருப்பதும் அவருடைய ஞானத்தின் அடையாளமாகும்." ஆகவே, தொழுகையை நீட்டுங்கள்! பிரசங்கத்தை சுருக்குங்கள்! பேச்சில் ஒரு சூனியம் இருக்கின்றது.[215]

8). பிரசங்கம் நிகழ்த்துபவர் மிம்பரின் மீது ஏறி மக்களை முன்னோக்கும்போது அவர்களுக்கு ஸலாம் கூற வேண்டும்.

عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ إِذَا صَعِدَ الْمِنْبَرَ سَلَّمَ رواه ابن ماجة برقم ١٠٩٩

நபி ﷺ அவர்கள் மிம்பரின் மீது ஏறினால் ஸலாம் கூறுபவர்களாக இருந்தார்கள்.[216]

9). மிம்பரின் மீது ஏறியவுடன் முஅத்தின், அதான் கூறி முடிக்கின்றவரை இமாம் மிம்பர் மீது அமர்ந்திருக்க வேண்டும்.

عَنِ ابْنِ عُمَرَ ﵄ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ يَخْطُبُ خُطْبَتَيْنِ كَانَ يَجْلِسُ إِذَا صَعِدَ

215. அறிவிப்பாளர்: வாசில் இப்னு ஹய்யான் ﵁, நூல்: முஸ்லிம், எண்: 869
216. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ﵁, நூல்: இப்னு மாஜா, எண்: 1099

**الْمِنْبَرَ حَتَّى يَفْرَغَ أُرَاهُ قَالَ الْمُؤَذِّنُ ثُمَّ يَقُومُ فَيَخْطُبُ ثُمَّ يَجْلِسُ فَلَا يَتَكَلَّمُ ثُمَّ يَقُومُ فَيَخْطُبُ رواه أبو داود برقم ٩٢١**

இப்னு உமர் ﷺ கூறுகிறார்கள்: நபி ﷺ அவர்கள் இரண்டு குத்பா - பிரசங்கம் நிகழ்த்துவார்கள். மிம்பரில் ஏறியவுடன் முஅத்தின் அதான் கூறி முடிக்கின்றவரை அமர்ந்திருப்பார்கள். பிறகு, எழுந்து பிரசங்கம் செய்வார்கள். பிறகு, அமர்வார்கள். (ஆனால், யாரிடமும் ஏதும்) பேச மாட்டார்கள். பிறகு, எழுந்து பிரசங்கம் செய்வார்கள்.[217]

10). பிரசங்கம் நிகழ்த்துபவர் கைத்தடி அல்லது அது போன்ற ஒன்றின் மீது ஊன்றியவராக பிரசங்கம் செய்வது சுன்னாவாகும்.

**فَأَقَمْنَا بِهَا أَيَّامًا شَهِدْنَا فِيهَا الْجُمُعَةَ مَعَ رَسُولِ اللهِ ﷺ فَقَامَ مُتَوَكِّئًا عَلَى عَصًا أَوْ قَوْسٍ فَحَمِدَ اللهَ وَأَثْنَى عَلَيْهِ رواه أبو داود برقم ٩٢٤**

ஹகம் இப்னு ஹஸ்ன் அல்குலஃபி ﷺ கூறுகிறார்கள்: நாங்கள் பல நாட்கள் நபி ﷺ அவர்களுடன் தங்கி இருந்தோம். அந்த நாட்களில் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடன் ஜுமுஆ தொழுகையில் நாங்கள் கலந்துகொண்டோம். அவர்கள் ஒரு கைத்தடி அல்லது ஒரு வில்லின் மீது சாய்ந்தவர்களாக நின்று, அல்லாஹ்வை புகழ்ந்து, அவனை துதித்து பிரசங்கம் நிகழ்த்தினார்கள்.[218]

11). மக்களை முன்னோக்கி, முகம்பார்த்து பிரசங்கம் நிகழ்த்த வேண்டும்.

நபி ﷺ அவர்கள் இவ்வாறுதான் பிரசங்கம் நிகழ்த்துகின்ற பழக்கம் உள்ளவர்களாக இருந்தார்கள்.

217. நூல்: அபூ தாவூத், எண்: 921
218. அறிவிப்பாளர்: **الْحَكَمُ بْنُ حَزْنٍ الْكُلَفِيُّ** நூல்: அபூ தாவூத், எண்: 924

**ஆறாவது சட்டவிளக்கம்**

# ஜும்முஆ தினத்தன்று ஹராமான -தடுக்கப்பட்ட செயல்கள்

**1). இமாம் பிரசங்கம் நிகழ்த்தும்போது பேசுவது ஹராம் ஆகும்.**

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ تَكَلَّمَ يَوْمَ الْجُمُعَةِ وَالْإِمَامُ يَخْطُبُ فَهُوَ كَمَثَلِ الْحِمَارِ يَحْمِلُ أَسْفَارًا وَالَّذِي يَقُولُ لَهُ أَنْصِتْ لَيْسَ لَهُ جُمُعَةٌ رواه أحمد برقم ١٩٢٩**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: வெள்ளிக்கிழமையில் இமாம் பிரசங்கம் நிகழ்த்தும்போது யார் பேசுவாரோ அவர் ஏடுகளை சுமக்கின்ற கழுதைகளைப் போன்றாவார். யார் பேசுபவரைப் பார்த்து வாய்மூடி இரு என்று கூறுவாரோ அவருக்கு ஜும்முஆ(உடைய நன்மை) இல்லை.[219]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَخْبَرَهُ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ إِذَا قُلْتَ لِصَاحِبِكَ يَوْمَ الْجُمُعَةِ أَنْصِتْ وَالْإِمَامُ يَخْطُبُ فَقَدْ لَغَوْتَ رواه البخاري برقم ٩٣٤**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: வெள்ளிக்கிழமையில் இமாம் பிரசங்கம் செய்துகொண்டிருக்க நீ உனது தோழரைப் பார்த்து வாய்மூடி இரு என்று கூறினால் நீ வீணான செயலை செய்துவிட்டாய்.[220]

**2). அமர்ந்திருக்கின்ற மக்களின் பிடரிகளை தாண்டி செல்வது ஹராம் ஆகும்.**

219. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵁, நூல்: அஹ்மது, எண்: 1929
220. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்; புகாரி, எண்: 934

**عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللّٰهِ ﵁ أَنَّ رَجُلًا دَخَلَ الْمَسْجِدَ يَوْمَ الْجُمُعَةِ وَرَسُولُ اللّٰهِ ﷺ يَخْطُبُ فَجَعَلَ يَتَخَطَّى النَّاسَ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ اجْلِسْ فَقَدْ آذَيْتَ وَآنَيْتَ رواه ابن ماجة برقم ١١٠٥**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் வெள்ளிக்கிழமை பிரசங்கம் நிகழ்த்திக் கொண்டிருந்தபோது ஒரு மனிதர் மஸ்ஜிதிற்குள் நுழைந்தார். அவர் மக்களின் பிடரிகளை தாண்டி முன்னுக்கு வர ஆரம்பித்தார். அப்போது, "நீர் அமர்வீராக! தொந்தரவு தந்துவிட்டீர், தாமதமாக வந்தீர்" என்று நபி ﷺ அவருக்கு கூறினார்கள்.[221]

**عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ بُسْرٍ ﵁ قَالَ جَاءَ رَجُلٌ يَتَخَطَّى رِقَابَ النَّاسِ فَقَالَ لَهُ رَسُولُ اللّٰهِ ﷺ أَيْ اجْلِسْ فَقَدْ آذَيْتَ رواه النسائي برقم ١٣٨٢**

ஒருவர் மக்களின் பிடரிகளை தாண்டிக்கொண்டு வந்தார். அவரைப் பார்த்து ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: "நீர் உட்காருவீராக! திட்டமாக தொந்தரவு தந்துவிட்டீர்![222]

இவ்வாறு, (அமர்ந்து இருப்பவர்களின் பிடரிகளை) தாண்டி வருவதால் தொழுகையாளிகளுக்கு தொந்தரவும் குத்பாவை செவியுருவதற்கு இடையூறும் ஏற்படுகின்றது. இமாம் முன் வரிசைக்கு வருவதற்கு வேறு வழி இல்லையென்றால் மட்டும் மக்களை தாண்டி வருவது இமாமுக்கு அனுமதிக்கப்படும்.

3). **அமர்ந்திருக்கின்ற இருவரை பிரித்துவிட்டு அவர்களுக்கு நடுவில் உட்காருவது தடுக்கப்பட்ட செயலாகும்.**

**عَنْ سَلْمَانَ الْفَارِسِيِّ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ مَنْ اغْتَسَلَ يَوْمَ الْجُمُعَةِ وَتَطَهَّرَ بِمَا اسْتَطَاعَ مِنْ طُهْرٍ ثُمَّ ادَّهَنَ أَوْ مَسَّ مِنْ طِيبٍ ثُمَّ رَاحَ فَلَمْ**

221. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ﵁, நூல்: இப்னு மாஜா, எண்: 1105
222. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு புஸ்ர் ﵁, நூல்: நசாயி, எண்: 1382

يُفَرِّقْ بَيْنَ اثْنَيْنِ فَصَلَّى مَا كُتِبَ لَهُ ثُمَّ إِذَا خَرَجَ الْإِمَامُ أَنْصَتَ غُفِرَ لَهُ مَا بَيْنَهُ وَبَيْنَ الْجُمُعَةِ الْأُخْرَى رواه البخاري برقم ٩١٠

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் வெள்ளிக்கிழமை அன்று குளித்து, முடிந்தளவு சுத்தமடைந்து, பிறகு, எண்ணெய் தேய்த்து, நறுமணம் பூசி, மஸ்ஜிதிற்கு வந்து, இருவரை பிரிக்காமல் தனக்கு (விதியில்) எழுதப்பட்ட எண்ணிக்கையளவு தொழுதுவிட்டு, இமாம் (குத்பாவிற்கு) வெளியேறி வந்தவுடன் வாய்மூடி செவி சாய்த்து (பிரசங்கத்தைக்) கேட்பாரோ அவருக்கு இந்த ஜுமுஆவிற்கும் மற்றொரு ஜுமுஆவிற்கும் இடையில் உள்ள (சிறு பாவங்கள்) எல்லாம் மன்னிக்கப்பட்டுவிடும்.[223]

**ஏழாவது சட்டவிளக்கம்**

## ஜுமுஆவை எதைக்கொண்டு அடைய முடியும்

ஒருவருக்கு இமாமுடன் ஒரு ரக்அத் கிடைத்துவிட்டால் அவருக்கு ஜுமுஆ கிடைத்ததாக ஆகும்.

عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنهما قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ مَنْ أَدْرَكَ رَكْعَةً مِنْ صَلَاةِ الْجُمُعَةِ أَوْ غَيْرِهَا فَقَدْ أَدْرَكَ الصَّلَاةَ رواه ابن ماجة برقم ١١١٣

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்; யார் ஜுமுஆ தொழுகையில் அல்லது மற்ற தொழுகையில் ஒரு ரக்அத்தை பெறுவாரோ அவர் அந்த தொழுகையை பெற்றுவிட்டார்.[224]

عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ مَنْ أَدْرَكَ رَكْعَةً مِنَ الصَّلَاةِ فَقَدْ أَدْرَكَ الصَّلَاةَ رواه البخاري برقم ٥٨٠ و مسلم برقم ٦٠٧

223. அறிவிப்பாளர்: சல்மான் அல்ஃபார்ஸி رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 910
224. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنهما, நூல்: இப்னு மாஜா, எண்: 1113

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் தொழுகையில் இருந்து ஒரு ரக்அத்தை பெற்றுக்கொள்வாரோ அவர் அந்த தொழுகையை பெற்றுக்கொண்டார்.[225]

ஒருவருக்கு ஒரு ரக்அத் முழுமையாக கிடைக்கவில்லை என்றால் அதாவது முதல் அல்லது இரண்டாவது ஸுஜூதில் அல்லது இறுதி இருப்பில் வந்து இமாமுடன் சேர்ந்தால் அவர் அதை ளுஹ்ர் தொழுகையாக நிறைவேற்ற வேண்டும்.

**எட்டாவது சட்டவிளக்கம்**

## ஜுமுஆ உடைய நஃபில் தொழுகைகள்

ஜுமுஆ தொழுகைக்கு முன்சுன்னத் இல்லை. ஆனால், ஜுமுஆவின் நேரம் வருவதற்கு முன்பு (இமாம் மிம்பரில் ஏறுவதற்கு முன்னர்) விரும்பியவர் விரும்பிய எண்ணிக்கையில் நஃபில் தொழுது கொள்ளலாம்.

**عَنْ سَلْمَانَ الْفَارِسِيِّ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ اغْتَسَلَ يَوْمَ الْجُمُعَةِ وَتَطَهَّرَ بِمَا اسْتَطَاعَ مِنْ طُهْرٍ ثُمَّ ادَّهَنَ أَوْ مَسَّ مِنْ طِيبٍ ثُمَّ رَاحَ فَلَمْ يُفَرِّقْ بَيْنَ اثْنَيْنِ فَصَلَّى مَا كُتِبَ لَهُ ثُمَّ إِذَا خَرَجَ الْإِمَامُ أَنْصَتَ غُفِرَ لَهُ مَا بَيْنَهُ وَبَيْنَ الْجُمُعَةِ الْأُخْرَى رواه البخاري برقم ٩١٠**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் வெள்ளிக்கிழமை அன்று குளித்து, முடிந்தளவு சுத்தமடைந்து, பிறகு, எண்ணெய் தேய்த்து, நறுமணம் பூசி, மஸ்ஜிதிற்கு வந்து, இருவரை பிரிக்காமல் தனக்கு (விதியில்) எழுதப்பட்ட எண்ணிக்கையளவு தொழுதுவிட்டு, இமாம் (குத்பாவிற்கு) வெளியேறி வந்தவுடன் வாய்மூடி செவி சாய்த்து (பிரசங்கத்தைக்) கேட்ப்பாரோ அவருக்கு இந்த ஜுமுஆவிற்கும்

225. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 580, முஸ்லிம், எண்: 607.

மற்றொரு ஜும்முஆவிற்கும் இடையில் உள்ள (சிறு பாவங்கள்) எல்லாம் மன்னிக்கப்பட்டுவிடும்.[226]

நபித்தோழர்கள் இவ்வாறுதான் செய்துவந்தார்கள். நஃபில் தொழுவது பொதுவாக சிறப்பான ஒன்றுதான். அதை விடுவது பழிப்புக்குரிய செயலாக ஆகாது.

ஆனால், ஜும்முஆ உடைய பின் சுன்னத்தை இரண்டு ரக்அத்துகள், அல்லது நான்கு ரக்அத்துகள் அல்லது ஆறு ரக்அத்துகளாக நபி ﷺ அவர்கள் தொழுதுள்ளார்கள்.

**عَنْ سَالِمٍ عَنْ أَبِيهِ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يُصَلِّي بَعْدَ الْجُمُعَةِ رَكْعَتَيْنِ رواه مسلم برقم ٨٨٢**

நபி ﷺ அவர்கள் ஜும்முஆவிற்கு பின்னர் இரண்டு ரக்அத்துகள் தொழுவார்கள் என்று தனது தந்தை அப்துல்லாஹ் இப்னு உமர் ﵁ கூறியதாக சாலிம் ﵀ அறிவிக்கிறார்கள்.[227]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا صَلَّى أَحَدُكُمْ الْجُمُعَةَ فَلْيُصَلِّ بَعْدَهَا أَرْبَعَ رَكَعَاتٍ رواه أحمد برقم ١٠٠٨١**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் ஜும்முஆ தொழுதால் அதற்கு பின்னர் நான்கு ரக்அத்துகள் தொழட்டும்.[228]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ كَانَ مِنْكُمْ مُصَلِّيًا بَعْدَ الْجُمُعَةِ فَلْيُصَلِّ أَرْبَعًا رواه مسلم برقم ٨٨١**

ரஸூலுல்லாஹ் ﵁ அவர்கள் கூறினார்கள்: உங்களில் யார் ஒருவர்

226. அறிவிப்பாளர்: சல்மான் அல்ஃபார்ஸி ﵁, நூல்: புகாரி, எண்: 910
227. நூல்; முஸ்லிம், எண்: 882
228. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: அஹமது, எண்: 10081

ஜுமுஆவிற்கு பின்னர் தொழுபவராக இருப்பாரோ அவர் நான்கு ரக்அத்துகள் தொழட்டும்.[229]

عَنْ عَطَاءٍ ﵁ قَالَ كَانَ ابْنُ عُمَرَ إِذَا صَلَّى الْجُمُعَةَ صَلَّى بَعْدَهَا سِتَّ رَكَعَاتٍ رَكْعَتَيْنِ ثُمَّ أَرْبَعًا رواه ابن أبي شيبة برقم ٥٤١٢

இப்னு உமர் ﵁ அவர்கள் ஜுமுஆ தொழுதால் அதற்கு பின்னர் ஆறு ரக்அத்துகள் தொழுவார்கள். இரண்டு ரக்அத்துகள் தொழுவார்கள். பிறகு, நான்கு ரக்அத்துகள் தொழுவார்கள்.[230]

عن عَطَاء ﵁ أَنَّهُ رَأَى ابْنَ عُمَرَ يُصَلِّي بَعْدَ الْجُمُعَةِ فَيَنْمَازُ عَنْ مُصَلَّاهُ الَّذِي صَلَّى فِيهِ الْجُمُعَةَ قَلِيلًا غَيْرَ كَثِيرٍ قَالَ فَيَرْكَعُ رَكْعَتَيْنِ قَالَ ثُمَّ يَمْشِي أَنْفَسَ مِنْ ذَلِكَ فَيَرْكَعُ أَرْبَعَ رَكَعَاتٍ قُلْتُ لِعَطَاءٍ كَمْ رَأَيْتَ ابْنَ عُمَرَ يَصْنَعُ ذَلِكَ قَالَ مِرَارًا رواه أبو داود برقم ٩٥٨

இப்னு உமர் ﵁ அவர்கள் ஜுமுஆவிற்குப் பின்னர் தொழுவதை தான் பார்த்ததாக அதா ﵀ கூறுகிறார். அதாவது ஜுமுஆ தொழுத இடத்திலிருந்து அதிகம் இல்லாமல் கொஞ்சம் நகர்ந்து சென்று இரண்டு ரக்அத்துகள் தொழுவார்கள். பிறகு, அதை விட கொஞ்சம் தள்ளி சென்று நான்கு ரக்அத்துகள் தொழுவார்கள். இப்னு ஜுரைஜ் ﵀ கூறுகிறார், இப்னு உமர் ﵁ இவ்வாறு செய்வதை நீங்கள் எத்தனை முறை பார்த்தீர் என்று நான் அதா ﵀ அவர்களிடம் கேட்டேன். பல முறை என்று அதா ﵀ கூறினார்.[231]

மேற்கூறப்பட்ட அறிவிப்புகளில் இருந்து ஜுமுஆவிற்குப் பின்னர் சுன்னத் தொழுகையின் குறைந்தபட்ச எண்ணிக்கை இரண்டு

229. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 881
230. அறிவிப்பாளர்: அதா ﵁, நூல்: முஸன்னஃப் இப்னு அபீ ஷைபா, எண்: 5412
231. நூல்: அபூ தாவூத், எண்: 958

ரக்அத்துகளாகும். அதிகபட்சம் ஆறு ரக்அத்துகளாகும் என்று அறிய முடிகிறது.

இப்னு தைமிய்யா ﷺ கூறுகிறார்கள்: இந்த சுன்னத் தொழுகையை மஸ்ஜிதில் தொழுதால் நான்கு ரக்அத்துகள் தொழவேண்டும். வீட்டில் தொழுதால் இரண்டு ரக்அத்துகள் தொழவேண்டும்.[232]

**ஒன்பதாவது சட்டவிளக்கம்**

## ஜுமுஆ தொழுகையின் முறை

ஜுமுஆ இரண்டு ரக்அத்துகளாகும். இரண்டு ரக்அத்துகளிலும் சப்தமாக ஓதவேண்டும். நபி ﷺ அவர்கள் இப்படித்தான் வாழ்நாள் முழுவதும் தொழுது வந்தார்கள். இதுதான் அறிஞர்களின் ஏகோபித்த முடிவாகும்.

முதல் ரக்அத்தில் சூராத்துல் ஃபாத்திஹா ஓதிய பின்னர் சூரத்துல் ஜுமுஆவும் இரண்டாவது ரக்அத்தில் சூராத்துல் ஃபாத்திஹா ஓதிய பின்னர் சூரா அல்முனாஃபிக்கூன் ஓத வேண்டும். அல்லது முதல் ரக்அத்தில் சூரத்துல் அஃலாவும் இரண்டாவது ரக்அத்தில் சூரத்துல் காஷியாவும் ஓதவேண்டும்.

நபி ﷺ அவர்கள் இவ்வாறுதான் ஓதுவார்கள்.

**عَنِ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رضي الله عنه أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يَقْرَأُ فِي الْعِيدَيْنِ وَيَوْمِ الْجُمُعَةِ بِسَبِّحْ اسْمَ رَبِّكَ الْأَعْلَى وَهَلْ أَتَاكَ حَدِيثُ الْغَاشِيَةِ رواه أبو داود برقم ٩٤٧**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இரண்டு பெருநாள் தொழுகையிலும் வெள்ளிக்கிழமையிலும் ஸப்பிஹிஸ்ம ரப்பிகல் அஃலா என்று

232. அறிவிப்பாளர்: இப்னுல் கையும் ﷺ, நூல்: ஸாதுல் மஆத்

ஆரம்பமாகும் சூராவையும் ஹல் அதாக்க ஹதீஸுல் காஷியா என்று ஆரம்பமாகும் சூராவையும் ஓதுகின்றவர்களாக இருந்தார்கள்.[233]

**عَنْ سَمُرَةَ بْنِ جُنْدُبٍ رضي الله عنه أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يَقْرَأُ فِي صَلَاةِ الْجُمُعَةِ بِسَبِّحْ اسْمَ رَبِّكَ الْأَعْلَى وَهَلْ أَتَاكَ حَدِيثُ الْغَاشِيَةِ رواه أبو داود برقم ٩٥٠**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஜுமுஆ தொழுகையில் ஸப்பிஹிஸ்ம ரப்பிகல் அஃலா என்று ஆரம்பமாகும் சூராவையும் ஹல் அதாக்க ஹதீஸுல் காஷியா என்று ஆரம்பமாகும் சூராவையும் ஓதுகின்றவர்களாக இருந்தார்கள்.[234]

**عَنِ ابْنِ أَبِي رَافِعٍ رضي الله عنه قَالَ اسْتَخْلَفَ مَرْوَانُ أَبَا هُرَيْرَةَ عَلَى الْمَدِينَةِ وَخَرَجَ إِلَى مَكَّةَ فَصَلَّى لَنَا أَبُو هُرَيْرَةَ الْجُمُعَةَ فَقَرَأَ بِسُورَةِ الْجُمُعَةِ فِي السَّجْدَةِ الْأُولَى وَفِي الْآخِرَةِ إِذَا جَاءَكَ الْمُنَافِقُونَ قَالَ فَأَدْرَكْتُ أَبَا هُرَيْرَةَ حِينَ انْصَرَفَ فَقُلْتُ لَهُ إِنَّكَ قَرَأْتَ بِسُورَتَيْنِ كَانَ عَلِيُّ بْنُ أَبِي طَالِبٍ يَقْرَأُ بِهِمَا بِالْكُوفَةِ فَقَالَ أَبُو هُرَيْرَةَ إِنِّي سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقْرَأُ بِهِمَا يَوْمَ الْجُمُعَةِ رواه مسلم برقم ٨٧٧**

இப்னு அபீ ராஃபி رضي الله عنه கூறுகிறார், (மதீனாவின் கவர்னராக இருந்த) மர்வான், அபூ ஹுரைரா رضي الله عنه அவர்களை மதீனாவில் தனக்கு பிரதிநிதியாக ஆக்கிவிட்டு மக்காவிற்கு புறப்பட்டு சென்றார். அப்போது அபூ ஹுரைரா رضي الله عنه அவர்கள் எங்களுக்கு ஜுமுஆ தொழவைத்தார்கள். முதல் ரக்அத்தில் சூரத்துல் ஜுமுஆவையும் அடுத்த ரக்அத்தில் இதா ஜாஅக்கல் முனாஃபிகூன் சூராவையும் ஓதினார்கள். அவர் தொழுது முடித்து திரும்பியபோது, நீங்கள் இரண்டு சூராக்களை ஓதினீர்கள். கூஃபாவில் அலி رضي الله عنه அவர்கள்

233. அறிவிப்பாளர்: நுஃமான் இப்னு பஷீர் رضي الله عنه, நூல்: அபூ தாவூத், எண்: 947
234. அறிவிப்பாளர்: சமுரா இப்னு ஜுன்துப் رضي الله عنه, நூல்: அபூ தாவூத், எண்: 950

(ஜும்முஆ தொழுகையில்) இந்த இரண்டு சூராக்களையும் ஓதுபவர்களாக இருந்தார்கள் என்று நான் கூறினேன். அதற்கு அபூ ஹுரைரா ﷺ கூறினார்கள்: வெள்ளிக்கிழமையில் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இந்த இரண்டு சூராக்கள் ஓதுவதை நிச்சயமாக நான் செவியுற்று இருக்கின்றேன்.[235]

**பத்தாவது சட்டவிளக்கம்**

## ஜும்முஆவின் சுன்னத்துகள்

**1). அதிகமான நன்மைகளை பெறுவதற்காக ஜும்முஆ தொழுகைக்கு விரைவாக செல்லவேண்டும்.**

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ مَنْ اغْتَسَلَ يَوْمَ الْجُمُعَةِ غُسْلَ الْجَنَابَةِ ثُمَّ رَاحَ فَكَأَنَّمَا قَرَّبَ بَدَنَةً وَمَنْ رَاحَ فِي السَّاعَةِ الثَّانِيَةِ فَكَأَنَّمَا قَرَّبَ بَقَرَةً وَمَنْ رَاحَ فِي السَّاعَةِ الثَّالِثَةِ فَكَأَنَّمَا قَرَّبَ كَبْشًا أَقْرَنَ وَمَنْ رَاحَ فِي السَّاعَةِ الرَّابِعَةِ فَكَأَنَّمَا قَرَّبَ دَجَاجَةً وَمَنْ رَاحَ فِي السَّاعَةِ الْخَامِسَةِ فَكَأَنَّمَا قَرَّبَ بَيْضَةً فَإِذَا خَرَجَ الْإِمَامُ حَضَرَتْ الْمَلَائِكَةُ يَسْتَمِعُونَ الذِّكْرَ

**رواه البخاري برقم ٨٨١**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் ஜும்முஆ தினத்தில் பெருந்தொடக்குடைய குளிப்பாக குளிப்பாரோ பிறகு, (முதல் நேரத்தில் மஸ்ஜிதிற்கு) செல்வாரோ அவர் ஓர் ஒட்டகத்தை குர்பானி கொடுத்தது போன்றாகும். யார் இரண்டாவது நேரத்தில் செல்வாரோ அவர் ஒரு மாட்டை குர்பானி கொடுத்தது போன்றாகும். யார் மூன்றாவது நேரத்தில் செல்வாரோ அவர் கொம்புகள் உடைய ஒரு நல்ல ஆட்டை குர்பானி கொடுத்தது போன்றாகும். யார் நான்காவது நேரத்தில் செல்வாரோ அவர் ஒரு கோழியை குர்பானி கொடுத்தது

235. நூல்: முஸ்லிம், எண்: 877

போன்றாகும். யார் ஐந்தாவது நேரத்தில் செல்வாரோ அவர் ஒரு முட்டையை குர்பானி கொடுத்தது போன்றாகும். ஆக, இமாம் (குத்பா - பிரசங்கம்) நிகழ்த்துவதற்கு புறட்டு வந்துவிட்டால் வானவர்கள் உபதேசத்தை செவியுறுவதற்கு ஆஜராகி விடுவார்கள்.[236]

عَنْ أَوْسِ بْنِ أَوْسٍ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ مَنْ اغْتَسَلَ يَوْمَ الْجُمُعَةِ وَغَسَّلَ وَبَكَّرَ وَابْتَكَرَ وَدَنَا وَاسْتَمَعَ وَأَنْصَتَ كَانَ لَهُ بِكُلِّ خُطْوَةٍ يَخْطُوهَا أَجْرُ سَنَةٍ صِيَامُهَا وَقِيَامُهَا رواه الترمذي برقم ٤٥٦

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் ஜுமுஆ தினத்தன்று தலைக்கு தண்ணீர் ஊற்றி உடல் முழுவதும் குளித்து விரைவாக ஜுமுஆவிற்கு வந்து குத்பாவை அடைந்துவிடுவாரோ, (இமாமுக்கு) நெருக்கமாக அமர்ந்து, மவுனமாக இருந்து (பிரசங்கத்தை) செவியுறுவாரோ அவருக்கு அவர் எடுத்துவைத்துவந்த ஒவ்வொரு எட்டுக்கும் ஓர் ஆண்டு நோன்பு இன்னும் தொழுகையின் நற்கூலி கிடைக்கும்.[237]

2). **ஜுமுஆ தினத்தன்று குளிப்பது சுன்னாவாகும்**. சற்று முன் கூறப்பட்ட நபிமொழி இதை உறுதிப்படுத்துகின்றது.

மேலும்,

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﷺ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ قَالَ غُسْلُ الْجُمُعَةِ وَاجِبٌ عَلَى كُلِّ مُحْتَلِمٍ رواه أحمد برقم ١١١٤٩

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஜுமுஆவின் குளிப்பு பருவவயதை அடைந்த ஒவ்வொருவர் மீது கடமையாகும்.[238]

236. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: புகாரி, எண்: 881
237. அறிவிப்பாளர்: அவ்ஸ் இப்னு அவ்ஸ் ﷺ, நூல்: திர்மிதி, எண்: 456
238. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ﷺ, நூல்: அஹ்மது, எண்: 11149

இந்த அறிவிப்பில் கூறப்பட்டுள்ள வாசகத்தை கவனிக்கும்போது ஜுமுஆ தினத்தன்று குளிப்பது கடமை ஆகும், தகுந்த காரணமின்றி இந்த கடமை விலகிவிடாது என்று சொல்வதுதான் வலுவான, பேணுதலான கூற்றாக இருக்கும்.

3). ஜுமுஆ தினத்தன்று நறுமணம் பூசுவது, துர்வாடைகளை நீக்கி மேலதிக சுத்தத்தை ஏற்படுத்துவது சுன்னவாகும். மேலும், உடலில் உள்ள தேவையற்ற முடிகளை அதாவது அக்குள் முடி, மர்மஸ்தானத்தின் முடிகளை அகற்றுவதும் நகங்களை வெட்டுவதும் மீசையை கத்தரிப்பதும் சுன்னாவாகும்.

**عَنْ سَلْمَانَ الْفَارِسِيِّ ﷺ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ لَا يَغْتَسِلُ رَجُلٌ يَوْمَ الْجُمُعَةِ وَيَتَطَهَّرُ مَا اسْتَطَاعَ مِنْ طُهْرٍ وَيَدَّهِنُ مِنْ دُهْنِهِ أَوْ يَمَسُّ مِنْ طِيبِ بَيْتِهِ ثُمَّ يَخْرُجُ فَلَا يُفَرِّقُ بَيْنَ اثْنَيْنِ ثُمَّ يُصَلِّي مَا كُتِبَ لَهُ ثُمَّ يُنْصِتُ إِذَا تَكَلَّمَ الْإِمَامُ إِلَّا غُفِرَ لَهُ مَا بَيْنَهُ وَبَيْنَ الْجُمُعَةِ الْأُخْرَى رواه البخاري برقم ٨٨٣**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: ஒருவர் ஜுமுஆ தினத்தன்று குளித்து முடிந்தளவு சுத்தமாகி, தனது எண்ணையிலிருந்து எண்ணைய் பூசி, அல்லது தனது நறுமனத்திலிருந்து நறுமணம் பூசி, பிறகு, மஸ்ஜிதுக்கு புறப்பட்டு, இருவருக்கு இடையில் பிரிக்காமல், பிறகு தனக்கு (விதியில்) எழுதப்பட்ட அளவு தொழுதுவிட்டு இமாம் உரையாற்ற ஆரம்பித்தபோது மவுனமாக இருந்தால் அவருக்கு இந்த ஜுமுஆ தினத்திற்கும் அடுத்த ஜுமுஆவிற்கும் இடையில் உள்ளவை மன்னிக்கப்பட்டுவிடும்.[239]

ஸஹீஹுல் புகாரியின் விரிவுரையாளர் இப்னு ஹஜர் ﵀ கூறுகிறார்: **وَيَتَطَهَّرُ مَا اسْتَطَاعَ مِنْ طُهْرٍ** - முடிந்தளவு சுத்தமாகி என்ற பதம் அதிகப்படியான சுத்தத்தை குறிக்கின்றது. மேலும், குளிப்பைப் பற்றி கூறிய பிறகு இதை கூறுவது மீசையை குறைப்பதையும்

239. அறிவிப்பாளர்: சல்மான் ஃபார்ஸி ﵁, நூல்: புகாரி, எண்: 883

நகங்களை வெட்டுவதையும் மர்மஸ்தான முடிகளை களைவதையும் குறிக்கின்றது. (ஃபத்ஹுல் பாரி)

**4). தன்னிடம் இருக்கின்ற ஆடைகளில் அழகிய ஆடையை அணிவதும் சுன்னாவாகும்.**

**عَنْ عَبْدِ اللهِ بْنِ عُمَرَ رضي الله عنه أَنَّ عُمَرَ بْنَ الْخَطَّابِ رَأَى حُلَّةً سِيَرَاءَ عِنْدَ بَابِ الْمَسْجِدِ فَقَالَ يَا رَسُولَ اللهِ لَوْ اشْتَرَيْتَ هَذِهِ فَلَبِسْتَهَا يَوْمَ الْجُمُعَةِ وَلِلْوَفْدِ إِذَا قَدِمُوا عَلَيْكَ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّمَا يَلْبَسُ هَذِهِ مَنْ لَا خَلَاقَ لَهُ فِي الْآخِرَةِ ثُمَّ جَاءَتْ رَسُولَ اللهِ ﷺ مِنْهَا حُلَلٌ فَأَعْطَى عُمَرَ بْنَ الْخَطَّابِ رضي الله عنه مِنْهَا حُلَّةً فَقَالَ عُمَرُ يَا رَسُولَ اللهِ كَسَوْتَنِيهَا وَقَدْ قُلْتَ فِي حُلَّةِ عُطَارِدٍ مَا قُلْتَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنِّي لَمْ أَكْسُكَهَا لِتَلْبَسَهَا فَكَسَاهَا عُمَرُ بْنُ الْخَطَّابِ رضي الله عنه أَخًا لَهُ بِمَكَّةَ مُشْرِكًا رواه البخاري برقم ٨٨٦**

உமர் இப்னுல் கத்தாப் رضي الله عنه (ஒருமுறை) மஸ்ஜிதின் வாசலுக்கு அருகில் பட்டு நூலினால் மஞ்சள் நிற கோடுகள் உள்ள ஓர் உயர்ந்த ஆடையை பார்த்தார்கள். அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் இதை வாங்கி வெள்ளிக்கிழமைக்கும் குழுக்கள் உங்களிடம் வரும்போது அவர்களைச் சந்திக்கும்போதும் நீங்கள் இதை அணிந்துகொண்டால் நன்றாக இருக்குமே என்று கூறினார்கள். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: "மறுமையில் யாருக்கு எவ்வித பங்கும் இல்லையோ அவர்தான் இதை அணிவார்." பிறகு, (ஒரு நாள்) அந்த ஆடைகளில் சில நபி ﷺ அவர்களிடம் வந்தன. அவற்றில் ஓர் ஆடையை நபி ﷺ அவர்கள் உமர் இப்னுல் கத்தாபுக்கு கொடுத்தார்கள். அதற்கு, அல்லாஹ்வின் தூதரே! இதை எனக்கு கொடுக்கிறீர்கள். ஆனால், உதாரித் விற்றுக்கொண்டிருந்த அந்த ஆடை விஷயத்தில் நீங்கள் ஒரு பெரிய விஷயத்தை கூறினீர்களே என்று உமர் رضي الله عنه அவர்கள்

கூறினார்கள். அதற்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக நான் இதை நீங்கள் அணிவதற்காக உங்களுக்கு கொடுக்கவில்லை. (ஆகவே, அதை உமர் அவர்கள் பெற்றுக் கொண்டு) பிறகு, அதை மக்காவில் தமக்கு இருந்த ஒரு முஷ்ரிக்கான சகோதரருக்கு அனுப்பிக் கொடுத்தார்கள்.[240]

இந்த ஹதீஸை இமாம் புகாரி ؒ அவர்கள் "வெள்ளிக்கிழமைக்காக தன்னிடம் உள்ள அழகான ஆடையை அணிவார்" என்ற பாடத்தில் பதிவு செய்துள்ளார்கள். இமாம் இப்னு ஹஜர் ؒ கூறுகிறார்: இந்த ஹதீஸிருந்து மேல்கூறப்பட்ட கருத்து எப்படி புரியப்படுகின்றது என்றால், "இதை வாங்கி நீங்கள் வெள்ளிக்கிழமை அணிவதற்கு வைத்துக் கொள்ளலாமே" என்று உமர் அவர்கள், கூறியதை நபி ﷺ அவர்கள் மறுக்கவில்லை. மாறாக, அந்த நோக்கத்திற்கு இந்த ஆடையை வாங்க முடியாது. காரணம், இது பட்டு கலந்து செய்யப்பட்டுள்ளது. ஆகவே, அதை முஸ்லிம்கள் அணியக்கூடாது என்று நபி ﷺ அவர்கள் விளக்கம் கூறினார்கள்.

மேலும், நபி ﷺ கூறினார்கள்:

**عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ سَلَامٍ ؓ أَنَّهُ سَمِعَ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ عَلَى الْمِنْبَرِ فِي يَوْمِ الْجُمُعَةِ مَا عَلَى أَحَدِكُمْ لَوْ اشْتَرَى ثَوْبَيْنِ لِيَوْمِ الْجُمُعَةِ سِوَى ثَوْبِ مِهْنَتِهِ رواه ابن ماجة برقم ١٠٨٥**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் வெள்ளிக்கிழமையில் மிம்பர் மீது கூறியதை தான் செவியுற்றதாக அப்துல்லாஹ் இப்னு ஸலாம் ؓ கூறுகிறார்கள்: "உங்களில் ஒருவர் தனது அன்றாட வேலைக்கு பயன்படுத்துகின்ற ஆடை அல்லாமல், வெள்ளிக்கிழமைக்காக இரு ஆடைகளை (மேலாடை ஒன்றையும், கீழாடை ஒன்றையும்) வாங்கி

240. அறிவிப்பாளர்: இப்னு உமர் ؓ, நூல்: புகாரி, எண்: 886

வைத்துக்கொண்டால் அவர் மீது அது குற்றமாகாது. (அதாவது, அது நல்லதுதானே. அதை செய்யலாமே என்று ஆர்வமூட்டினார்கள்.)[241]

5). வெள்ளிக்கிழமை இரவிலும் பகலிலும் நபி ﷺ அவர்கள் மீது அதிகம் ஸலவாத் கூறுவது சுன்னாவாகும்.

عَنْ أَنَسٍ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ أَكْثِرُوا الصَّلَاةَ عَلَيَّ يَوْمَ الْجُمُعَةِ وَلَيْلَةَ الْجُمُعَةِ فَمَنْ صَلَّى عَلَيَّ صَلَاةً صَلَّى اللهُ عَلَيْهِ عَشْرًا

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: வெள்ளிக்கிழமையிலும் வெள்ளி இரவும் என் மீது அதிகம் ஸலவாத் கூறுங்கள்! என் மீது யார் ஒரு முறை ஸலவாத் கூறுவாரோ அவர் மீது அல்லாஹ் பத்து விசேஷ ரஹ்மத்துகளை அருள் புரிகின்றான்.[242]

**6)**. வெள்ளிக்கிழமை காலை ஃபஜ்ர் தொழுகையில் முதல் ரக்அத்தில் ஃபாத்திஹாவிற்கு **பின்பு சூரா அஸ்ஸஜ்தாவையும்** இரண்டாவது ரக்அத்தில் ஃபாத்திஹாவிற்கு பின்பு **சூரத்துல் இன்ஸான் (சூரா அத்தஹ்ர்) ஐயும் ஓதுவது சுன்னவாகும்**. இது நபி ﷺ அவர்களின் தொடர் வழக்கமாக இருந்தது.

عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ كَانَ النَّبِيُّ ﷺ يَقْرَأُ فِي الْجُمُعَةِ فِي صَلَاةِ الْفَجْرِ الم تَنْزِيلُ السَّجْدَةَ وَهَلْ أَتَى عَلَى الْإِنْسَانِ حِينٌ مِنَ الدَّهْرِ

நபி ﷺ அவர்கள் ஜுமுஆ நாளில் ஃபஜ்ர் தொழுகையில் அலிஃப் லாம் தன்சீல் என்று ஆரம்பமாகும் ஸஜ்தா சூராவையும் ஹல் அதா அலல் இன்ஸான் ஹீனும் மீனத் தஹ்ர் என்று ஆரம்பமாகும் (தஹ்ர்) சூராவையும் ஓதுபவர்களாக இருந்தார்கள்.[243]

241. நூல்: இப்னு மாஜா, எண்: 1085

242. அறிவிப்பாளர்: அனஸ் رضي الله عنه, நூல்: அஸ்ஸுனன் அல்குப்ரா - அல்பைஹக்கி.

243. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 842

**7). வெள்ளிகிழமை பகலில் சூரா அல்கஹ்ஃப் ஓதுவது சுன்னாவாகும்.**

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ إِنَّ مَنْ قَرَأَ سُورَةَ الْكَهْفِ يَوْمَ الْجُمُعَةِ أَضَاءَ لَهُ مِنَ النُّورِ مَا بَيْنَ الْجُمُعَتَيْنِ**

நபி ﷺ கூறினார்கள்: யார் வெள்ளிக்கிழமையில் சூரா அல்கஹ்ஃப் ஓதுவாரோ அது அவருக்கு இரண்டு ஜுமுஆவிற்கு மத்தியில் உள்ள எல்லாவற்றையும் ஒளிபெற செய்துவிடும்.[244]

**8). வெள்ளிக்கிழமை மஸ்ஜிதிற்கு வருபவர் இரண்டு ரக்அத்துகள் தொழுதுவிட்டு அமர வேண்டும்.** தொழாமல் அமரக்கூடாது. இமாம் பிரசங்கம் நிகழ்த்தும்போது ஒருவர் வந்தாலும் அவரும் அந்த இரண்டு ரக்அத்துகள் தொழவேண்டும். ஆனால், சுருக்கமாக தொழவேண்டும்.

**عَنْ جَابِرٍ ﵁ قَالَ جَاءَ رَجُلٌ وَالنَّبِيُّ ﷺ يَخْطُبُ النَّاسَ يَوْمَ الْجُمُعَةِ فَقَالَ أَصَلَّيْتَ يَا فُلَانُ قَالَ لَا قَالَ قُمْ فَارْكَعْ رَكْعَتَيْنِ رواه البخاري برقم ٩٣٠**

ஒருவர் வெள்ளிக்கிழமை அன்று நபி ﷺ அவர்கள் மக்களுக்கு பிரசங்கம் நிகழ்த்திக் கொண்டிருக்கும்போது வந்(து அமர்ந்)தார். அவரிடம், இன்னவரே! நீ தொழுதீரா என்று நபி ﷺ அவர்கள் கேட்டார்கள். இல்லை என்று அவர் கூறினார். எழுந்து இரண்டு ரக்அத்துகள் தொழுவீராக! என்று அவருக்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[245]

**9). வெள்ளிக்கிழமை அன்று அதிகம் துஆ கேட்க வேண்டும்.** துஆ ஏற்றுக் கொள்ளப்படுகின்ற நேரத்தை அடைய முயற்சிக்க வேண்டும்.

---

244. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ﵁, நூல்: முஸ்தரக்குல் ஹாகிம், எண்: 3349
245. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ﵁, நூல்: புகாரி, எண்: 930

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ أَبُو الْقَاسِمِ ﷺ فِي الْجُمُعَةِ سَاعَةٌ لَا يُوَافِقُهَا عَبْدٌ مُسْلِمٌ قَائِمٌ يُصَلِّي فَسَأَلَ اللَّهَ خَيْرًا إِلَّا أَعْطَاهُ رواه البخاري برقم ٥٢٩٤

அபுல் காசிம் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஜுமுஆவில் ஒரு நேரம் இருக்கின்றது. நின்று தொழுதுகொண்டிருக்கின்ற ஒரு முஸ்லிம் அதை அடைந்து அல்லாஹ்விடம் நன்மையைக் கேட்டால் அல்லாஹ் அவருக்கு அதை கொடுக்காமல் இருக்க மாட்டான்.[246]

-------------------------

246. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: புகாரி, எண்: 5294

பதினொன்றாவது பாடம்

# الباب الحادي عشر في صلاة الخوف

# அச்சத் தொழுகை

இதில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

தகுந்த காரணத்தினால் தொழுகையின் அமைப்பு மற்றும் அதன் ரக்அத்துகளில் வித்தியாசம் ஏற்படுகின்ற நிலைகள் மூன்று உள்ளன.

1). **مرض** நோய், 2). **سفر** பயணம் 3). **خوف** அச்சம்

முதல் இரண்டைப் பற்றி முந்தியப் பாடங்களில் விரிவாகக் கூறப்பட்டன. இந்தப் பாடத்தில் மூன்றாவது நிலையாகிய **خوف** அச்சம் என்பதைப் பார்போம்.

**முதல் சட்டவிளக்கம்**

## அச்சத் தொழுகையின் சட்டம், ஆதாரம் மற்றும் நிபந்தனை

அ). இதன் சட்டம்

ஆ). இது சட்டமாக்கப்பட்டதற்கான ஆதாரம்

இ). இதன் நிபந்தனைகள்

**அ). இதன் சட்டம்:**

மார்க்கம் அனுமதித்த போரில் இந்த முறைப்படி தொழவேண்டும். இறை நிராகரிப்பாளர்கள், கிளர்ச்சியாளர்கள், முஸ்லிம்களை எதிர்த்து போரிடுகின்ற எதிரிகள் ஆகியோரிடம் சண்டையிடுவதற்கு மார்க்கம் நமக்கு அனுமதி அளித்துள்ளது. ஆகவே, இத்தகைய போர்களில் இந்த தொழுகை முறைப்படி நாம் ஐந்து நேரத் தொழுகைகளை தொழவேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَإِذَا ضَرَبْتُمْ فِي الْأَرْضِ فَلَيْسَ عَلَيْكُمْ جُنَاحٌ أَنْ تَقْصُرُوا مِنَ الصَّلَاةِ إِنْ خِفْتُمْ أَنْ يَفْتِنَكُمُ الَّذِينَ كَفَرُوا إِنَّ الْكَافِرِينَ كَانُوا لَكُمْ عَدُوًّا مُبِينًا (١٠١)

(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் பூமியில் பயணம் செய்தால் (நீங்கள் தொழுது கொண்டிருக்கும் போது) நிராகரிப்பவர்கள் உங்களைத் துன்புறுத்துவார்கள் என பயந்தால் நீங்கள் தொழுகையை 'கஸ்ர்' செய்வது (சுருக்கிக் கொள்வது) உங்கள் மீது குற்றமாகாது. ஏனெனில், நிராகரிப்பவர்கள் உங்களுக்குப் பகிரங்கமான எதிரிகளாகவே இருக்கின்றனர். (அல்குர்ஆன் 4:101)

ஆகவே, எதிரிகளை நாம் தாக்கும்போதும், அல்லது எதிரிகள் நம்மை தாக்கும்போது அல்லது நாம் போர்க்களத்தில் இருந்து பின்வாங்கும்போதும் இந்த முறைப்படி தொழுவது அனுமதிக்கப்பட்டுள்ளது.

எதரிகளின் பயம் என்று கூறும்போது அந்த எதிரிகள் மனித எதிரிகளாக இருந்தாலும் சரி, அல்லது மிருக எதிரிகளாக இருந்தாலும் சரி, அவர்களினால் நமக்கு பயம் ஏற்படும்போது இந்த முறைப்படி தொழுவது கூடும்.

உதாரணமாக, தன்னை அல்லது தனது குடும்பத்தை கொல்ல நினைக்கின்ற எதிரியின் வருகையைப் பயப்படும்போதும், அநியாயமான கடன்காரர் உடைய பயம் ஏற்படும்போதும் இந்த முறைத் தொழுகை அனுமதிக்கப்பட்டதாகும்.

### ஆ). இது சட்டமாக்கப்பட்டதற்கான ஆதாரம்

இந்த வகைத் தொழுகை மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டது என்பதற்கு குர்ஆன், சுன்னா, மற்றும் இஜ்மாஃ ஆதாரங்களாக உள்ளன,

அல்லாஹ் கூறுகின்றான்:

وَإِذَا كُنْتَ فِيهِمْ فَأَقَمْتَ لَهُمُ الصَّلَاةَ فَلْتَقُمْ طَائِفَةٌ مِنْهُمْ مَعَكَ وَلْيَأْخُذُوا أَسْلِحَتَهُمْ فَإِذَا سَجَدُوا فَلْيَكُونُوا مِنْ وَرَائِكُمْ وَلْتَأْتِ طَائِفَةٌ أُخْرَى لَمْ يُصَلُّوا فَلْيُصَلُّوا مَعَكَ وَلْيَأْخُذُوا حِذْرَهُمْ وَأَسْلِحَتَهُمْ وَدَّ الَّذِينَ كَفَرُوا لَوْ تَغْفُلُونَ عَنْ أَسْلِحَتِكُمْ وَأَمْتِعَتِكُمْ فَيَمِيلُونَ عَلَيْكُمْ مَيْلَةً وَاحِدَةً وَلَا جُنَاحَ عَلَيْكُمْ إِنْ كَانَ بِكُمْ أَذًى مِنْ مَطَرٍ أَوْ كُنْتُمْ مَرْضَى أَنْ تَضَعُوا أَسْلِحَتَكُمْ وَخُذُوا حِذْرَكُمْ إِنَّ اللَّهَ أَعَدَّ لِلْكَافِرِينَ عَذَابًا مُهِينًا (١٠٢)

(நபியே! போர் முனையில்) நீரும் அவர்களுடன் இருந்து அவர்களுக்கு தொழ வைக்க நீர் (இமாமாக) முன்னின்றால், அவர்களில் ஒரு பிரிவினர் (மட்டும் தங்கள் கைகளில்) தங்கள் ஆயுதங்களைப் பிடித்துக் கொண்டே உங்களுடன் தொழவும். இவர்கள் உங்களுடன் (தொழுது) 'ஸஜ்தா' செய்துவிட்டால் (அணியிலிருந்து விலகி) உங்கள் பின்புறம் (உங்களைக் காத்து) நிற்கவும். (அது சமயம்) தொழாமலிருந்த மற்றொரு கூட்டத்தினர் வந்து உங்களுடன் சேர்ந்து தொழவும். எனினும் அவர்களும் தங்கள் (கைகளில்) ஆயுதங்களைப் பிடித்த வண்ணம் எதிரிகளைப் பற்றி எச்சரிக்கையாய் இருக்கவும். ஏனென்றால், நீங்கள் உங்கள் பொருள்களிலிருந்தும், உங்கள் ஆயுதங்களிலிருந்தும் பராமுகமாகி விட்டால் உங்கள் மீது ஒரேயடியாக பாய்ந்து தாக்குதல் நடத்திட வேண்டுமென்று அந்நிராகரிப்பவர்கள் விரும்புகின்றனர். இந்நிலைமையில், மழையின் தொந்தரவினால் அல்லது நீங்கள் நோயாளிகளாக இருப்பதால் உங்கள் ஆயுதங்களைக் (கைகளில் பிடிக்க முடியாவிட்டால்) கீழே

வைத்துவிடுவதில் உங்கள் மீது குற்றமில்லை. எனினும் நீங்கள் (அவர்களைப் பற்றி) எச்சரிக்கையாகவே இருங்கள். நிச்சயமாக அல்லாஹ் நிராகரிப்பவர்களுக்கு இழிவு தரும் வேதனையை தயார்படுத்தி வைத்திருக்கிறான். (அல்குர்ஆன் 4:102)

மேலும், நபி அவர்கள் இந்த முறைப்படி தொழுதுள்ளார்கள். நபித்தோழர்களும் எவ்வித கருத்து வேற்றுமை இன்றி இந்த முறைப்படி தொழுதுள்ளார்கள்.

**இ). இதன் நிபந்தனைகள்**

இதற்கு இரண்டு நிபந்தனைகள் உள்ளன.

1). போர் செய்வது நமக்கு அனுமதிக்கப்பட்ட எதிரியாக இருக்க வேண்டும். உதாரணமாக, இறைநிராகரிப்பாளர்கள், கிளர்ச்சியாளர்கள், முஸ்லிம்களை எதிர்த்து போரிடுகின்ற எதிரிகள்.

2). அந்த எதிரி நாம் தொழும்போது நம்மீது தாக்குதல் தொடுப்பார் என்ற பயம் இருக்க வேண்டும்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## அச்சத் தொழுகையை நிறைவேற்றுகின்ற முறை

இதன் முறையை விளக்கக்கூடிய பல நபிமொழிகள் வந்துள்ளன.

அவற்றில் ஒன்றை பின்வருகின்ற நபிமொழியில் காண்போம்.

عَنْ صَالِحِ بْنِ خَوَّاتٍ ﵁ عَمَّنْ شَهِدَ رَسُولَ اللهِ ﷺ يَوْمَ ذَاتِ الرِّقَاعِ صَلَّى صَلَاةَ الْخَوْفِ أَنَّ طَائِفَةً صَفَّتْ مَعَهُ وَطَائِفَةٌ وِجَاهَ الْعَدُوِّ فَصَلَّى بِالَّتِي مَعَهُ رَكْعَةً ثُمَّ ثَبَتَ قَائِمًا وَأَتَمُّوا لِأَنْفُسِهِمْ ثُمَّ انْصَرَفُوا فَصَفُّوا وِجَاهَ الْعَدُوِّ وَجَاءَتْ الطَّائِفَةُ الْأُخْرَى فَصَلَّى بِهِمْ الرَّكْعَةَ الَّتِي بَقِيَتْ مِنْ صَلَاتِهِ ثُمَّ

**ثَبَتَ جَالِسًا وَأَتَمُّوا لِأَنْفُسِهِمْ ثُمَّ سَلَّمَ بِهِمْ رواه البخاري برقم ٤١٢٩ ورواه مسلم برقم ٨٤٢**

தாத்துர் ரிகாஃ என்ற போரில் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடன் போரில் கலந்து கொண்டவர்கள் வாயிலாக ஸாலிஹ் இப்னு கவ்வாத் ﵀ என்பவர் அறிவிக்கின்றார்: ஒரு பிரிவினர் நபி ﷺ அவர்களுடன் வரிசையில் தொழுவதற்காக நின்றார்கள். ஒரு பிரிவினர் எதிரிகளுக்கு நேராக நின்றார்கள். தம்முடன் இருந்தவர்களுக்கு ஒரு ரக்அத்தை நபி அவர்கள் தொழவைத்துவிட்டு அப்படியே நிலையில் நின்றார்கள். அந்தப் பிரிவினர் தங்களுக்கு (மீதமிருந்த ஒரு ரக்அத்தை) முழுமைப்படுத்திவிட்டு எதிரிகளுக்கு நேராக சென்று நின்றுகொண்டார்கள். மற்றொரு பிரிவினர் வந்து நபி அவர்களுடன் சேர்ந்துகொண்டார்கள். தமது தொழுகையில் மீதமுள்ளதை நபி அவர்கள் இவர்களுக்கு தொழவைத்தார்கள். பிறகு அப்படியே அமர்ந்திருந்தார்கள். இவர்கள் தங்களுக்கு மீதமுள்ள ரக்அத்தை முழுமைப்படுத்தினார்கள். பிறகு நபி அவர்கள் இவர்களுடன் ஸலாம் கூறி தொழுகையை முடித்தார்கள்.[247]

இந்த தொழுகை முறை குர்ஆனில் கூறப்பட்டுள்ள முறைக்கு மிகவும் நெருக்கமாக இருக்கின்றது.

இந்த முறையில் தொழுகையின் பேணுதலும் உள்ளது. அதாவது இமாம், மற்றும் முக்ததி -பின்னால் தொழுபவர் இருவரும் இரண்டு ரக்அத்துகள் தொழுகிறார்கள்.

மேலும் போரின் பேணுதலும் இந்த முறையில் உள்ளது. அதாவது ஒரு கூட்டம் எதிரிகளுக்கு நேராக நிற்பதால் அவர்களால் நம்மை தாக்க முடியாது. அப்படி தாக்க முற்பட்டாலும் அவர்களை எதிர்த்து தாக்குவதற்கு ஒரு பிரிவு தயாராக நிற்கின்றார்கள்.

---------------

247. நூல்: புகாரி, எண்: 4129 | முஸ்லிம், எண்: 842

பன்னிரெண்டாவது பாடம்

## الباب الثاني عشر في صلاة العيدين

## இரு பெருநாள் தொழுகைகள்

இதில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

இரு பெருநாள்கள் என்றால் ஈதுல் அழ்ஹா என்ற ஹஜ்ஜுப் பெருநாள் மற்றும் ஈதுல் ஃபித்ர் என்ற நோன்புப் பெருநாள் ஆகும்.

இந்த இரண்டு பெருநாள்களும் சிறப்பான ஒவ்வொரு சந்தர்ப்பத்தை முன்னிட்டு வருகின்றன. முஸ்லிம்கள் ரமழான் நோன்பை நோற்று முடிக்கும்போது ஈதுல் ஃபித்ர் என்ற நோன்புப்பெருநாள் வருகின்றது.

ஈதுல் அழ்ஹா என்பது துல்ஹஜ் மாதத்தின் பத்து நாள்கள் நிறைவடைவதை முன்னிட்டு வருகின்ற பெருநாள் ஆகும்.

**عيد** - ஈத் என்றால் ஒரு குறிப்பிட்ட நாளில் மீண்டும் மீண்டும் வருகின்ற ஒன்றாகும்.

**முதல் சட்டவிளக்கம்**

## பெருநாள் உடைய சட்டம் மற்றும் அதன் ஆதாரம்

ஈதுடைய தொழுகை ஃபர்ழ் கிஃபாயா ஆகும். அதாவது, முஸ்லிம்களில் சிலர் இதை நிறைவேற்றினால் மற்றவர்களின் பொறுப்பும் நிறைவேறிவிடும். அவர்கள் குற்றமற்றவர்களாக ஆகிவிடுவார்கள்.

இந்த தொழுகையை எல்லோரும் விட்டுவிட்டால் முஸ்லிம்கள் எல்லோரும் குற்றவாளிகளாக ஆகிவிடுவார்கள். ஏனெனில், இந்த தொழுகை இஸ்லாமிய மார்க்கத்தின் வெளிப்படையான அடையாள சின்னங்களில் முக்கியமான ஒன்றாகும்.

நபி ﷺ அவர்கள் இந்த தொழுகையை வாழ்நாள் முழுவதும் தொழுது வந்துள்ளார்கள். அவர்களுக்குப் பின்னர் அவர்களுடைய தோழர்களும் இந்த தொழுகையை நிரந்தரமாக தொழுது வந்துள்ளார்கள். இந்த தொழுகையில் பெண்கள் உள்பட அனைவரும் கலந்துகொள்ள வேண்டும் என்று நபி ﷺ அவர்கள் கட்டளை இட்டார்கள். ஹைழ் உள்ள பெண்களும் இந்த தொழுகைக்கு வரவேண்டும், ஆனால் தொழுமிடத்தை விட்டு ஒதுங்கி இருக்க வேண்டும் என்று நபி ﷺ அவர்கள் வலியுறுத்தினார்கள். இது இந்த தொழுகையின் முக்கியத்துவத்தையும் சிறப்பையும் மிகத் தெளிவாக உணர்த்துகிறது.

பெண்களும் கலந்துகொள்ள வேண்டும் என்ற நபி ﷺ அவர்கள் கட்டளை இட்டதிலிருந்து ஆண்கள் இதில் கலந்துகொள்வது எவ்வளவு முக்கியம் என்பதை அறிந்துகொள்ளலாம்.

இந்த தொழுகை “ஃபர்ழ் ஐன்” என்றும் சில அறிஞர்கள் கூறுகிறார்கள்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## பெருநாள் தொழுகையின் நிபந்தனைகள்

பெருநாள் தொழுகையின் நிபந்தனைகளில் மிக முக்கியமானவை

1). அதற்குரிய நேரம் வந்திருக்க வேண்டும்.

2). ஓரளவுக்கு தொழுகையாளிகளின் எண்ணிக்கை இருக்க வேண்டும்.

3). உள்ளூரில் உள்ளவர்களாக இருக்க வேண்டும்.

ஆகவே, அதன் நேரம் வருவதற்கு முன்னர் அதை நிறைவேற்றுவது

கூடாது. குறைந்தது மூன்று நபர்கள் இருக்க வேண்டும். பயணிகள் மீது இந்த தொழுகை கடமை இல்லை.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## பெருநாள் தொழுகை நிறைவேற்றப்பட வேண்டிய இடங்கள்

இந்த தொழுகையை ஊருடைய கட்டடங்களுக்கு வெளியில் பாலைவனம் போன்ற பெரிய திறந்தவெளியில் தொழுவது சுன்னாவாகும்.

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﵁ قَالَ كَانَ رَسُولُ اللهِ ﷺ يَخْرُجُ يَوْمَ الْفِطْرِ وَالْأَضْحَى إِلَى الْمُصَلَّى رواه البخاري برقم ٩٥٦**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் நோன்பு பெருநாளிலும் ஹஜ் பெருநாளிலும் (திறந்த வெளி) தொழுமிடத்திற்கு செல்வார்கள்.[248]

இஸ்லாமிய மார்க்கத்தின் அடையாள சின்னமாகிய இந்த கடமையை வெளிப்படையாக செய்ய வேண்டும் என்பது இதன் நோக்கமாக இருக்கலாம். அல்லாஹ் மிக அறிந்தவன்.

மழை பொழிந்தால் அல்லது கடுமையான காற்று வீசினால் அல்லது இது போன்று வேறு ஒரு காரணம் இருந்தால் ஊருடைய ஜாமிஆ மஸ்ஜிதில் இந்த தொழுகையை நிறைவேற்றலாம்.

**நான்காவது சட்டவிளக்கம்**

## ஈது தொழுகையின் நேரம்

சூரியன் உதயமாகி ஒரு ஈட்டியின் அளவு உயர்ந்ததிலிருந்து இதன் நேரம் ஆரம்பமாகி சூரியன் நடுப்பொழுதை அடைகின்ற வரை இதன் நேரம் நீடிக்கின்றது.

248. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி ﵁. எண்: 956

நபி ﷺ அவர்களும் அவர்களுக்குப் பின்னர் அவர்களின் கலீஃபாக்களும் சூரியன் உதித்து, அது உயர்ந்த பிறகுதான் இந்த தொழுகையை தொழுதார்கள்.

சூரியன் உதித்ததிலிருந்து அது உயருகின்ற வரை உள்ள நேரம் தொழுவதற்கு தடுக்கப்பட்ட நேரமாகும்.

ஈதுல் அழ்ஹா - ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகையை அதன் நேரம் வந்தவுடன் தீவிரப்படுத்தி தொழுவது சுன்னா ஆகும். ஏனெனில், மக்கள் தங்கள் குர்பானிகளை அறுப்பதில் துரிதப்படுவார்கள். ஆகவே, நேரம் வந்தபின்னர் உடனே ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகையை நிறைவேற்றுவது அவர்களுக்கு மிக உதவியாக இருக்கும்.

ஈதுல் ஃபித்ர் - நோன்புப் பெருநாள் தொழுகையை அதன் நேரம் வந்த பின்னர் கொஞ்சம் தாமதப்படுத்தி நிறைவேற்றுவது சுன்னாவாகும். ஏனெனில், மக்கள் தங்கள் ஃபித்ரா - பெருநாள் தர்மத்தை நிறைவேற்ற அது வசதியாக இருக்கும்.

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## பெருநாள் தொழுகையின் முறை, மற்றும் அதில் ஓதவேண்டியவை

பெருநாள் தொழுகை இரண்டு ரக்அத்துகளாகும். குத்பாவிற்கு முன்னர் அந்த தொழுகை நிறைவேற்றப்பட வேண்டும்.

عَنْ عُمَرَ رضي الله عنه قَالَ صَلَاةُ السَّفَرِ رَكْعَتَانِ وَصَلَاةُ الْجُمُعَةِ رَكْعَتَانِ وَالْفِطْرُ وَالْأَضْحَى رَكْعَتَانِ تَمَامٌ غَيْرُ قَصْرٍ عَلَى لِسَانِ مُحَمَّدٍ ﷺ

பயணத் தொழுகை இரண்டு ரக்அத்துகளாகும். ஜுமுஆத் தொழுகை இரண்டு ரக்அத்துகளாகும். ஈதுல் ஃபித்ர் தொழுகையும்

ஈதுல் அழ்ஹா தொழுகையும் இரண்டு ரக்அத்துகளாகும். இது நபி முஹம்மது ﷺ அவர்களுடைய நாவின் வாயிலாக கடமையான குறைவற்ற முழுமையான எண்ணிக்கையாகும்.[249]

## தொழுகையின் முறை

முதலில் தொழுகையை ஆரம்பிப்பதற்கு 'தக்பீரத்துல் தஹ்ரீம்'ஐ கூற வேண்டும். பிறகு துஆவுல் இஸ்திஃப்தாஹ் - தொழுகையின் தொடக்க துஆவை ஓதவேண்டும். பிறகு, ஆறு தக்பீர்கள் கூற வேண்டும். பிறகு அவூது, பிஸ்மி கூறி ஃபாத்திஹா மற்றும் சூரா ஓதவேண்டும்.[250]

இரண்டாவது ரக்அத்திற்கு எழுந்தவுடன் குர்ஆன் ஓத ஆரம்பிப்பதற்கு முன்பாக எழுவதற்காக கூறப்பட்ட தக்பீர் அல்லாமல் ஐந்து தக்பீர் கூறவேண்டும்.

عَنْ عَائِشَةَ رضي الله عنها أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يُكَبِّرُ فِي الْفِطْرِ وَالْأَضْحَى فِي الْأُولَى سَبْعَ تَكْبِيرَاتٍ وَفِي الثَّانِيَةِ خَمْسًا رواه أبو داود برقم ٩٧٠

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் நோன்புப் பெருநாள் மற்றும் ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகையில் முதல் ரக்அத்தில் ஏழு தக்பீர்களும் இரண்டாவது ரக்அத்தில் ஐந்து தக்பீர்களும் கூறுவார்கள்.[251]

இவ்வாறு தக்பீர் கூறும்போது ஒவ்வொரு முறையும் கைகளை உயர்த்த வேண்டும்.*

عَنْ وَائِلِ بْنِ حُجْرٍ الْحَضْرَمِيِّ رضي الله عنه قَالَ رَأَيْتُ رَسُولَ اللهِ ﷺ يَرْفَعُ يَدَيْهِ مَعَ التَّكْبِيرِ رواه أحمد برقم ١٨٠٩٣

வாயில் இப்னு ஹுஜ்ர் رضي الله عنه கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ

249. அறிவிப்பாளர்: உமர் رضي الله عنه, நூல்: சுனன் இப்னு மாஜா, எண்: 1053
250. சில அறிஞர்கள் தக்பீரதுல் தஹ்ரீமை சேர்க்காமல் ஏழு தக்பீர்கள் கூறவேண்டும் என்று கூறுகிறார்கள்.
251. அறிவிப்பாளர்: ஆயிஷா, நூல்: அபூ தாவூத், எண்: 970

அவர்கள் தக்பீர் கூறும்போது தமது இரு கைகளையும் உயர்த்துவதை நான் பார்த்தேன்.[252]

தக்பீர்களை கூறிய பின்னர், அவூது, பிஸ்மி கூற வேண்டும். பிறகு, சப்தமாக ஓத வேண்டும். முதல் ரக்அத்தில் ஃபாத்திஹா சூராவையும் ஸப்பிஹிஸ்ம ரப்பிகல் அஃலா என்ற சூராவையும் இரண்டாவது ரக்அத்தில் ஃபாத்திஹாவிற்கு பின்னர் ஹல் அதாக்க ஹதீஸுல் காஷியா என்ற சூராவையும் ஓத வேண்டும்.

**عَنِ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ ﵁ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ كَانَ يَقْرَأُ فِي الْعِيدَيْنِ بِسَبِّحِ اسْمَ رَبِّكَ الْأَعْلَى وَ هَلْ أَتَاكَ حَدِيثُ الْغَاشِيَةِ رواه ابن ماجة برقم ١٢٧١**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இரு பெருநாள் தொழுகையிலும் “ஸப்பிஹிஸ்ம ரப்பிகல் அஃலா” என்ற சூராவையும் ஹல் அதாக்க ஹதீஸுல் காஷியா என்ற சூராவையும் ஓதுவார்கள்.[253]

அல்லது முதல் ரக்அத்தில் காஃப் வல்குர்ஆனில் மஜீத் என்ற சூராவையும் இரண்டாவது ரக்அத்தில் இக்தரபத்திஸ் ஸாஅத்து என்ற (அல்கமர்) சூராவையும் ஓத வேண்டும்.

**عَنْ أَبِي وَاقِدٍ اللَّيْثِيِّ ﵁ قَال سَأَلَنِي عُمَرُ بْنُ الْخَطَّابِ عَمَّا قَرَأَ بِهِ رَسُولُ اللّٰهِ ﷺ فِي يَوْمِ الْعِيدِ فَقُلْتُ بِاقْتَرَبَتِ السَّاعَةُ وَ ق وَالْقُرْآنِ الْمَجِيد رواه مسلم برقم ٨٩١**

அபூ வாகித் அல்லைஸி ﵁ கூறுகிறார்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் பெருநாளில் (-பெருநாள் தொழுகையில்) என்ன ஓதினார்கள் என்று என்னிடம் உமர் இப்னுல் கத்தாப் ﵁ கேட்டார்கள். (முதல் ரக்அத்தில் ஃபாத்திஹா சூராவிற்கு பின்னர்) இக்தரபத்திஸ்

252. நூல்: அஹ்மது, எண்: 18093

253. அறிவிப்பாளர்: நுஃமான் இப்னு பஷீர், நூல்: இப்னு மாஜா, எண்: 1271

ஸாஅத்து என்ற சூராவையும் (இரண்டாவது ரக்அத்தில் ஃபாத்திஹா சூராவிற்கு பின்னர்) காஃப் வல்குர்ஆனில் மஜீத் என்ற சூராவையும் ஓதினார்கள் என்று கூறினேன்.[254]

ஆகவே, சில சமயங்களில் இந்த ஹதீஸின்படியும் சில சமயங்களில் இதற்கு முன்சென்ற ஹதீஸின் படியும் அமல் செய்வது நல்லதாகும். இரண்டு ஹதீஸையும் அமல்படுத்திய நன்மை கிடைக்கும். மேலும், தொழுகையாளிகளின் நிலையையும் கருத்தில் கொண்டு அதற்கேற்ப எது அவர்களுக்கு இலகுவாக இருக்குமோ அதற்கேற்ப சூராக்களை தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம்.*

**ஆறாவது சட்டவிளக்கம்**

## பெருநாள் பிரசங்கத்தின் நேரம்

பெருநாள் தொழுது முடித்தப் பின்னர்தான் குத்பா -பிரசங்கம் நிகழ்த்த வேண்டும்.

**عَنِ ابْنِ عُمَرَ ﷺ قَالَ كَانَ رَسُولُ اللهِ ﷺ وَأَبُو بَكْرٍ وَعُمَرُ ﷺ يُصَلُّونَ الْعِيدَيْنِ قَبْلَ الْخُطْبَةِ رواه البخاري برقم ٩٦٣ ورواه مسلم برقم ٨٨٨**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இன்னும் அபூ பக்ர், உமர் ﷺ ஆகியோரும் இரு பெருநாள் தொழுகைகளையும் குத்பாவிற்கு முன்னர்தான் தொழுபவர்களாக இருந்தார்கள்.[255]

**ஏழவாது சட்டவிளக்கம்**

## பெருநாள் தொழுகையை கழா செய்வது

ஒருவருக்கு பெருநாள் தொழுகை கிடைக்காமல் தவறிவிட்டால் அவர் அந்த தொழுகையை கழா செய்வது நபிவழி அல்ல.

---

254. நூல்: முஸ்லிம், எண்: 891
255. அறிவிப்பாளர்: இப்னு உமர், நூல்: புகாரி, எண்: 963 முஸ்லிம், எண்: 888

இது குறித்து நபி ﷺ அவர்களிடமிருந்து ஏதும் அறிவிப்புகள் கிடைக்கவில்லை. பெருநாள் தொழுகையை குறிப்பிட்ட முறையில் ஒன்று கூடி நிறைவேற்ற வேண்டும் என்று வந்துள்ளதால் தனியாக அதை நிறைவேற்ற முடியாது.

**எட்டாவது சட்டவிளக்கம்**

## ஈது தொழுகையின் சுன்னத்துகள்

1). ஈது தொழுகையை ஊருக்கு வெளியில் விசாலமான, வெளிப்படையான ஓர் இடத்தில் நிறைவேற்றுவது சுன்னாவாகும். இந்த வணக்கத்தை பிரகடனப்படுத்தி நிறைவேற்றுவதற்காக அங்கு முஸ்லிம்கள் ஒன்று திரளவேண்டும். நிர்ப்பந்தம் ஏதும் இருந்தால் அதை மஸ்ஜிதில் நிறைவேற்றுவது குற்றமாகாது.

2). ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகையை விரைந்து நிறைவேற்றுவதும் நோன்புப் பெருநாள் தொழுகையை தாமதப்படுத்தி நிறைவேற்றுவதும் சுன்னாவாகும். இது குறித்து விளக்கம் முன்னர் கூறப்பட்டுவிட்டது.

3). சில பேரித்தம் பழங்களை சாப்பிட்டுவிட்டு, நோன்புப் பெருநாள் தொழுகைக்கு செல்வதும் எதையும் சாப்பிடாமல் ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகைக்கு செல்வதும் சுன்னாவாகும்.

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷛ قَالَ كَانَ رَسُولُ اللّٰهِ ﷺ لَا يَغْدُو يَوْمَ الْفِطْرِ حَتَّى يَأْكُلَ تَمَرَاتٍ وفي رواية وَيَأْكُلُهُنَّ وِتْرًا رواه البخاري برقم ٩٥٣

சில பேரித்தம் பழங்களை சாப்பிடாமல் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் நோன்புப் பெருநாள் தொழுகைக்கு செல்ல மாட்டார்கள். மற்றொரு அறிவிப்பில் அந்த பேரித்தம் பழங்களை ஒற்றை எண்ணிக்கையில் சாப்பிடுவார்கள் என்று வந்துள்ளது.[256]

عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ بُرَيْدَةَ عَنْ أَبِيهِ ﷛ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ لَا يَخْرُجُ يَوْمَ

256. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: புகாரி, எண்: 953

الْفِطْرِ حَتَّى يَطْعَمَ وَلَا يَطْعَمُ يَوْمَ الْأَضْحَى حَتَّى يُصَلِّيَ رواه الترمذي برقم ٤٩٧

அப்துல்லாஹ் இப்னு புரைதா ﵁ தனது தந்தை புரைதா ﵁ வாயிலாக அறிவிக்கின்றார்: நபி ﷺ அவர்கள் நோன்புப் பெருநாள் அன்று சாப்பிடாமல் (தொழுகைக்கு) செல்ல மாட்டார்கள். ஹஜ்ஜுப் பெருநாள் அன்று தொழுகின்ற வரை சாப்பிட மாட்டார்கள்.[257]

4). ஸுபுஹு தொழுகைக்குப் பின்னர் பெருநாள் தொழுகையை நிறைவேற்ற மைதானத்தை நோக்கி விரைந்து செல்லவேண்டும். அதன் மூலம் இமாமுக்கு அருகில் அமர்வதற்கு வாய்ப்பு ஏற்படும். தொழுகையை எதிர்பார்த்திருந்த நன்மையும் கிடைக்கும்.

5). குளித்து, நறுமணம் பூசி, தன்னிடம் இருப்பதில் அழகிய ஆடையை அணிந்து செல்வது சுன்னாவாகும்.

6). தொழுது முடித்தப் பின்னர் இமாம் குத்பா -பிரசங்கம் நிகழ்த்த வேண்டும். அந்த பிரசங்கம் பொதுவானதாகவும் மார்க்கக் காரியங்கள் அனைத்தையும் உள்ளடக்கியதாகவும் இருக்க வேண்டும். நோன்பு பெருநாள் பிரசங்கத்தில் சதக்கத்துல் ஃபித்ர் பற்றியும் ஹஜ்ஜுப் பெருநாள் பிரசங்கத்தில் குர்பானி சம்பந்தப்பட்ட சட்டங்களையும் மக்களுக்கு விளக்கி கூறவேண்டும். பெண்களுக்கு என்று விசேஷமாக அறிவுரை வழங்குவதும் நபிவழியாகும்.

7). பெருநாள் அன்று அதிகமாக தக்பீர் (-அல்லாஹு அக்பர்) கூறவேண்டும். தஹ்லீல் (-லா இலாஹ இல்லல்லாஹ்) கூற வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

شَهْرُ رَمَضَانَ الَّذِي أُنْزِلَ فِيهِ الْقُرْآنُ هُدًى لِلنَّاسِ وَبَيِّنَاتٍ مِنَ الْهُدَى وَالْفُرْقَانِ فَمَنْ شَهِدَ مِنْكُمُ الشَّهْرَ فَلْيَصُمْهُ وَمَنْ كَانَ مَرِيضًا أَوْ عَلَى

257. நூல்: திர்மிதி, எண்: 497

سَفَرٍ فَعِدَّةٌ مِنْ أَيَّامٍ أُخَرَ يُرِيدُ اللّٰهُ بِكُمُ الْيُسْرَ وَلَا يُرِيدُ بِكُمُ الْعُسْرَ وَلِتُكْمِلُوا الْعِدَّةَ وَلِتُكَبِّرُوا اللّٰهَ عَلَى مَا هَدَاكُمْ وَلَعَلَّكُمْ تَشْكُرُونَ (١٨٥)

ரமழான் மாதம் எத்தகைய (மகத்துவமுடைய)து என்றால் அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழி காட்டும் திருகுர்ஆன் (என்னும் வேதம்) இறக்கப்பட்டது. அது (நன்மை, தீமையைப்) பிரித்தறிவித்து நேரான வழியைத் தெளிவாக்கக்கூடிய வசனங்களை உடையதாகவும் இருக்கிறது. ஆகவே, உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ அவர் அதில் நோன்பு நோற்கவும். ஆனால், (அக்காலத்தில் உங்களில்) யாராவது நோயாளியாகவோ அல்லது பிரயாணத்திலோ இருந்தால் (ரமழான் அல்லாத) மற்ற நாள்களில் (விட்டுப்போன நாள்களின் நோன்பைக்) கணக்கிட்டு (நோற்று) விடவும். அல்லாஹ் உங்களுக்கு இலகுவா(ன கட்டளையைக் கொடு)க்க விரும்புகிறானே தவிர சிரமத்தை(க் கொடுக்க) விரும்பவில்லை. மேலும், (தவறிய நாள்களைக் கணக்கிடும்படி கட்டளையிட்டதெல்லாம், உங்கள்மீது கடமையாக உள்ள ஒரு மாத நோன்பின்) எண்ணிக்கையை நீங்கள் முழுமை செய்வதற்காகவும்; (அவ்வாறே) அல்லாஹ் உங்களை நேரான பாதையில் நடத்தியதற்காக அவனை நீங்கள் பெருமைப் படுத்துவதற்காகவும்; (நோய், பிரயாணம் போன்ற சந்தர்ப்பங்களில் நோன்பு நோற்காதிருக்க உங்களுக்கு அனுமதி வழங்கியதற்காக) நீங்கள் (அல்லாஹ்வுக்கு) நன்றி செலுத்துவதற்காகவுமே ஆகும்!

(அல்குர்ஆன் 2: 185)

வீடுகளிலும் மஸ்ஜிதுகளிலும் கடைவீதிகளிலும் ஆண்கள் உரக்க கூற வேண்டும். பெண்கள் மவுனமாக கூற வேண்டும்.

8). தொழுகைக்கு செல்லும்போது ஒரு வழியிலும் தொழுது முடித்து வரும்போது வேறு ஒரு வழியிலும் வர வேண்டும்.

عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللّٰهِ ﵁ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ إِذَا كَانَ يَوْمُ عِيدٍ خَالَفَ الطَّرِيقَ رواه البخاري برقم ٩٨٦

நபி ﷺ அவர்கள் பெருநாள் அன்று (தொழுகைக்குச் செல்லும் போதும், தொழுகையை முடித்து திரும்பும்போதும்) பாதையை மாற்றிவிடுவார்கள்.[258]

இதன் தத்துவம் என்னவென்றால், இரு பாதைகளும் சாட்சி கூறும். இஸ்லாமிய அடையாள சின்னமாகிய இந்த வணக்கத்தை பகிரங்கப்படுத்துவதற்கு ஒரு வாய்ப்பாக இருக்கும்.

**பெருநாள் அன்று வாழ்த்து கூறுவது தவறில்லை.**

تَقَبَّلَ اللهُ مِنَّا وَمِنْكَ صَالِحَ الْأَعْمَالِ

உங்களிடமிருந்தும் எங்களிடமிருந்தும் நல்ல அமல்களை அல்லாஹ் ஏற்றுக்கொள்வானாக!

என்பது போன்ற நல்வாழ்த்துகளைக் கூறலாம்.

நபித்தோழர்கள் இவ்வாறு செய்வார்கள்.

பெருநாள் அன்று மக்களை முக மலர்ச்சியுடனும் உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடனும் சந்திக்க வேண்டும்.

------------------

258, அறிவிப்பாளர்: ஜாபிர் ؓ, நூல்: புகாரி, எண்: 986

<u>பதிமூன்றாவது பாடம்</u>

# الباب الثالث عشر في صلاة الاستسقاء

# மழைத் தொழுகை

இதில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்டவிளக்கம்**

## மழைத் தொழுகையின் விளக்கமும் அதன் சட்டமும்

1). மழை அறவே பொழியாமல், பூமி வறண்டு, மக்கள் சிரமப்படும்போது அல்லாஹ்விடம் மழை வேண்டி பிரார்த்தித்து நிறைவேற்றப்படுகின்ற தொழுகையை மழைத் தொழுகை என்று கூறப்படுகிறது.

ஏனெனில், அல்லாஹ்தான் மழையை இறக்கக்கூடியவன். அவன்தான் மக்களுக்கு நீர் புகட்டக்கூடியவன் ஆவான்.

2). **இதன் சட்டம்:** இந்த மழைத் தொழுகை ஒரு சுன்னா முஅக்கதா - வலியுறுத்தப்பட்ட நபிவழி ஆகும்.

**عَنْ عَبَّادِ بْنِ تَمِيمٍ ﷺ عَنْ عَمِّهِ قَالَ خَرَجَ النَّبِيُّ ﷺ يَسْتَسْقِي فَتَوَجَّهَ إِلَى الْقِبْلَةِ يَدْعُو وَحَوَّلَ رِدَاءَهُ ثُمَّ صَلَّى رَكْعَتَيْنِ جَهَرَ فِيهِمَا بِالْقِرَاءَةِ رواه البخاري برقم ١٠٢٤**

அப்பாது இப்னு தமீம் ﵁ தனது சிறிய தந்தையின் வாயிலாக அறிவிக்கின்றார்: நபி ﷺ அவர்கள் மழைத் தொழுகை தொழுவதற்கு வந்தார்கள். கிப்லாவை முன்னோக்கி துஆ கேட்டார்கள். தனது மேலிருந்து போர்வையை மாற்றினார்கள். பிறகு, இரண்டு ரக்அத்துகள் தொழ வைத்தார்கள். அந்த இரண்டு ரக்அத்துகளிலும் சப்தமாக ஓதினார்கள்.[259]

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## மழைத் தொழுகைக்கான காரணம்

மழை முற்றிலும் நின்றுவிட்டதால் நிலவுகின்ற பஞ்சத்தை முன்னிட்டு இந்த தொழுகை தொழப்படுகின்றது.

இதுபோன்ற நேரங்களில்தான் நபி ﷺ அவர்கள் இந்த தொழுகையை தொழுது இருக்கின்றார்கள்.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## மழைத் தொழுகையின் நேரமும் அமைப்பும்

பெருநாள் தொழுகையை எப்படி, எந்த நேரத்தில் நிறைவேற்றப்படுமோ அப்படித்தான் மழைத் தொழுகையையும் நிறைவேற்ற வேண்டும்.

**خَرَجَ رَسُولُ اللهِ ﷺ مُتَوَاضِعًا مُتَبَذِّلًا مُتَخَشِّعًا مُتَرَسِّلًا مُتَضَرِّعًا فَصَلَّى رَكْعَتَيْنِ كَمَا يُصَلِّي فِي الْعِيدِ وَلَمْ يَخْطُبْ خُطْبَتَكُمْ هَذِهِ رواه ابن ماجة برقم ١٢٥٦**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் (-மழைத் தொழுகைக்காக) பணிவானவர்களாக, சாதரணமான ஆடையை அணிந்தவர்களாக, பயந்தவர்களாக, தலை குனிதவர்களாக, மன்றாடி பிரார்த்தித்தவர்களாக

259. நூல்: புகாரி, எண்: 1024

வந்தார்கள். பெருநாளில் தொழுவது போன்று இரண்டு ரக்அத்துகள் தொழுதார்கள். உங்களது இந்த பிரசங்கத்தைப் போன்று அவர்கள் (நீண்ட) பிரசங்கம் நிகழ்த்தவில்லை.[260]

ஆகவே, இந்த தொழுகையையும் மைதானத்தில் நடத்துவது விரும்பத்தக்க செயலாகும்.

- இரண்டு ரக்அத்துகள் தொழ வைக்க வேண்டும்.
- சப்தமாக ஓதி தொழவைக்க வேண்டும்.
- முதலில் தொழுகையும் பிறகு பிரசங்கமும் இருக்க வேண்டும்.
- பெருநாள் தொழுகையில் அதிகமான தக்பீர்கள் கூறப்படுவது போல் இதிலும் அதிகமான தக்பீர்கள் கூற வேண்டும்.
- பெருநாள் தொழுகையில் ஓதப்படுகின்ற சூராக்களை இதிலும் ஓதுவது சுன்னாவாகும்.

இன்னும் இது போக மற்ற முறைகளிலும் அல்லாஹ்விடம் மழை வேண்டி துஆ கேட்கலாம்.

ஒருவர் தனது தொழுகையின் ஸுஜூதிலும் மழைக்காக துஆ கேட்கலாம்.

இமாம் வெள்ளிக்கிழமை அன்று ஜுமுஆ உடைய பிரசங்கம் நிகழ்த்தும்போதும் மழைக்காக துஆ கேட்கலாம். நபி ﷺ அவர்கள் வெள்ளிக்கிழமை அன்று மிம்பர் மீது பிரசங்கம் நிகழ்த்துகையில் மழைக்காக துஆ கேட்டார்கள்.[261]

**நான்காவது சட்டவிளக்கம்**

## மழைத் தொழுகைக்கு புறப்பட்டு செல்வது

மழைத் தொழுகைக்கு செல்ல வேண்டும் என்று இமாம் முடிவு

260. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ؓ, நூல்: இப்னு மாஜா, எண்: 1256
261. பார்க்க: ஹதீஸ் எண்: 933, நூல்: புகாரி

செய்தால் அவர் மக்களுக்கு அறிவுரை வழங்க வேண்டும். பாவங்களில் இருந்து பாவமன்னிப்பு கேட்கும்படி மக்களை தூண்ட வேண்டும். அநியாயங்கள் செய்வதை விட்டும் தங்களுக்குள் சண்டை சச்சரவுகள் செய்துகொள்வதை விட்டும் ஒருவரை ஒருவர் வெறுப்பதை விட்டும் விலகி இருக்கும்படி உபதேசிக்க வேண்டும். இவை எல்லாம் அல்லாஹ்வுடைய அருளை தடுக்கக்கூடிய காரணங்களாகும்.

பாவங்கள் பஞ்சத்திற்கு காரணமாகும்.
பயபக்தி அபிவிருத்திகளுக்கு காரணமாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

**وَلَوْ أَنَّ أَهْلَ الْقُرَى آمَنُوا وَاتَّقَوْا لَفَتَحْنَا عَلَيْهِمْ بَرَكَاتٍ مِنَ السَّمَاءِ وَالْأَرْضِ وَلَكِنْ كَذَّبُوا فَأَخَذْنَاهُمْ بِمَا كَانُوا يَكْسِبُونَ.**

அவ்வூர்களில் இருந்தவர்கள் நம்பிக்கை கொண்டு (அல்லாஹ்வுக்குப்) பயந்து நடந்திருந்தால், அவர்களுக்காக வானத்திலும், பூமியிலும் உள்ள அருட்கொடைகளின் வாசல்களைத் திறந்து விட்டிருப்போம். எனினும், அவர்களோ (நபிமார்களை) பொய்யாக்கினார்கள். ஆகவே, அவர்களுடைய (தீய) செயலின் காரணமாக நாம் (வேதனையைக் கொண்டு) அவர்களைப் பிடித்துக் கொண்டோம்.
(அல்குர்ஆன் 7:96)

சுத்தமான ஆடை அணிந்து, நறுமணம் பூசாமல், அலங்காரமான ஆடைகளை அணியாமல் இந்த தொழுகைக்கு வரவேண்டும். ஏனெனில், இது பயப்படவேண்டிய, பணிவை வெளிப்படுத்த வேண்டிய, மன்றாடி கேட்கவேண்டிய நாளாகும். ஆகவே, மேற்கூறப்பட்ட நபிமொழியில் வந்துள்ளதைப்போன்று பணிவுடன், பயத்துடன், அடக்கத்துடன் (பெருமையும் பகட்டும் இன்றி) புறப்பட்டு வரவேண்டும்.

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## பிரசங்கம் நிகழ்த்துவது

தொழுது முடித்த பின்னர் ஒரே ஒருமுறை இமாம் மக்களுக்கு பிரசங்கம் நிகழ்த்துவார். அந்த பிரசங்கம் முக்கியமான கருத்துகளை உள்ளடக்கியதாக இருக்க வேண்டும். தவ்பா கேட்பதையும் தர்மம் செய்வதையும் அதிகம் தூண்ட வேண்டும். அல்லாஹ்வின் பக்கம் திரும்ப வேண்டும் என்பதையும் பாவங்களை விட்டு விலக வேண்டும் என்பதையும் வலியுறுத்த வேண்டும்.

இமாம் குத்பாவில் அதிகம் பாவமன்னிப்பு கேட்க வேண்டும். பாவமன்னிப்பு கேட்பதை ஆர்வமூட்டக்கூடிய குர்ஆன் வசனங்களை அதிகம் ஓதிக்காட்ட வேண்டும். பிறகு, மழை வேண்டி அதிகம் துஆ கேட்க வேண்டும்.

பின் வருகின்ற துஆக்கள் அனைத்தையுமோ அல்லது அவற்றில் சிலவற்றையோ அதிகம் கேட்க வேண்டும்.

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِينَ الرَّحْمٰنِ الرَّحِيمِ مٰلِكِ يَوْمِ الدِّينِ

அகிலத்தாரின் இரட்சகன், மகா கருணையாளன், மகா இரக்கமுடையவன், தீர்ப்பு நாளின் அதிபதி அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்!

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ يَفْعَلُ مَا يُرِيدُ

அல்லாஹ்வைத் தவிர உண்மையில் வணக்கத்திற்குரியவன் யாரும் அறவே இல்லை. அவன் நாடியதை செய்கிறான்.

اَللّٰهُمَّ أَنْتَ اللّٰهُ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ الْغَنِيُّ وَنَحْنُ الْفُقَرَاءُ

அல்லாஹ்வே! நீதான் அல்லாஹ், உன்னைத் தவிர உண்மையில் வணக்கத்திற்குரியவன் யாரும் அறவே இல்லை. நீதான் மகா செல்வந்தன் - நிறைவானவன். நாங்கள்தான் ஏழைகள் - தேவை உள்ளவர்கள்.

أَنْزِلْ عَلَيْنَا الْغَيْثَ وَاجْعَلْ مَا أَنْزَلْتَ لَنَا قُوَّةً وَبَلَاغًا إِلَى حِينٍ

எங்களுக்கு மழையை இறக்குவாயாக! நீ எங்களுக்கு இறக்கியதை (எங்களுக்கு) ஒரு பலமாகவும், சில காலம் வரை தேவையை நிறைவேற்றக்கூடியதாகவும் ஆக்குவாயாக![262]

اَللّٰهُمَّ اسْقِنَا غَيْثًا مُغِيثًا مَرِيئًا مَرِيعًا نَافِعًا غَيْرَ ضَارٍّ عَاجِلًا غَيْرَ آجِلٍ

அல்லாஹ்வே! எங்களுக்கு உதவக்கூடிய, மென்மையான, நல்ல பசுமையான, பலன்தரக்கூடிய, இடையூறு அளிக்காத, விரைவான, தாமதமில்லாத மழையை எங்களுக்கு இறக்குவாயாக![263]

اَللّٰهُمَّ اسْقِنَا غَيْثًا مُغِيثًا مَرِيئًا طَبَقًا مَرِيعًا غَدَقًا عَاجِلًا غَيْرَ رَائِثٍ

அல்லாஹ்வே! எங்களுக்கு உதவக்கூடிய, மென்மையான, பூமியை நிரப்பக்கூடிய, நல்ல பசுமையான, அடர்த்தியான, விரைவான, தாமதமில்லாத மழையை எங்களுக்கு இறக்குவாயாக![264]

اَللّٰهُمَّ اسْقِنَا غَيْثًا مُغِيثًا مَرِيعًا طَبَقًا غَدَقًا غَيْرَ رَائِثٍ نَافِعًا غَيْرَ ضَارٍّ

அல்லாஹ்வே! எங்களுக்கு உதவக்கூடிய, பசுமையான, பூமியை நிரப்பக்கூடிய, அடர்த்தியான, தாமதமில்லாத, நற்பலன் தரக்கூடிய, இடையூறு தராத மழையை எங்களுக்கு இறக்குவாயாக![265]

துஆக்கள் கேட்கும்போது இரு கைகளையும் உயர்த்தி கேட்க வேண்டும்.

நபி ﷺ அவர்கள் தங்கள் அக்குள் தெரியும் வரை கைகளை உயர்த்தினார்கள். மக்களும் தங்கள் கைகளை உயர்த்தினார்கள்.

---

262. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: அபூ தாவூத், எண்: 992

263. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ؓ, நூல்: அபூ தாவூத், எண்: 988

264, அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ؓ, நூல்: இப்னு மாஜா, எண்: 1260

265, அறிவிப்பாளர்: கஅப் இப்னு முர்ரா ؓ, அல்லது முர்ரா இப்னு கஅப் ؓ, நூல்: அஹ்மது, எண்: 17368

நபி ﷺ அவர்கள் மீது ஸலாவாத் கூறுவது துஆ ஏற்கப்படுவதற்குரிய காரணமாக இருப்பதால் அதிகம் ஸலவாத் சொல்ல வேண்டும்.

**ஆறாவது சட்டவிளக்கம்**

## மழைத் தொழுகையின் குத்பாவில் பேணவேண்டிய சுன்னத்துகள்

1). நபி ﷺ அவர்கள் கற்பித்த துஆக்களை அதிகம் கேட்கவேண்டும். துஆவின் இறுதியில் கிப்லாவை முன்னோக்க வேண்டும். தனது மேல் உள்ள போர்வையை மாற்றி அணிய வேண்டும். அதாவது வலது பக்கம் உள்ளதை இடது பக்கமாகவும் இடது பக்கம் உள்ளதை வலது பக்கமாகவும் ஆக்கிக்கொள்ள வேண்டும். போர்வை இல்லை என்றால் தனது மேல் உள்ள ஏதாவது ஓர் ஆடையை அப்படி மாற்றிக்கொள்ள வேண்டும்.

நபி ﷺ அவர்கள் பிரசங்கத்தின் இறுதியில் கிப்லாவை முன்னோக்கி மக்கள் பக்கம் முதுகை திருப்பி துஆவில் ஈடுபட்டார்கள். பிறகு, தனது போர்வையை மாற்றினார்கள்.[266]

(வறட்சியின்) நிலைமை மாறும் என்பதை நபி ﷺ அவர்கள் ஆதரவு வைத்து தங்கள் மேலுள்ள போர்வையை மாற்றினார்கள் என அறிஞர்கள் இந்த செயலுக்கு தத்துவம் கூறுகிறார்கள்.

2). பெண்கள், சிறுவர்கள் உட்பட முஸ்லிம்கள் அனைவரும் மழைத் தொழுகையை நிறைவேற்ற புறப்பட்டு வருவது சுன்னாவாகும்.

3). இந்த தொழுகைக்கு செல்லும்போது பயம், பணிவு, அடக்கம், தாழ்மை இருக்க வேண்டும். நபி ﷺ அவர்கள் அப்படித்தான் புறப்பட்டு சென்றார்கள் என்பதை முன்னர் கூறப்பட்ட நபிமொழியில் பார்த்தோம்.[267]

---

266. நூல்: புகாரி, எண்: 968
267. நூல்: புகாரி, எண்: 968

4). மழை பெய்ய ஆரம்பித்தவுடன் அந்த ஆரம்ப மழையில் கொஞ்சம் நனையும்படி நிற்பதும் அப்போது பின்வருகின்ற துஆக்களை ஓதுவதும் சுன்னாவாகும்.

اَللّٰهُمَّ صَيِّبًا نَافِعًا

அல்லாஹ்வே! நன்மை பயக்கும் மழையாக ஆக்குவாயாக![268]

مُطِرْنَا بِفَضْلِ اللّٰهِ وَرَحْمَتِهِ

அல்லாஹ்வின் அருளாலும் அவனது கருணையாலும் எங்களுக்கு மழை பொழிந்தது.[269]

5). மழை அதிகமாகி, ஆபத்துகள் ஏற்பட்டுவிடும் என்று பயந்தால் பின்வரும் துஆவை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ حَوَالَيْنَا وَلَا عَلَيْنَا اَللّٰهُمَّ عَلَى الْآكَامِ وَالْجِبَالِ وَالْآجَامِ وَالظِّرَابِ وَالْأَوْدِيَةِ وَمَنَابِتِ الشَّجَرِ

அல்லாஹ்வே! எங்களை சுற்றி மழையை இறக்குவாயாக! எங்கள் மீதல்ல. அல்லாஹ்வே! சிறிய மலைகள் மீதும் மலைக்குன்றுகள் மீதும் பள்ளத்தாக்குகளுக்கு நடுவிலும் மரங்கள் முளைக்கின்ற இடங்களிலும் இந்த மழையை இறக்குவாயாக![270]

---------------

268, அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: புகாரி, எண்: 974

269, அறிவிப்பாளர்: சைது இப்னு காலித் அல்ஜுஹனி ﵁, நூல்: புகாரி, எண்: 801

270, அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: புகாரி, எண்: 957

பதினான்காவது பாடம்

# الباب الرابع عشر في صلاة الكسوف

# கிரகணத் தொழுகை

இதில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்டவிளக்கம்**

## கிரகணம் என்பதன் விளக்கம், அது ஏற்படுவதில் உள்ள தத்துவம்.

கிரகணம் என்றால் சூரியன் அல்லது சந்திரனின் ஒளி வழமைக்கு மாறாக மங்குவதற்கு கூறப்படும். அரபியில் இதை **كسوف** குஸூஃப் அல்லது **خسوف** குஸூஃப் என்று கூறப்படும்.

தனது அடியார்களுக்கு அச்சத்தை ஏற்படுத்தி அவர்கள் தன் பக்கம் திரும்ப வேண்டும் என்பதற்காக அல்லாஹ் இவ்வாறு செய்கிறான்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

**إِنَّ الشَّمْسَ وَالْقَمَرَ آيَتَانِ مِنْ آيَاتِ اللهِ لَا يَخْسِفَانِ لِمَوْتِ أَحَدٍ وَلَا لِحَيَاتِهِ فَإِذَا رَأَيْتُمْ ذَلِكَ فَادْعُوا اللهَ وَكَبِّرُوا وَصَلُّوا وَتَصَدَّقُوا رواه البخاري برقم برقم ١٠٤٤**

நிச்சயமாக சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில்

உள்ள இரு அத்தாட்சிகளாகும். எவருடைய மரணத்திற்காகவோ அல்லது பிறப்புக்காகவோ அவற்றில் கிரகணம் ஏற்படுவதில்லை. நீங்கள் அதை (-கிரகணத்தைப்) பார்த்தால் அல்லாஹ்விடம் துஆ கேளுங்கள்! தக்பீர் கூறுங்கள்! தொழுங்கள்! தர்மம் செய்யுங்கள்![271]

மற்றொரு அறிவிப்பில் வருவதாவது:

عَنْ أَبِي بَكْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ الشَّمْسَ وَالْقَمَرَ آيَتَانِ مِنْ آيَاتِ اللهِ لَا يَنْكَسِفَانِ لِمَوْتِ أَحَدٍ وَلَا لِحَيَاتِهِ وَلَكِنَّ اللهَ تَعَالَى يُخَوِّفُ بِهَا عِبَادَهُ رواه البخاري برقم برقم ١٠٤٨

நிச்சயமாக சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ள இரு அத்தாட்சிகளாகும். எவருடைய மரணத்திற்காகவோ அல்லது பிறப்புக்காகவோ அவற்றில் கிரகணம் ஏற்படுவதில்லை. என்றாலும் அல்லாஹ் இவற்றின் மூலம் தனது அடியார்களை அச்சுறுத்துகின்றான்.[272]

மற்றொரு அறிவிப்பில் வருவதாவது:

إِنَّ الشَّمْسَ وَالْقَمَرَ آيَتَانِ مِنْ آيَاتِ اللهِ لَا يَخْسِفَانِ لِمَوْتِ أَحَدٍ وَلَا لِحَيَاتِهِ فَإِذَا رَأَيْتُمْ ذَلِكَ فَاذْكُرُوا اللهَ رواه البخاري برقم برقم ١٠٥٢

நிச்சயமாக சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ள இரு அத்தாட்சிகளாகும். எவருடைய மரணத்திற்காகவோ அல்லது பிறப்புக்காகவோ அவற்றில் கிரகணம் ஏற்படுவதில்லை. நீங்கள் அதை (-கிரகணத்தைப்) பார்த்தால் அல்லாஹ்வை நினைவு கூருங்கள்![273]

271. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: புகாரி, எண்: 1044
272. அறிவிப்பாளர்: அபூ பக்ரா ﵁, நூல்: புகாரி, எண்: 1048
273. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ﵄, நூல்: புகாரி, எண்: 1052

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## கிரகணத் தொழுகையின் சட்டம், அதன் ஆதாரம்.

கிரகணத் தொழுகை வாஜிப் - கட்டாயமாகும். இமாம் அபூ அவானா ﵀ அவர்கள் தனது ஸஹீஹ் கிரந்தத்தில் இதை உறுதி செய்துள்ளார்கள். இமாம் அபூ ஹனீஃபா ﵀ அவர்களும் இவ்வாறுதான் கருதுவதாக அறிவிக்கப்படுகின்றது. இமாம் மாலிக் ﵀ அவர்கள் ஜுமுஆ தொழுகையின் இடத்தில் இதை வைக்கின்றார்கள். அறிஞர் இப்னுல் கய்யிம் ﵀ அவர்களும் இது வாஜிப் என்ற கூற்றையே உறுதிப்படுத்துகின்றார்கள். ஷைக் உஸைமீன் ﵀ அவர்களும் இதையே உறுதி செய்கிறார்கள்.

நபி ﷺ அவர்கள் இந்த தொழுகையை நாம் தொழும்படி ஏவியதுடன் அவர்களும் இதை தொழுது இருக்கின்றார்கள். நபி ﷺ அவர்கள் இந்த தொழுகையை நிறைவேற்ற பயந்தவர்களாக, திடுக்கிற்றவர்களாக புறப்பட்டு சென்றார்கள்.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## கிரகணத் தொழுகையின் நேரம்

இந்த தொழுகையின் நேரம் கிரகணம் ஆரம்பித்ததிலிருந்து அது முடிகின்றவரை இருக்கின்றது.

நபி ﷺ கூறினார்கள்:

وَإِنَّهُمَا آيَتَانِ مِنْ آيَاتِ اللهِ يُرِيكُمُوهُمَا فَإِذَا خَسَفَا فَصَلُّوا حَتَّى تَنْجَلِيَ

رواه مسلم برقم ٩٠٤

நிச்சயமாக இவை இரண்டும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ள இரு அத்தாட்சிகளாகும். அல்லாஹ் இவற்றை உங்களுக்கு காண்பிக்கின்றான். இவற்றில் கிரகணம் ஏற்பட்டால் அவை

தெளிவடைகின்றவரை (-கிரகணம் நீங்கி வெளிச்சம் ஏற்படுகின்றவரை) நீங்கள் தொழுங்கள்.[274]

**நான்காவது சட்டவிளக்கம்**

## கிரகணத் தொழுகையின் முறையும் அதில் ஓத வேண்டியவையும்

கிரகணத் தொழுகை இரண்டு ரக்அத்துகளாகும். இரண்டு ரக்அத்துகளிலும் சப்தமாக ஓத வேண்டும். அது சூரிய கிரகணமாக இருந்தாலும் சரி அல்லது சந்திர கிரகணமாக இருந்தாலும் சரி.

முதலில், ஃபாத்திஹா சூரா ஓத வேண்டும். பிறகு, ஒரு நீண்ட சூரா ஓத வேண்டும். பிறகு, நீண்ட நேரம் ருகூஃ செய்ய வேண்டும். பிறகு, தலையை உயர்த்தி சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ், ரப்பனா லகல் ஹம்து கூற வேண்டும். பிறகு, மீண்டும் ஃபாத்திஹா சூரா ஓதி, முன்பு ஓதிய அளவை விட குறைவான அளவுள்ள ஒரு நீண்ட சூராவை ஓத வேண்டும். பிறகு, ருகூஃ செய்ய வேண்டும். பிறகு, எழ வேண்டும். பிறகு, இரண்டு ஸஜ்தாக்கள் நீண்ட நேரம் செய்ய வேண்டும். இவ்வாறே இரண்டாவது ரக்அத்தையும் நிறைவேற்ற வேண்டும். இரண்டாவது ரக்அத் முதல் ரக்அத்தை விட கொஞ்சம் குறைவாக இருக்க வேண்டும். பிறகு, தஷஹ்ஹுத், ஸலவாத், மற்றும் துஆ ஓதி ஸலாம் கொடுத்து தொழுகையை முடிக்க வேண்டும்.

عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ كَسَفَتْ الشَّمْسُ عَلَى عَهْدِ رَسُولِ اللَّهِ ﷺ فَقَامَ النَّبِيُّ ﷺ فَصَلَّى بِالنَّاسِ فَأَطَالَ الْقِرَاءَةَ ثُمَّ رَكَعَ فَأَطَالَ الرُّكُوعَ ثُمَّ رَفَعَ رَأْسَهُ فَأَطَالَ الْقِرَاءَةَ وَهِيَ دُونَ قِرَاءَتِهِ الْأُولَى ثُمَّ رَكَعَ فَأَطَالَ الرُّكُوعَ دُونَ رُكُوعِهِ الْأَوَّلِ ثُمَّ رَفَعَ رَأْسَهُ فَسَجَدَ سَجْدَتَيْنِ ثُمَّ قَامَ فَصَنَعَ فِي الرَّكْعَةِ الثَّانِيَةِ مِثْلَ ذَلِكَ رواه البخاري برقم ١٠٥٨

274. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ﵁, நூல்: முஸ்லிம், எண்: 904

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. நபி ﷺ அவர்கள் தயாராகி, மக்களுக்கு தொழுகை நடத்தினார்கள். நீண்ட நேரம் ஓதினார்கள். பிறகு, நீண்ட நேரம் ருகூஃ செய்தார்கள். பிறகு, தமது தலையை உயர்த்தினார்கள். அப்போதும் முந்திய முறை ஓதியதை விட கொஞ்சம் குறைவாக, நீண்ட நேரம் குர்ஆன் ஓதினார்கள். பிறகு, தமது முந்திய ருகூஃஐ விட குறைவாக நீண்ட ருகூஃ செய்தார்கள். பிறகு தலையை உயர்த்தினார்கள். பிறகு இரண்டு ஸஜ்தாக்கள் செய்தார்கள். பிறகு இது போன்றே இரண்டாவது ரக்அத்திலும் செய்தார்கள்.[275]

**عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللّٰهِ رضي الله عنه قَالَ كَسَفَتْ الشَّمْسُ عَلَى عَهْدِ رَسُولِ اللّٰهِ ﷺ فِي يَوْمٍ شَدِيدِ الْحَرِّ فَصَلَّى رَسُولُ اللّٰهِ ﷺ بِأَصْحَابِهِ فَأَطَالَ الْقِيَامَ حَتَّى جَعَلُوا يَخِرُّونَ ثُمَّ رَكَعَ فَأَطَالَ ثُمَّ رَفَعَ فَأَطَالَ ثُمَّ رَكَعَ فَأَطَالَ ثُمَّ رَفَعَ فَأَطَالَ ثُمَّ سَجَدَ سَجْدَتَيْنِ ثُمَّ قَامَ فَصَنَعَ نَحْوًا مِنْ ذَاكَ فَكَانَتْ أَرْبَعَ رَكَعَاتٍ وَأَرْبَعَ سَجَدَاتٍ رواه مسلم برقم ٩٠٤**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய காலத்தில் கடுமையான வெப்பம் நிறைந்த ஒரு நாளில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தமது தோழர்களுக்கு தொழுகை நடத்தினார்கள். நிலையில் நீண்ட நேரம் நின்றார்கள். மக்கள் கீழே விழுந்துவிட நெருங்கி விட்டார்கள். பிறகு, நீண்ட நேரம் ருகூஃ செய்தார்கள். பிறகு, தமது தலையை உயர்த்தினார்கள். நீண்ட நேரம் நின்றார்கள். பிறகு நீண்ட நேரம் ருகூஃ செய்தார்கள். பிறகு தலையை உயர்த்தி, நீண்ட நேரம் நின்றார்கள். பிறகு இரண்டு ஸஜ்தாக்கள் செய்தார்கள். பிறகு, இது போன்றே (இரண்டாவது ரக்அத்திலும்) செய்தார்கள். ஆக, நான்கு ருகூஃகளும் நான்கு ஸஜ்தாக்களும் இந்த தொழுகையில் இருந்தன.[276]

275. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: புகாரி, எண்: 1058
276. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 904

கிரகணத் தொழுகையை தொழுது முடித்த பின்னர் இமாம் மக்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும். மார்க்கத்தை மறப்பதை விட்டும், இறை சட்டங்களை அலட்சியம் செய்வதை விட்டும் உலகத்தைக் கொண்டு ஏமாறுவதை விட்டும் எச்சரிக்க வேண்டும். அதிகம் துஆ கேட்கும்படியும் பாவமன்னிப்பு கேட்கும்படியும் தூண்ட வேண்டும்.

**فَخَطَبَ النَّاسَ فَحَمِدَ اللّٰهَ وَأَثْنَى عَلَيْهِ ثُمَّ قَالَ إِنَّ الشَّمْسَ وَالْقَمَرَ آيَتَانِ مِنْ آيَاتِ اللّٰهِ لَا يَخْسِفَانِ لِمَوْتِ أَحَدٍ وَلَا لِحَيَاتِهِ فَإِذَا رَأَيْتُمْ ذَلِكَ فَادْعُوا اللّٰهَ وَكَبِّرُوا وَصَلُّوا وَتَصَدَّقُوا ثُمَّ قَالَ يَا أُمَّةَ مُحَمَّدٍ وَاللّٰهِ مَا مِنْ أَحَدٍ أَغْيَرُ مِنْ اللّٰهِ أَنْ يَزْنِيَ عَبْدُهُ أَوْ تَزْنِيَ أَمَتُهُ يَا أُمَّةَ مُحَمَّدٍ وَاللّٰهِ لَوْ تَعْلَمُونَ مَا أَعْلَمُ لَضَحِكْتُمْ قَلِيلًا وَلَبَكَيْتُمْ كَثِيرًا رواه البخاري برقم ١٠٤٤**

கிரகண தொழுகை முடிந்த பின்னர் நபி ﷺ அவர்கள் மக்களுக்கு பிரசங்கம் நிகழ்த்தினார்கள். அதில், அல்லாஹ்வை புகழ்ந்து, அவனை அதிகம் துதித்தார்கள். பிறகு, கூறினார்கள்: நிச்சயமாக சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ள இரு அத்தாட்சிகளாகும். எவருடைய மரணத்திற்காகவோ அல்லது பிறப்புக்காகவோ அவற்றில் கிரகணம் ஏற்படுவதில்லை. நீங்கள் அதை (-கிரகணத்தைப்) பார்த்தால் அல்லாஹ்விடம் துஆ கேளுங்கள்! தக்பீர் கூறுங்கள்! தொழுங்கள்! தர்மம் செய்யுங்கள்! பிறகு, கூறினார்கள்: முஹம்மது உடைய சமுதாயமே! தனது ஆண் அடியான் அல்லது தனது பெண் அடியார் விபச்சாரம் செய்தால், அதற்காக அல்லாஹ்வை விட அதிகமாக வேறு யாரும் ரோஷமுடையவர் இருக்க மாட்டார். முஹம்மதின் சமுதாயமே! அல்லாஹ்வின் மீது ஆணையாக நான் அறிவதை நீங்கள் அறிந்துவிட்டால் குறைவாக சிரித்திருப்பீர்கள். அதிகமாக அழுதிருப்பீர்கள்.[277]

கிரகணம் நீங்கி, சூரியன் அல்லது சந்திரன் வெளுப்பதற்கு முன்னர்

277. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: புகாரி, எண்: 1044

அந்த தொழுகை முடிந்துவிட்டால் மீண்டும் தொழ வேண்டிய அவசியமில்லை. மாறாக, திக்ர் இன்னும் துஆக்களில் ஈடுபட்டு இருக்க வேண்டும்.

عَنْ أَبِي بَكْرَةَ ﵁ قَالَ كُنَّا عِنْدَ رَسُولِ اللهِ ﷺ فَانْكَسَفَتْ الشَّمْسُ فَقَامَ النَّبِيُّ ﷺ يَجُرُّ رِدَاءَهُ حَتَّى دَخَلَ الْمَسْجِدَ فَدَخَلْنَا فَصَلَّى بِنَا رَكْعَتَيْنِ حَتَّى انْجَلَتْ الشَّمْسُ فَقَالَ ﷺ إِنَّ الشَّمْسَ وَالْقَمَرَ لَا يَنْكَسِفَانِ لِمَوْتِ أَحَدٍ فَإِذَا رَأَيْتُمُوهُمَا فَصَلُّوا وَادْعُوا حَتَّى يُكْشَفَ مَا بِكُمْ رواه البخاري برقم ١٠٤٠

அபூ பக்ரா ﵁ அறிவிக்கின்றார்: நாங்கள் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் இருந்தோம். அப்போது சூரிய கிரகணம் ஏற்பட்டது. நபி ﷺ அவர்கள் தமது போர்வையை இழுத்தவர்களாக மஸ்ஜிதிற்குள் நுழைந்தார்கள். நாங்களும் நுழைந்தோம். சூரியன் தெளிவடைகின்ற வரை எங்களுக்கு இரண்டு ரக்அத்துகள் தொழவைத்தார்கள். அப்போது நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக சூரிய, சந்திர கிரகணம் யார் ஒருவருடைய மரணத்திற்காகவும் நிகழ்வதில்லை. ஆகவே, நீங்கள் அந்த இரண்டையும் பார்த்தால் தொழுங்கள்! இன்னும் துஆ கேளுங்கள்! உங்களுக்கு ஏற்பட்டது நீக்கப்படுகின்றவரை.[278]

**கருத்து:** கிரகணம் முடிவதற்கு முன்னர் தொழுகையிலிருந்து ஸலாம் கொடுத்துவிட்டால் துஆவில் ஈடுபட வேண்டும் என்பதை இந்த நபிமொழி உணர்த்துகின்றது.

**கவனிக்க:** தொழுகையில் இருக்கும்போது கிரகணம் முடிந்துவிட்டால் மீதமுள்ள தொழுகையை சுருக்கமாக முடித்துக்கொள்ள வேண்டும். தொழுகையை முறித்து விடக்கூடாது.

-------------

278. நூல்: புகாரி, எண்: 1040

<u>பதினைந்தாவது பாடம்</u>

# الباب الخامس عشر في صلاة الجنازة وأحكام الجنائز

# ஜனாஸா தொழுகை மற்றும் சட்டங்கள்

ஜனாஸா - இறந்தவருக்கான தொழுகை, மற்றும் இறந்தவர்கள் சம்பந்தப்பட்ட சட்டங்கள்

இதில் பல சட்ட விளக்கங்கள் உள்ளன.

**جنازة** - இதில் முதல் எழுத்திற்கு ஃபத்ஹா -அகரக் குறி வைத்து ஜனாஸா என்றும் படிக்கலாம். அல்லது கஸ்ரா - இகரக் குறி வைத்து ஜினாஸா என்றும் படிக்கலாம். இதன் பன்மை **جنائز** ஜனாஇஸ் ஆகும். எப்படி படித்தாலும் இதன் பொருள் இறந்தவர் என்பதாகும்.

சிலர் இப்படியும் கூறுகிறார்கள். அதாவது, ஜனாஸா என்றால் இறந்தவர், ஜினாஸா என்றால் இறந்தவரை சுமந்து செல்ல பயன்படுத்தப்படுகின்ற சாதனம்.

மனிதன் தனது மரணத்தை நினைப்பதும் இவ்வுலகில் தனது முடிவை எண்ணிப் பார்ப்பதும் மிக அவசியமாகும். அதனால் அவன் நல்ல அமல்களைக் கொண்டு மறுமைக்கு தயாராகுவான்; மறுமைக்கு தேவையான நற்காரியங்களை செய்துகொள்வான்; பாவங்களை விட்டு தவ்பா செய்வான்; பிறருக்கு செய்த அநியாயங்களை விட்டு விலகி, பரிகாரம் செய்து கொள்வான்.

நோயாளிகளை சந்தித்து நலம் விசாரிப்பது, அப்போது அவருக்கு பாவமன்னிப்புத் தேடுவதை நினைவூட்டுவது, மரண சாசனம் கூறுவதை ஞாபகமூட்டுவது நபிவழியாகும்.

ஒருவர் மரணப்படுக்கையில் தனது இறுதி நிலையை அடைந்து விட்டால் அவருக்கு லா இலாஹ இல்லல்லாஹ் என்ற திரு கலிமாவை சொல்லிக் கொடுப்பதும் அவரை கிப்லாவை முன்னோக்கி வைப்பதும் நபிவழியாகும். அவர் இறந்துவிட்டால் அவருடைய கண்களை மூடவேண்டும். உடனடியாக அவரை குளிப்பாட்டி அடக்கம் செய்வதில் தீவிரம் காட்ட வேண்டும்.

**முதல் சட்டவிளக்கம்**

## இறந்தவரை குளிப்பாட்டுவதின் சட்டம்

**ميت** - மய்யித் இறந்தவரை குளிப்பாட்டுவதின் சட்டம் மற்றும் அதன் முறை

1). இறந்தவரை குளிப்பாட்டுவது **واجب** - வாஜிப் கட்டாயமாகும்.

இறந்தவர்களை குளிப்பாட்ட வேண்டும் என்று நபி ﷺ அவர்கள் கட்டளையிட்டுள்ளார்கள்.

**عَنْ أُمِّ عَطِيَّةَ الْأَنْصَارِيَّةِ رضي الله عنها قَالَتْ دَخَلَ عَلَيْنَا رَسُولُ اللهِ ﷺ حِينَ تُوُفِّيَتْ ابْنَتُهُ فَقَالَ اغْسِلْنَهَا ثَلَاثًا أَوْ خَمْسًا أَوْ أَكْثَرَ مِنْ ذَلِكَ إِنْ رَأَيْتُنَّ ذَلِكَ بِمَاءٍ وَسِدْرٍ وَاجْعَلْنَ فِي الْآخِرَةِ كَافُورًا رواه البخاري برقم ١٢٥٣**

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய மகளார் மரணித்த போது (நாங்கள் அவரை குளிப்பாட்ட தயாராக இருந்த நிலையில் நபி) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். (எங்களுக்கு) கூறினார்கள்: நீங்கள் அவரை மூன்று முறை அல்லது ஐந்து முறை அல்லது, நீங்கள் கருதினால் அதைவிட அதிகமாக குளிப்பாட்டுங்கள். இலந்தை

இலை கலந்த தண்ணீரில் அவரை குளிப்பாட்டுங்கள். இறுதியாக குளிப்பாட்டும்போது கற்பூரத்தை வையுங்கள்.[279]

عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنهما قَالَ بَيْنَمَا رَجُلٌ وَاقِفٌ بِعَرَفَةَ إِذْ وَقَعَ عَنْ رَاحِلَتِهِ فَوَقَصَتْهُ أَوْ قَالَ فَأَوْقَصَتْهُ قَالَ النَّبِيُّ ﷺ اغْسِلُوهُ بِمَاءٍ وَسِدْرٍ رواه البخاري برقم ١٢٦٥

ஒருவர் அரஃபாவில் நின்றிருந்தபோது தனது வாகனத்தில் இருந்து விழுந்துவிட்டார். அவருடைய கழுத்தை அது முறித்துவிட்டது. (அவர் இறந்துவிட்டார்.) நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அவரை இலந்தை இலை கலந்த தண்ணீரில் குளிப்பாட்டுங்கள்![280]

ஆகவே, இறந்தவரை குளிப்பாட்டுவது ஃபர்ழ் கிஃபாயா என்ற சட்டத்தின் கீழ் வரும் என அறிஞர்கள் ஒருமித்து கூறுகிறார்கள்.

### 2). குளிப்பாட்டும் முறை

இறந்தவர்களை குளிப்பாட்டுவதற்குரிய சட்டங்களை அறிந்த நம்பகமான ஒருவரைத்தான் இந்த பணிக்கு தேர்ந்தெடுக்க வேண்டும். இறந்தவர் தன்னை இன்னவர் குளிப்பாட்டட்டும் என்று மரணசாசனம் கூறி இருந்தால் அவர் யாரை குறிப்பிட்டாரோ அவரைத்தான் முதலில் முற்படுத்த வேண்டும். பிறகு, உறவுகளில் இறந்தவருக்கு மிக நெருக்கமானவர், பிறகு அவரை அடுத்துள்ளவர் என்று வரிசை முறைப்படி குளிப்பாட்டுவதற்கு தகுதி பெறுகிறார்கள். முதலில் இறந்தவரின் தந்தை, பாட்டனார், மகனார் என்று இந்த வரிசை வரும். ஆனால், ஒரு நிபந்தனை என்னவென்றால் இவர்களுக்கு குளிப்பாட்டுவதின் சட்டம் தெரிந்திருக்க வேண்டும்.

நெருக்கமான உறவினர்கள் குளிப்பாட்டுவதின் சட்டத்தை அறிந்திருக்கவில்லை என்றால் யார் இதை அறிந்தவராக

279. அறிவிப்பாளர்: உம்மு அத்தியா ரழியல்லாஹு அன்ஹா, நூல்: புகாரி, எண்: 1253
280. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: புகாரி, எண்: 1265

இருக்கின்றாரோ அவர் அதை செய்வதற்கு முன்னிலைப் படுத்தப்படுவார். ஆண்களை ஆண்கள் குளிப்பாட்ட வேண்டும். பெண்களை பெண்கள் குளிப்பாட்ட வேண்டும்.

கணவன் மனைவியாக இருந்தால் ஒருவர் மற்றவரை குளிப்பாட்டலாம். கணவன் தனது மனைவியை குளிப்பாட்டலாம். மனைவி தனது கணவனை குளிப்பாட்டலாம்.

ஏழு வயதிற்கு கீழ் உள்ள ஆண், பெண் சிறுவர்களை ஆண்கள் அல்லது பெண்கள் யார் வேண்டுமானாலும் குளிப்பாட்டலாம். இறந்துவிட்ட காஃபிரை - இறை நிராகரிப்பாளரை முஸ்லிம் குளிப்பாட்டவும் கூடாது, கஃபன் அணிவிக்கவும் கூடாது, அவரின் ஜனாஸாவை சுமந்து செல்வதும் கூடாது. அவருக்காக தொழுகை நடத்துவதும் கூடாது. இறந்தவர் தாய், தந்தை போன்ற மிகவும் நெருக்கமானவராக இருந்தாலும் சரி.

இறந்தவர்களை குளிப்பாட்ட பயன்படுத்தப்படுகின்ற தண்ணீர் "தஹூர்" - மிகவும் சுத்தமானதாக, அனுமதிக்கப்பட்டதாக இருக்க வேண்டும்.

மறைவான ஓர் இடத்தில் வைத்து குளிப்பாட்ட வேண்டும்.

குளிப்பாட்டுவதில் சம்பந்தப்படாதவர்கள் அந்த இடத்தில் இருப்பது கூடாது.

## குளிப்பாட்டுகின்ற முறை

முதலில் குளிப்பாட்டுவதற்குரிய கட்டிலில் மய்யித்தை வைக்க வேண்டும்.

பிறகு, அவரின் மறைவிடங்களை மறைக்க வேண்டும்.

பிறகு, அவரின் ஆடைகளை களைய வேண்டும்.

அறைப் போன்ற மறைவான இடத்தில் வைத்து கழுவ வேண்டும்.

மய்யித்தின் தலையை உயர்த்தி அவரை உட்கார வைக்கின்ற அளவிற்கு கொண்டு வரவேண்டும்.

பிறகு, வயிறை மென்மையாக அமுக்கிவிட வேண்டும், பிழிய வேண்டும்.

பிறகு இரு பாதைகளில் இருந்து வெளியேறியதை அகற்றி சுத்தம் செய்ய வேண்டும்.

மய்யித்தை கொஞ்சம் அகற்றி வைக்க வேண்டும்.

இவ்வாறு செய்யும்போது தனது கையில் கையுறை அணிந்து கொள்ள வேண்டும். அல்லது ஒரு துணியை கையில் சுற்றிக் கொள்ள வேண்டும்.

மேற்கூறப்பட்ட சுத்தம் செய்கின்ற வேலையை செய்து முடிக்க வேண்டும்.

பிறகு, மய்யித்தை குளிப்பாட்டுகிறேன் என்று மனதில் நிய்யத் - எண்ணம் வைக்க வேண்டும்.

பிஸ்மில்லாஹ் கூற வேண்டும்.

தொழுகைக்கு உளூ செய்வது போன்று உளூ செய்து விட வேண்டும்.

வாய் கொப்பளிப்பது, மூக்கில் தண்ணீர் செலுத்துவதை மட்டும் தவிர்த்து விட்டு வாயிலும் மூக்கிலும் தண்ணீரால் தடவுவது போதுமானதாகும்.

பிறகு, தலையையும் தாடியையும் இலந்தை இலை கலந்த அல்லது சோப்பு அல்லது ஷாம்பு கலந்த தண்ணீரால் கழுவ வேண்டும்.

பிறகு, உடலின் வலது பக்கங்களை கழுவவேண்டும்.

பிறகு இடது பக்கங்களை கழுவ வேண்டும்.

பிறகு உடல் முழுவதிலும் தண்ணீர் ஊற்றி கழுவ வேண்டும்.

குளிப்பாட்டும் போது கையுறை அணிவது அல்லது ஒரு துணியை சுற்றிக்கொள்வது நல்லதாகும்.

குறைந்தது இவ்வாறு ஒரு முறை குளிப்பாட்டுவது வாஜிப் - கட்டாயமாகும். ஒரு முறை குளிப்பாட்டி சுத்தம் ஏற்பட்டுவிட்டால் வாஜிப் - கடமை நிறைவேறி விடும். பிறகு இரு முறை கழுவுவது விரும்பத்தக்க அமலாக இருக்கும். அதாவது மொத்தம் மூன்று முறை கழுவுவது முஸ்தஹப் விரும்பத்தக்க செயலாகும்.

கடைசியாக கழுவும்போது கற்பூரம் கலந்து குளிப்பாட்ட வேண்டும்.

பிறகு, மய்யித்தை துடைக்க வேண்டும்.

நகம் மற்றும் தேவையற்ற முடிகளை நீக்க வேண்டும்.

பெண் மய்யித்துடைய முடியை சடையாக பின்னி, முதுகுக்கு பின்னால் தொங்க விட வேண்டும்.

மய்யித்தை குளிப்பாட்டுவதற்கு தண்ணீர் இல்லையென்றால் அல்லது மய்யித் குளிப்பாட்டப்படக்கூடிய நிலையில் இல்லையென்றால் தயம்மும் செய்து வைக்க வேண்டும்.

மய்யித்தை குளிப்பாட்டியவர் பிறகு தானும் குளித்துக்கொள்வது முஸ்தஹப் -விரும்பத்தக்க அமலாகும்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## குளிப்பாட்டுவதற்கு பொறுப்பானவர் யார்?

குளிப்பாட்டுவதின் சுன்னத்தான முறைகளை அறிந்த, நம்பகமான, நேர்மையான ஒருவர் மய்யித்தை குளிப்பாட்ட வேண்டும். குறிப்பாக மய்யித்துடைய உறவுகளில் யாரும் இத்தகையவர் இருந்தால் அவர் குளிப்பாட்டுவதற்கு முன்னுரிமை கொடுக்கப்பட வேண்டும்.

நபி ﷺ அவர்களை அலி ؓ அவர்களும் மற்றும் நபியவர்களின் குடும்பத்தாரில் சிலரும் குளிப்பாட்டினார்கள்.[281]

281. நூல்: இப்னு மாஜா, எண்: 1467

தன்னை குளிப்பாட்டுவது குறித்து இறந்தவர் ஏதும் வசிய்யத் -மரண சாசனம் செய்து இருந்தால் அதன்படி, அவர் யாரை குறிப்பிட்டாரோ அவர் குளிப்பாட்ட வேண்டும். பிறகு, இறந்தவரின் தந்தை, பிறகு, இறந்தவரின் பாட்டனார், பிறகு, அவருடைய நேரடி இரத்த உறவுகளில் அவருக்கு மிக நெருக்கமானவர், பிறகு இரத்த சொந்தங்களில் நெருக்கமானவர் என்று இந்த வரிசை முறைப்படி குளிப்பாட்டுவதில் முன்னுரிமை வழங்கப்படும்.

ஆண் இறந்துவிட்டால் அவரை ஆண்கள் குளிப்பாட்டுவார்கள். பெண் இறந்துவிட்டால் அவளை பெண்கள்தான் குளிப்பாட்டுவார்கள். இதுதான் வாஜிப் ஆகும். கணவன் மனைவி மட்டும் இந்த சட்டத்திலிருந்து விதிவிலக்கு அளிக்கப்படுகின்றனர். கணவன் மனைவி இருவரில் ஒருவர் மற்றவரை குளிப்பாட்டுவதற்கு அனுமதி உள்ளது.

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ لَوْ كُنْتُ اسْتَقْبَلْتُ مِنْ أَمْرِي مَا اسْتَدْبَرْتُ مَا غَسَّلَ النَّبِيَّ ﷺ غَيْرُ نِسَائِهِ رواه ابن ماجة برقم ١٤٥٣**

ஆயிஷா ﵂ கூறுகிறார்கள்: எனக்கு முன்னர் செய்த காரியத்தை இப்போது செய்வதாக இருந்தால் நபி ﷺ அவர்களை அவர்களுடைய மனைவிகள் அல்லாதவர் குளிப்பாட்டி இருக்க மாட்டார்கள்.[282]

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ رَجَعَ رَسُولُ اللهِ ﷺ مِنْ الْبَقِيعِ فَوَجَدَنِي وَأَنَا أَجِدُ صُدَاعًا فِي رَأْسِي وَأَنَا أَقُولُ وَا رَأْسَاهُ فَقَالَ بَلْ أَنَا يَا عَائِشَةُ وَا رَأْسَاهُ ثُمَّ قَالَ مَا ضَرَّكِ لَوْ مِتِّ قَبْلِي فَقُمْتُ عَلَيْكِ فَغَسَّلْتُكِ وَكَفَّنْتُكِ وَصَلَّيْتُ عَلَيْكِ وَدَفَنْتُكِ رواه ابن ماجة برقم ١٤٥٤**

282. நூல்: இப்னு மாஜா, எண்: 1453

ஆயிஷா ﵂ கூறுகிறார்கள்: பகீஃ அடக்கஸ்தலத்திலிருந்து நபி ﷺ அவர்கள் திரும்பியபோது நான் எனது தலையில் தலைவலியை உணர்ந்து என் தலைவலியே என்று கூறுவதை கண்டார்கள். மாறாக, ஆயிஷா எனக்கும்தான் தலைவலி, என் தலைவலியே! என்று கூறினார்கள். பிறகு, கூறினார்கள்: உமக்கு எந்த பாதிப்பும் இருக்காது. எனக்கு முன்னால் நீ இறந்துவிட்டால் நான் உனது காரியத்தை கவனித்துக் கொள்வேன். உன்னை கழுவுவேன். உனக்கு கஃபன் இடுவேன். உனக்கு தொழ வைப்பேன். உன்னை அடக்கம் செய்வேன்.[283]

عَنْ عَبْدِ اللهِ بْنِ أَبِي بَكْرٍ ﵁ أَنَّ أَسْمَاءَ بِنْتَ عُمَيْسٍ غَسَّلَتْ أَبَا بَكْرٍ الصِّدِّيقَ حِينَ تُوُفِّيَ رواه مالك فى الموطأ برقم ٤٦٦

அபூ பக்ர் ﵁ அவர்கள் மரணித்தபோது அவர்களை அஸ்மா பின்த் உமைஸ் ﵂ குளிப்பாட்டினார்கள்.[284]

போர் மைதானத்தில் கொல்லப்பட்ட ஷஹீதை குளிப்பாட்டக்கூடாது. அவர்கள் அணிந்திருந்த ஆடையில் அப்படியே கஃபன் செய்யப்படுவார்கள். அவர்களுக்கு ஜனாஸா தொழுகை நடத்தப்படாது.

أَنَّ شُهَدَاءَ أُحُدٍ لَمْ يُغَسَّلُوا وَدُفِنُوا بِدِمَائِهِمْ وَلَمْ يُصَلَّ عَلَيْهِمْ رواه أبو داود برقم ٢٧٢٨

உஹுது போரில் கொல்லப்பட்ட தியாகிகள் குளிப்பாட்டப்படவில்லை. அவர்கள் மீதிருந்த இரத்தத்துடன் அடக்கம் செய்யப்பட்டார்கள். அவர்களுக்கு ஜனாஸா தொழுகை நடத்தப்படவில்லை.[285]

283. நூல்: இப்னு மாஜா, எண்: 1454
284. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அபீ பக்ர் ﵁, நூல்: முவத்தா மாலிக், எண்: 466. இவர் அபூபக்கர் ﵁ அவர்களின் மனைவியர்களில் ஒருவராவார்.
285. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 2728

وَقَالَ أَنَا شَهِيدٌ عَلَى هَؤُلَاءِ يَوْمَ الْقِيَامَةِ وَأَمَرَ بِدَفْنِهِمْ بِدِمَائِهِمْ وَلَمْ يُصَلِّ عَلَيْهِمْ وَلَمْ يُغَسَّلُوا رواه البخاري برقم ٤٠٧٩

உஹுது போரில் கொல்லப்பட்ட ஷஹீதுகள் குறித்து நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "நான் மறுமை நாளில் இவர்களுக்கு சாட்சியாக இருப்பேன்." மேலும், அந்த ஷஹீதுகளை அவர்களுடைய இரத்தங்களுடன் அடக்கம் செய்யும்படி கட்டளையிட்டார்கள். அவர்கள் மீது தொழுகை நடத்தப்படவில்லை. அவர்கள் குளிப்பாட்டப்படவுமில்லை.[286]

குறை மாதத்தில் இறந்து பிறக்கின்ற குழந்தைகள் நான்கு மாதங்கள் கழித்து பிறந்தால் அல்லது பிறந்து இறந்துவிட்டால் அந்த குழந்தைகளை குளிப்பாட்டி, கஃபன் இட்டு, தொழவைத்து, அடக்கம் செய்ய வேண்டும். ஒரு குழந்தைக்கு தாயின் கருவறையில் நான்கு மாதங்கள் ஆகிவிட்டால் அது முழு மனிதனாக ஆகிவிடுகின்றது.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## இறந்தவர்களை கஃபன் இடுவதின் சட்டம் மற்றும் அதன் முறை

இறந்துவிட்ட முஸ்லிமை கஃபன் அதாவது தைக்கப்படாத ஆடைகளைக் கொண்டு முழுமையாக மறைப்பது வாஜிப் -கட்டாயமாகும்.

عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنهما قَالَ بَيْنَمَا رَجُلٌ وَاقِفٌ بِعَرَفَةَ إِذْ وَقَعَ عَنْ رَاحِلَتِهِ فَوَقَصَتْهُ أَوْ قَالَ فَأَوْقَصَتْهُ قَالَ النَّبِيُّ ﷺ اغْسِلُوهُ بِمَاءٍ وَسِدْرٍ وَكَفِّنُوهُ فِي ثَوْبَيْنِ وَلَا تُحَنِّطُوهُ وَلَا تُخَمِّرُوا رَأْسَهُ فَإِنَّهُ يُبْعَثُ يَوْمَ الْقِيَامَةِ مُلَبِّيًا رواه البخاري برقم ١٢٦٥

286. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 4079

ஒருவர் அரஃபா மைதானத்தில் நின்றிருந்தபோது தனது வாகனத்தில் இருந்து கீழே விழுந்துவிட்டார். அவருடைய கழுத்து முறிந்துவிட்டது. நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: இலந்தை இலை கலந்த தண்ணீரால் அவரை குளிப்பாட்டுங்கள்! இரண்டு ஆடைகளில் அவருக்கு கஃபன் இடுங்கள்! அவருக்கு நறுமணம் பூசாதீர்கள்! அவரது தலையை மறைக்காதீர்கள். ஏனெனில், நிச்சயமாக அவர் மறுமை நாளில் தல்பியா கூறியவராக எழுப்பப்படுவார்.[287]

கஃபனிடும்போது இறந்தவரின் உடல் முழுவதையும் மறைப்பது வாஜிப் -கட்டாயமாகும். உடல் முழுவதையும் மறைப்பதற்கு போதுமான அளவு துணி கிடைக்கவில்லையென்றால் தலையை மறைத்துவிட்டு கால் பகுதியை இத்குர் என்ற செடிகளால் (அல்லது அதுபோன்ற செடிகளால்) மறைக்க வேண்டும்.

عَنْ خَبَّابٍ رضي الله عنه قَالَ هَاجَرْنَا مَعَ النَّبِيِّ ﷺ نَلْتَمِسُ وَجْهَ اللهِ فَوَقَعَ أَجْرُنَا عَلَى اللهِ فَمِنَّا مَنْ مَاتَ لَمْ يَأْكُلْ مِنْ أَجْرِهِ شَيْئًا مِنْهُمْ مُصْعَبُ بْنُ عُمَيْرٍ وَمِنَّا مَنْ أَيْنَعَتْ لَهُ ثَمَرَتُهُ فَهُوَ يَهْدِبُهَا قُتِلَ يَوْمَ أُحُدٍ فَلَمْ نَجِدْ مَا نُكَفِّنُهُ إِلَّا بُرْدَةً إِذَا غَطَّيْنَا بِهَا رَأْسَهُ خَرَجَتْ رِجْلَاهُ وَإِذَا غَطَّيْنَا رِجْلَيْهِ خَرَجَ رَأْسُهُ فَأَمَرَنَا النَّبِيُّ ﷺ أَنْ نُغَطِّيَ رَأْسَهُ وَأَنْ نَجْعَلَ عَلَى رِجْلَيْهِ مِنَ الْإِذْخِرِ

**رواه البخاري برقم ١٢٧٦**

கப்பாப் رضي الله عنه கூறுகிறார்கள்: நாங்கள் நபி ﷺ அவர்களுடன் அல்லாஹ்வின் திருமுகத்தை விரும்பியவர்களாக ஹிஜ்ரா செய்தோம். எங்கள் கூலி அல்லாஹ்விடம் உறுதியானது. எங்களில் சிலர் தனது நன்மையை அனுபவிக்காமல் இறந்துவிட்டார். அவர்களில் ஒருவர்தான் முஸ்அப் இப்னு உமைர் رضي الله عنه. எங்களில் சிலருக்கு அவரின் உழைப்பு நல்ல பலனை தந்தது. அவர் அதை

287. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1265

அனுபவிக்கின்றார். முஸ்அப் ﷺ அவர்கள் உஹுது போரில் கொல்லப்பட்டார். அவரை கஃபன் இடுவதற்கு எங்களிடம் ஒரு போர்வையைத் தவிர வேறு ஏதும் இருக்கவில்லை. அதில் அவரது தலையை மறைத்தால் அவருடைய கால்கள் வெளியே தெரிந்தன. அவருடைய இரண்டு கால்களையும் நாங்கள் மறைத்தால் அவருடைய தலை வெளியே தெரிந்தது. அப்போது, நாங்கள் அவருடைய தலையை மறைக்கும்படியும் அவருடைய இரண்டு கால்களிலும் இத்குர் செடியை ஆக்கிவிடும்படியும் நபி ﷺ அவர்கள் எங்களுக்கு கட்டளை இட்டார்கள்.[288]

இறந்தவர் இஹ்ராம் உடைய நிலையில் இருந்தால் அவருடைய தலையை மறைக்கக்கூடாது. அதாவது, அவர் ஆடவராக இருந்தால் இஹ்ராமில் தலையை மறைப்பது கூடாது. அப்படியே அவர் இறந்த பின்னரும் அவருடைய தலையை திறந்த நிலையில் வைத்துதான் அவரை கஃபனிடவேண்டும். இதை முந்திய நபிமொழியில் பார்த்தோம். இஹ்ராமுடைய நிலையில் இறந்துவிட்ட நபித்தோழரை அடக்கம் செய்ய நபி ﷺ அவர்கள் கட்டளையிட்டபோது அவரின் தலையை மறைக்காதீர்கள் என்று கூறினார்கள்.[289]

கஃபன் துணி உடலின் தோல் தெரியும் அளவு மிகவும் மெல்லியதாக இருக்கக்கூடாது.

எப்போதும் அணியப்படுகின்ற ஆடையின் துணி வகையை சேர்ந்ததாகவே கஃபன் இருக்க வேண்டும்.

ஆண் ஜனாஸாவாக இருந்தால் பருத்தி -காட்டன் வகையை சேர்ந்த, வெள்ளை நிறமான, மூன்று துணிகளில் சுருட்ட வேண்டும்.

ஒரு துணியை விரித்து வைக்க வேண்டும்.

அதன் மீது மய்யித்தை மல்லாக்க படுக்க வைக்க வேண்டும்.

288. நூல்: புகாரி, எண்: 1276
289. பார்க்க ஹதீஸ் எண்: 1186, நூல் புகாரி

இடது பக்கத்தின் மேல் புறத்தை மய்யித்தின் வலது பக்கத்தில் கொண்டு வரவேண்டும்.

பிறகு, துணியின் வலது பக்கத்தை மய்யித்தின் இடது பக்கத்தின் மீது கொண்டு வர வேண்டும்.

இவ்வாறே இரண்டாவது துணியையும் மூன்றாவது துணியையும் மய்யித்தின் மீது சுருட்ட வேண்டும். துணியில் அதிகமாக உள்ள பகுதியை தலை பக்கம் வைத்து மடித்து முடிச்சி போட வேண்டும்.

துணி அதிகம் நீளமாக இருந்தால் கால் பகுதியில் வைத்து முடிச்சு போட வேண்டும். இது, மய்யித்திற்கு போடப்படுகின்ற கஃபன் துணி பிரிந்து விடாமல் நன்கு உறுதிபடுத்தக்கூடியதாக இருக்கும்.

**عَنْ عَائِشَةَ ﵂ أَنَّ رَسُولَ اللهِ ﷺ كُفِّنَ فِي ثَلَاثَةِ أَثْوَابٍ بِيضٍ سَحُولِيَّةٍ لَيْسَ فِيهَا قَمِيصٌ وَلَا عِمَامَةٌ رواه البخاري برقم ١٢٧١ وفي رواية لأحمد رقمها ٢٣٧٢٤ أُدْرِجَ فِيهَا إِدْرَاجًا**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் பருத்தியினால் ஆன, முற்றிலும் வெள்ளை நிறமான, மூன்று துணிகளில் கஃபனிடப்பட்டார்கள். அந்த மூன்று துணிகளில் சட்டையும் இல்லை. தலைப்பாகையும் இல்லை.[290]

இந்த ஹதீஸின் மற்றொரு அறிவிப்பில் வந்துள்ளதாவது: அந்த மூன்று துணிகளில் நபி ﷺ அவர்கள் நுழைக்கப்பட்டார்கள்.[291]

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ الْبَسُوا مِنْ ثِيَابِكُمْ الْبَيَاضَ فَإِنَّهَا مِنْ خَيْرِ ثِيَابِكُمْ وَكَفِّنُوا فِيهَا مَوْتَاكُمْ رواه أبو داود برقم ٣٣٨٠**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்கள் ஆடைகளில்

290. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: புகாரி, எண்: 1271
291. நூல்: அஹ்மது, எண்: 23724



Scanned with CamScanner

வெள்ளை நிற ஆடையை அணியுங்கள்! நிச்சயமாக அது உங்கள் ஆடைகளில் மிகச் சிறந்ததாகும். அதில் உங்கள் மய்யித்துகளை (-இறந்தவர்களை) கஃபன் இடுங்கள்.[292]

இறந்தவர் பெண்ணாக இருந்தால் பருத்தியிலான ஐந்து ஆடைகளில் கஃபனிட வேண்டும். கீழாடை, சட்டை, தலை மற்றும் முகத்தை மறைப்பதற்கான துணி, மேலே சுருட்டுவதற்காக இரண்டு துணிகள் மொத்தம் ஐந்து துணிகளில் பெண் மய்யித்தை கஃபன் இட வேண்டும்.

குழந்தையாக இருந்தால் ஒரே ஒரு துணியில் சுருட்டினால் போதும். மூன்று துணிகளில் சுருட்டுவதும் கூடும். சிறுமியின் ஜனாஸாவாக இருந்தால் ஒரு சட்டை, மற்றும் இரண்டு துணிகளில் கஃபன் இட வேண்டும்.

**நான்காவது சட்டவிளக்கம்**

# ஜனாஸா தொழுகை,
# அதன் சட்டம் மற்றும் ஆதாரம்

ஒருவர் இறந்துவிட்டால் அவருக்காக தொழுகை நடத்துவது ஃபர்ழ் கிஃபாயா ஆகும். அதாவது, சிலர் இந்த கடமையை நிறைவேற்றினால் மற்றவர்கள் எல்லோரையும் விட்டு குற்றம் நீங்கிவிடும்.

தன் மீது கடன் உள்ள நிலையில் இறந்துவிட்ட மனிதருக்கு நபி ﷺ அவர்கள் தொழுகை நடத்தாமல், மற்றவர்களை நோக்கி நீங்கள் தொழுது கொள்ளுங்கள் என்று கூறினார்கள்.[293]

**கருத்து:** ஜனாஸா தொழுகை எல்லோர் மீதும் கடமையாக இருந்திருந்தால் நபி ﷺ அவர்கள் இப்படி செய்திருக்க மாட்டார்கள். தானும் தொழுது மற்ற எல்லோரும் தொழும்படி ஏவியிருப்பார்கள்.

292. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ؓ, நூல்: அபூ தாவூத், எண்: 3380
293. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: முஸ்லிம், எண்: 3040

عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يُؤْتَى بِالرَّجُلِ الْمَيِّتِ عَلَيْهِ الدَّيْنُ فَيَسْأَلُ هَلْ تَرَكَ لِدَيْنِهِ مِنْ قَضَاءٍ فَإِنْ حُدِّثَ أَنَّهُ تَرَكَ وَفَاءً صَلَّى عَلَيْهِ وَإِلَّا قَالَ صَلُّوا عَلَى صَاحِبِكُمْ فَلَمَّا فَتَحَ اللهُ عَلَيْهِ الْفُتُوحَ قَالَ أَنَا أَوْلَى بِالْمُؤْمِنِينَ مِنْ أَنْفُسِهِمْ فَمَنْ تُوُفِّيَ وَعَلَيْهِ دَيْنٌ فَعَلَيَّ قَضَاؤُهُ وَمَنْ تَرَكَ مَالًا فَهُوَ لِوَرَثَتِهِ رواه مسلم برقم ١٦١٩

அபூ ஹுரைரா ரலி அவர்கள் அறிவிக்கின்றார்கள்: கடன் உள்ள ஒரு மய்யித்தை கொண்டு வரப்படும். இவர் தனது கடனை அடைப்பதற்கு ஏதாவது விட்டிருக்கிறாரா என்று நபி ﷺ அவர்கள் கேட்பார்கள். ஆம், நிச்சயமாக அவர் கடனை அடைப்பதற்கு செல்வத்தை விட்டிருக்கின்றார் என்று நபி ﷺ அவர்களுக்கு கூறப்பட்டால் நபி ﷺ அவர்கள் அந்த மய்யித்திற்கு தொழுகை நடத்துவார்கள். அப்படி அவர் ஏதும் விட்டிருக்கவில்லை என்றால் உங்கள் தோழருக்கு நீங்கள் தொழுகை நடத்திக்கொள்ளுங்கள் என்று கூறிவிடுவார்கள். நபி ﷺ அவர்களுக்கு அல்லாஹ் வெற்றிகளை வழங்கியபோது, "எல்லா முஃமின்களுக்கும் அவர்களின் ஆன்மாக்களை விட நான் நெருக்கமானவன் ஆவேன். யார் தன் மீது கடன் உள்ள நிலையில் இறந்துவிடுவாரோ அதை நிறைவேற்றுவது என் மீது பொறுப்பாகும். யார் செல்வத்தை விட்டுவிட்டுச் செல்வாரோ அது அவரின் வாரிசுகளுக்கு உரியதாகும் என்று கூறினார்கள்."[294]

عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ أَخًا لَكُمْ قَدْ مَاتَ فَقُومُوا فَصَلُّوا عَلَيْهِ قَالَ فَقُمْنَا فَصَفَّنَا صَفَّيْنِ رواه مسلم برقم ٩٥٢

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களின் ஒரு சகோதரர் இறந்துவிட்டார். எழுந்து அவருக்காக தொழுங்கள்! ஜாபிர்

294. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரலி, நூல்: முஸ்லிம், எண்: 1619

ﷺ கூறுகிறார்கள்: நாங்கள் எழுந்து இரண்டு வரிசைகளில் நின்று தொழுதோம்.[295]

இமாம் முஸ்லிம் ؒ அவர்கள் இம்ரான் இப்னு ஹுஸைன் ؓ வாயிலாக அறிவிக்கின்ற ஹதீஸில் இறந்துவிட்ட அந்த சகோதரர் நஜ்ஜாஷி மன்னர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.[296]

கருத்து: இந்த இடத்தில், அந்த நேரத்தில் நபி ﷺ அவர்களுடைய சபையில் இருந்த தோழர்கள் மட்டும் நஜ்ஜாஷி மன்னர் உடைய ஜனாஸா தொழுகையில் கலந்துகொண்டார்கள். எல்லா தோழர்களும் கலந்துகொள்ளவில்லை என்பதை அறிய முடிகிறது. ஆகவேதான், ஜனாஸா தொழுகை ஃபர்ழ் கிஃபாயா என்ற சட்டத்தின் கீழ் வருகிறது என்று அறிஞர்கள் கூறுகின்றார்கள்.

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## ஜனாஸா தொழுகையின் நிபந்தனைகள், அதன் ருக்னுகள், மற்றும் சுன்னத்துகள்

### 1). ஜனாஸா தொழுகையின் ஷர்த் -நிபந்தனைகள்

1). நிய்யத் - ஜனாஸா தொழுகை தொழுகிறேன் என்று மனதில் நிய்யத் - எண்ணத்தை உறுதி செய்ய வேண்டும்.

2). புத்தி சுவாதீனமுள்ளவராக, பருவ வயதை அடைந்தவராக இருக்க வேண்டும்.

3). கிப்லாவை முன்னோக்கி தொழவேண்டும்.

4). உடலில் மறைக்க வேண்டிய பகுதிகளை - அவ்ரத்தை மறைத்திருக்க வேண்டும்.

5). அனைத்து விதமான அசுத்தங்களை விட்டும் நீங்கி இருக்க வேண்டும்.

---

295. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் ؓ, நூல்: முஸ்லிம், எண்: 952
296. ஹதீஸ் எண்: 1585

6). ஜனாஸா உள்ளூரில் இருந்தால், தொழுபவர்களுக்கு முன்னால் அந்த ஜனாஸா வைக்கப்பட்டிருக்க வேண்டும்.

7). தொழுபவரும் ஜனாஸாவும் முஸ்லிமாக இருக்க வேண்டும்.

8). உளூ செய்திருக்க வேண்டும். உளூ செய்ய முடியாத நிலை இருந்தால் தயம்மும் செய்திருக்க வேண்டும்.

## 2). ஜனாஸா தொழுகையின் ருக்னுகள் - மிக கட்டாயமான அம்சங்கள்

1). கியாம் -நிலையில் நின்று தொழவேண்டும். முடியவில்லை என்றால் உட்கார்ந்து தொழலாம்.

2). நான்கு தக்பீர்கள் கூறி தொழவேண்டும்.

عَنْ عُثْمَانَ بْنِ عَفَّانَ ﷛ أَنَّ النَّبِيَّ ﷺ صَلَّى عَلَى عُثْمَانَ بْنِ مَظْعُونٍ وَكَبَّرَ عَلَيْهِ أَرْبَعًا رواه ابن ماجة برقم ١٤٩١

நபி ﷺ அவர்கள் உஸ்மான் இப்னு மள்வூன் ﷛ அவர்களுக்கு ஜனாஸா தொழுகை நடத்தினார்கள். அவர்களுக்கு நான்கு தக்பீர்கள் கூறி தொழ வைத்தார்கள்.[297]

عَنِ ابْنِ عُمَرَ ﷛ أَنَّ النَّبِيَّ ﷺ صَلَّى عَلَى النَّجَاشِيِّ فَكَبَّرَ أَرْبَعًا رواه ابن ماجة برقم ١٥٢٧

நபி ﷺ அவர்கள் மன்னர் நஜ்ஜாஷிக்கு ஜனாஸா தொழுகை தொழவைத்தபோது நான்கு தக்பீர்கள் கூறினார்கள்.[298]

297. அறிவிப்பாளர்: உஸ்மான் இப்னு அஃப்பாண் ﷛, நூல்: இப்னு மாஜா, எண்: 1491
298. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﷛, நூல்: இப்னு மாஜா, எண்: 1527

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ نَعَى النَّبِيُّ ﷺ إِلَى أَصْحَابِهِ النَّجَاشِيَّ ثُمَّ تَقَدَّمَ فَصَفُّوا خَلْفَهُ فَكَبَّرَ أَرْبَعًا ورواه البخاري برقم ١٣١٨

நபி ﷺ அவர்கள் நஜ்ஜாஷி மன்னரின் மரண செய்தியை தங்கள் தோழர்களிடம் கூறினார்கள். பிறகு மக்களுக்கு முன்னால் சென்று நின்றார்கள். நபி ﷺ அவர்களுக்குப் பின்னால் மக்கள் வரிசையாக நின்றார்கள். நபி ﷺ அவர்கள் நான்கு தக்பீர்கள் கூறி தொழுகை நடத்தினார்கள்.[299]

இன்னும் பல நபிமொழிகள் இதற்கு ஆதாரமாக உள்ளன,

**3). ஃபாத்திஹா சூரா ஓதி தொழவேண்டும்.**

عَنْ عُبَادَةَ بْنَ الصَّامِتِ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ لَا صَلَاةَ لِمَنْ لَمْ يَقْرَأْ بِأُمِّ الْقُرْآنِ رواه مسلم برقم ٣٩٤

உபாதா இப்னு அஸ்ஸாமித் ﵁ அறிவிக்கிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: தொழுகையில் உம்முல் குர்ஆனை (-ஃபாத்திஹா சூராவை) ஓதாதவருக்கு தொழுகையே இல்லை (-தொழுகை சேராது).[300]

கருத்து: இந்த இடத்தில் தொழுகை என்று பொதுவாக கூறப்பட்டுள்ளது. ஆகவே, இதில் ஜனாஸா தொழுகையும் உள்ளடங்கும்.

عَنْ طَلْحَةَ بْنِ عَبْدِ اللهِ بْنِ عَوْفٍ ﵁ قَالَ صَلَّيْتُ خَلْفَ ابْنِ عَبَّاسٍ ﵁ عَلَى جَنَازَةٍ فَقَرَأَ بِفَاتِحَةِ الْكِتَابِ قَالَ لِيَعْلَمُوا أَنَّهَا سُنَّةٌ رواه البخاري برقم ١٣٣٥

நான் இப்னு அப்பாஸ் ﵁ அவர்களுக்குப் பின்னால் ஜனாஸா தொழுகை தொழுதேன். அவர்கள் சூரா ஃபாத்திஹா (சப்தமாக)

299. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: புகாரி, எண்: 1318
300. நூல்: முஸ்லிம், எண்: 394

ஓதினார்கள். மேலும் நீங்கள் இதை சுன்னா - நபிவழி என்று அறிவதற்காக நான் இவ்வாறு செய்தேன் என்று கூறினார்கள்.

அத்துடன் இன்னும் ஒரு சிறிய சூரா ஓத வேண்டும்.

**عَنْ طَلْحَةَ بْنِ عَبْدِ اللهِ بْنِ عَوْفٍ ﵁ قَالَ صَلَّيْتُ خَلْفَ ابْنِ عَبَّاسٍ عَلَى جَنَازَةٍ فَقَرَأَ بِفَاتِحَةِ الْكِتَابِ وَسُورَةٍ وَجَهَرَ حَتَّى أَسْمَعَنَا فَلَمَّا فَرَغَ أَخَذْتُ بِيَدِهِ فَسَأَلْتُهُ فَقَالَ سُنَّةٌ وَحَقٌّ رواه النسائي برقم ١٩٦١**

நான் இப்னு அப்பாஸ் ﵁ அவர்களுக்கு பின்னால் ஜனாஸா தொழுகை தொழுதேன். அவர்கள் ஃபாத்திஹா சூராவும் இன்னும் ஒரு சூராவும் ஓதினார்கள். சப்தமாக ஓதினார்கள். அவர்கள் ஓதுவதை எங்களுக்கு கேட்க வைத்தார்கள். அவர்கள் தொழுது முடித்தபோது நான் அவர்களது கையைப் பிடித்துக் கேட்டேன். அவர்கள் கூறினார்கள்: "இது சுன்னா - நபிவழியாகும், இது உண்மையாகும்."[301]

4). நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத் ஓத வேண்டும்.

5). மய்யித்திற்காக மனத்தூய்மையுடன் துஆ கேட்க வேண்டும்.

6). தொழுகையின் இறுதியில் ஸலாம் கூறி முடிக்க வேண்டும்.

**عن أَبِي أُمَامَةَ بْنِ سَهْلٍ أَنَّهُ أَخْبَرَهُ رَجُلٌ مِنْ أَصْحَابِ النَّبِيِّ ﷺ أَنَّ السُّنَّةَ فِي الصَّلَاةِ عَلَى الْجِنَازَةِ أَنْ يُكَبِّرَ الْإِمَامُ ثُمَّ يَقْرَأُ بِفَاتِحَةِ الْكِتَابِ بَعْدَ التَّكْبِيرَةِ الْأُولَى سِرًّا فِي نَفْسِهِ ثُمَّ يُصَلِّي عَلَى النَّبِيِّ ﷺ وَيُخْلِصُ الدُّعَاءَ لِلْجِنَازَةِ فِي التَّكْبِيرَاتِ لَا يَقْرَأُ فِي شَيْءٍ مِنْهُنَّ ثُمَّ يُسَلِّمُ سِرًّا فِي نَفْسِهِ رواه البيهقي في السنن الكبرى برقم ٦٩٥٩**

301. அறிவிப்பாளர்: தல்ஹா இப்னு அப்துல்லாஹ் இப்னு அவ்ஃப் ﵁, நூல்: நசாயி, எண்: 1961

நபி ﷺ அவர்களுடைய தோழர்களில் ஒருவர் தமக்கு அறிவித்ததாக அபூ உமாமா இப்னு ஸஹ்ல் கூறுகிறார்: ஜனாஸா தொழுகையில் சுன்னா - நபிவழியாவது: இமாம் தக்பீர் கூறவேண்டும். பிறகு, முதல் தக்பீருக்கு பின்னர் சப்தமில்லாமல் ஃபாத்திஹா சூரா ஓத வேண்டும். பிறகு, மீதமுள்ள தக்பீர்களில் நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத் கூற வேண்டும். ஜனாஸாவிற்காக மனப்பூர்வமாக துஆ கேட்க வேண்டும். மற்ற தக்பீர்களில் ஓதுவது இல்லை. பிறகு, சப்தமில்லாமல் ஸலாம் கூறவேண்டும்.[302]

**عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ إِذَا صَلَّيْتُمْ عَلَى الْمَيِّتِ فَأَخْلِصُوا لَهُ الدُّعَاءَ رواه أبو داود برقم ٢٧٨٤**

ரஸூலுல்லாஹ் ﷺ கூறியதாக தான் செவியுற்றதாக அபூ ஹுரைரா رضي الله عنه கூறுகிறார்கள்: நீங்கள் ஒரு மய்யித்திற்கு ஜனாஸா தொழுதால் அவருக்காக மனத்தூய்மையுடன் துஆ கேளுங்கள்![303]

**عَنْ عَلِيٍّ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مِفْتَاحُ الصَّلَاةِ الطُّهُورُ وَتَحْرِيمُهَا التَّكْبِيرُ وَتَحْلِيلُهَا التَّسْلِيمُ رواه أبو داود برقم ٥٦**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: தொழுகையின் திறவுகோல் உளூ ஆகும். அதன் ஆரம்பம் தக்பீர் கூறுவதாகும். அதன் முடிவு ஸலாம் கொடுப்பதாகும்.[304]

7). இந்த ருக்னுகளை வரிசையாக செய்ய வேண்டும். இவற்றில் எதையும் முன், பின் மாற்றி செய்யக்கூடாது.

### 3). ஜனாஸா தொழுகையின் சுன்னத்துகள்

302. நூல்: அஸ்ஸுனன் அல்குப்ரா - பைஹக்கி 6959
303. நூல்: அபூ தாவூத், எண்: 2784
304. அறிவிப்பாளர்: அலி رضي الله عنه, நூல்: அபூ தாவூத், எண்: 56

1). முதல் தக்பீர் கூறும்போதும் மற்ற தக்பீர்கள் கூறும்போதும் இரு கைகளையும் உயர்த்த வேண்டும்.[305]

2). சூரா ஃபாத்திஹா ஓதுவதற்கு முன்பாக அவூது, பிஸ்மி கூற வேண்டும்.

3). துஆவில் தன்னையும் மற்ற எல்லா முஸ்லிம்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

4). மவுனமாக ஓத வேண்டும்.

**ஆறாவது சட்டவிளக்கம்**

# ஜனாஸா தொழுகையின் நேரம், சிறப்பு, மற்றும் அதன் முறை

## 1). ஜனாஸா தொழுகையின் நேரம்

மய்யித் (-இறந்தவர்) உள்ளூரில் இருந்தால் அதை குளிப்பாட்டி, கஃபன் அணிவித்து, அதை தயார் செய்துவிட்டால் அந்த மய்யித்திற்குரிய ஜனாஸா தொழுகையின் நேரம் வந்துவிட்டது.

மய்யித் வெளியூரில் இருந்தால் அவர் இறந்துவிட்ட செய்தி கிடைத்தவுடன் ஜனாஸா தொழுகை தொழலாம்.

## 2). ஜனாஸா தொழுகையின் சிறப்பு

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ مَنْ شَهِدَ الْجَنَازَةَ حَتّٰى يُصَلِّيَ فَلَهُ قِيرَاطٌ وَمَنْ شَهِدَ حَتّٰى تُدْفَنَ كَانَ لَهُ قِيرَاطَانِ قِيلَ وَمَا الْقِيرَاطَانِ قَالَ مِثْلُ الْجَبَلَيْنِ الْعَظِيمَيْنِ رواه البخاري برقم ١٣٢٥

305. தொழுகையில் ஒவ்வொரு தக்பீருடனும் நபி ﷺ அவர்கள் கைகளை உயர்த்தினார்கள் என்ற பொதுவான ஹதீஸிலிருந்து (ஹதீஸ் எண்: 851 இப்னு மாஜா) இந்த சட்டம் எடுக்கப்படுகிறது. இதுதான் அதிகமான அறிஞர்களின் கருத்து என்று திர்மிதி ﵀ கூறுகிறார்கள்.

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் ஜனாஸாவில் அதற்கு தொழுகை நடத்தப்படுகின்ற வரை கலந்துகொள்வாரோ அவருக்கு ஒரு கீராத் நன்மை உண்டு. யார் ஜனாஸா அடக்கம் செய்யப்படுகின்றவரை கலந்துகொள்வாரோ அவருக்கு இரண்டு கீராத் நன்மைகள் கிடைக்கும். இரண்டு கீராத் என்ன என்று (அபூ ஹுரைரா ؓ அவர்களிடம்) கேட்கப்பட்டது. அவர்கள் கூறினார்கள்: அது இரண்டு பெரிய மலைகளைப் போன்றாகும்.[306]

### 3). ஜனாஸா தொழுகையை நிறைவேற்றுகின்ற முறை

1). ஆண் மய்யித்தாக இருந்தால் தொழவைக்கக்கூடிய இமாம் அல்லது தனியாக தொழுபவர் அந்த மய்யித் உடைய தலைக்கு நேராக நிற்க வேண்டும். பெண் மய்யித்தாக இருந்தால் ஜனாஸாவின் நடுவில் நிற்க வேண்டும். இப்படித்தான் நபி ﷺ அவர்கள் நின்றார்கள்.

**عَنْ سَمُرَةَ بْنِ جُنْدُبٍ ؓ قَالَ صَلَّيْتُ وَرَاءَ النَّبِيِّ ﷺ عَلَى امْرَأَةٍ مَاتَتْ فِي نِفَاسِهَا فَقَامَ عَلَيْهَا لِلصَّلَاةِ وَسَطَهَا رواه أبو داود برقم ٢٧٨٠ ورواه مسلم برقم ٩٦٤**

சமுரா இப்னு ஜுன்துப் ؓ கூறுகிறார்கள்: தனது பிரசவ உதிரபோக்கில் இறந்துவிட்ட பெண்ணுக்கு நபி ﷺ அவர்கள் ஜனாஸா தொழுகை நடத்தினார்கள். நான் அவர்கள் பின்னால் தொழுதேன். நபி ﷺ அவர்கள் அந்த பெண்ணுக்கு நடுவில் தொழுகைக்காக நின்றார்கள்.[307]

**عَنْ نَافِعٍ أَبِي غَالِبٍ رحمه الله قَالَ كُنْتُ فِي سِكَّةِ الْمِرْبَدِ فَمَرَّتْ جَنَازَةٌ مَعَهَا نَاسٌ كَثِيرٌ قَالُوا جَنَازَةُ عَبْدِ اللهِ بْنِ عُمَيْرٍ فَتَبِعْتُهَا فَإِذَا أَنَا بِرَجُلٍ عَلَيْهِ كِسَاءٌ رَقِيقٌ عَلَى بُرَيْذِينَتِهِ وَعَلَى رَأْسِهِ خِرْقَةٌ تَقِيهِ مِنَ الشَّمْسِ فَقُلْتُ مَنْ**

306. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி, எண்: 1325
307. நூல்: அபூ தாவூத், எண்: 2780, நூல்: முஸ்லிம், எண்: 964

هٰذَا الدِّهْقَانُ قَالُوا هٰذَا أَنَسُ بْنُ مَالِكٍ فَلَمَّا وُضِعَتْ الْجَنَازَةُ قَامَ أَنَسٌ فَصَلَّى عَلَيْهَا وَأَنَا خَلْفَهُ لَا يَحُولُ بَيْنِي وَبَيْنَهُ شَيْءٌ فَقَامَ عِنْدَ رَأْسِهِ فَكَبَّرَ أَرْبَعَ تَكْبِيرَاتٍ لَمْ يُطِلْ وَلَمْ يُسْرِعْ ثُمَّ ذَهَبَ يَقْعُدُ فَقَالُوا يَا أَبَا حَمْزَةَ الْمَرْأَةُ الْأَنْصَارِيَّةُ فَقَرَّبُوهَا وَعَلَيْهَا نَعْشٌ أَخْضَرُ فَقَامَ عِنْدَ عَجِيزَتِهَا فَصَلَّى عَلَيْهَا نَحْوَ صَلَاتِهِ عَلَى الرَّجُلِ ثُمَّ جَلَسَ فَقَالَ الْعَلَاءُ بْنُ زِيَادٍ يَا أَبَا حَمْزَةَ هٰكَذَا كَانَ يَفْعَلُ رَسُولُ اللّٰهِ ﷺ يُصَلِّي عَلَى الْجَنَازَةِ كَصَلَاتِكَ يُكَبِّرُ عَلَيْهَا أَرْبَعًا وَيَقُومُ عِنْدَ رَأْسِ الرَّجُلِ وَعَجِيزَةِ الْمَرْأَةِ قَالَ نَعَمْ رواه أبو داود برقم ٢٧٧٩

நாஃபி இப்னு காலிப் ﵀ கூறுகிறார்: நான் மிர்பத் நகரத்தின் ஒரு தெருவில் இருந்தேன். ஒரு ஜனாஸா சென்றது. அதனுடன் அதிகமான மக்கள் இருந்தார்கள். இது அப்துல்லாஹ் இப்னு உமைர் ؓ உடைய ஜனாஸா என்று கூறினார்கள். நானும் அந்த ஜனாஸாவை பின்தொடர்ந்து சென்றேன். அப்போது நான் ஒருவரைப் பார்த்தேன். அவர்மீது மென்மையான ஒரு போர்வை இருந்தது. அவர் தனது சிறிய குதிரையின் மீது இருந்தார். அவர் தலை மீது வெயில் வெப்பத்தை விட்டு பாதுகாக்கின்ற ஒரு துண்டு துணி இருந்தது. இந்த வியாபாரி யார் என்று கேட்டேன். இவர்தான் அனஸ் இப்னு மாலிக் ؓ என்று மக்கள் பதில் கூறினார்கள். ஜனாஸா வைக்கப்பட்டபோது அனஸ் ؓ அவர்கள் அந்த ஜனாஸாவின் தலைக்கு அருகில் நின்று நான்கு தக்பீர்கள் கூறி, அதிகம் நீட்டாமலும், அவசரப்படாமலும் தொழுகை நடத்தினார்கள். பிறகு, (ஓர் ஓரத்தில்) உட்கார சென்றார்கள். அபூ ஹம்சா அவர்களே! அன்ஸாரி பெண் (உடைய ஜனாஸா) வந்துள்ளது என்று கூறினார்கள். அந்த பெண் ஜனாஸாவை நெருக்கமாக கொண்டுவந்து வைத்தார்கள். அந்த ஜனாஸாவின் மீது பச்சை நிற போர்வை போர்த்தப்பட்டு இருந்தது.

அனஸ் ﵁ அவர்கள் அந்த பெண்ணின் இடுப்புக்கு அருகில் நின்று அவருக்கு தொழுகை நடத்தினார்கள். பிறகு, அமர்ந்தார்கள். அலா இப்னு சியாத் கேட்டார்: "அபூ ஹம்சா அவர்களே! இப்படித்தான், நீங்கள் தொழுதது போன்றுதான் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஜனாஸாவிற்கு தொழுதார்களா? நான்கு தக்பீர் கூறி ஜனாஸா தொழுதார்களா? ஆண் ஜனாஸாவின் தலைக்கருகிலும் பெண் ஜனாசாவிற்கு இடுப்புக்கு அருகிலும் நின்றார்களா?" அதற்கு, அனஸ் ﵁ அவர்கள் "ஆம்" என்று பதில் கூறினார்கள்.[308]

2). பிறகு தொழுகையை ஆரம்பிப்பதற்காக தக்பீர் கூற வேண்டும். அவூது, பிஸ்மி கூற வேண்டும். இரவாக இருந்தாலும் சரி மவுனமாகத்தான் ஃபாத்திஹா சூரா (மற்றும் ஒரு சிறிய சூரா) ஓதவேண்டும்.

3). பிறகு தக்பீர் கூறி தொழுகையில் அத்தஹிய்யாத்தில் ஓதுவதைப் போன்று ஸலவாத் ஓத வேண்டும்.

4). பிறகு தக்பீர் கூறி மய்யித்திற்காக துஆ கேட்கவேண்டும்.

அந்த துஆக்கள் பின்வருமாறு

**اَللّٰهُمَّ اغْفِرْ لِحَيِّنَا وَمَيِّتِنَا وَصَغِيرِنَا وَكَبِيرِنَا وَذَكَرِنَا وَأُنْثَانَا وَشَاهِدِنَا وَغَائِبِنَا اَللّٰهُمَّ مَنْ أَحْيَيْتَهُ مِنَّا فَأَحْيِهِ عَلَى الْإِيمَانِ وَمَنْ تَوَفَّيْتَهُ مِنَّا فَتَوَفَّهُ عَلَى الْإِسْلَامِ اَللّٰهُمَّ لَا تَحْرِمْنَا أَجْرَهُ وَلَا تُضِلَّنَا بَعْدَهُ رواه أبو داود برقم ٢٧٨٦**

அல்லாஹ்வே! எங்களில் உயிருள்ளவருக்கும், எங்களில் இறந்தவருக்கும், எங்களில் சிறியவருக்கும், எங்களில் பெரியவருக்கும், எங்களில் ஆணுக்கும், எங்களில் பெண்ணுக்கும் எங்களுடன் இருப்பவருக்கும், எங்களை விட்டுத் தூரமாக இருப்பவருக்கும், மன்னிப்பு வழங்கு! அல்லாஹ்வே! எங்களில் எவருக்கு நீ வாழ்வு தருகிறாயோ அவரை ஈமானில் வாழ வை! எங்களில் நீ எவருக்கு

308. அறிவிப்பாளர்: நாஃபி இப்னு காலிப் ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 2779

மரணத்தைத் தருகிறாயோ அவருக்கு இஸ்லாமுடன் மரணத்தைத் தா! அல்லாஹ்வே! இவரின் நற்கூலியை நாங்கள் இழக்கும்படி செய்துவிடாதே! இவருக்குப் பின் எங்களை வழிகெடுத்து விடாதே![309]

اَللّٰهُمَّ اغْفِرْ لَهُ وَارْحَمْهُ وَعَافِهِ وَاعْفُ عَنْهُ وَأَكْرِمْ نُزُلَهُ وَوَسِّعْ مُدْخَلَهُ وَاغْسِلْهُ بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ وَنَقِّهِ مِنَ الْخَطَايَا كَمَا نَقَّيْتَ الثَّوْبَ الْأَبْيَضَ مِنَ الدَّنَسِ وَأَبْدِلْهُ دَارًا خَيْرًا مِنْ دَارِهِ وَأَهْلًا خَيْرًا مِنْ أَهْلِهِ وَزَوْجًا خَيْرًا مِنْ زَوْجِهِ وَأَدْخِلْهُ الْجَنَّةَ وَأَعِذْهُ مِنْ عَذَابِ الْقَبْرِ أَوْ مِنْ عَذَابِ النَّارِ رواه مسلم برقم ٩٦٣

அல்லாஹ்வே! இவருக்கு மன்னிப்பு வழங்கு! இவருக்கு கருணை காட்டு! இவரைப் பாதுகாத்துக் கொள்! இவரின் குற்றங்களை அழித்துவிடு! இவருக்கு கண்ணியமான விருந்தோம்பல் செய்! இவரை விசாலமான இடத்தில் தங்க வை! தண்ணீர், பனிக்கட்டி, மற்றும் ஆலங்கட்டியைக் கொண்டு இவரை நீ கழுவு! வெண்மையான ஆடையை அழுக்கைவிட்டு நீ தூய்மையாக்கியது போன்று குற்றங்களை விட்டு இவரை நீ தூய்மையாக்கு! இவரது இல்லத்தைவிட சிறந்த இல்லத்தை, இவருடைய குடும்பத்தைவிட சிறந்த குடும்பத்தை, இவரது மனைவியைவிட, சிறந்த மனைவியை இவருக்கு நீ கொடு! இவரைச் சொர்க்கத்தில் நுழைத்துவிடு! கப்ருடைய வேதனையை விட்டும் (நரகத்தின் வேதனையை விட்டும்) இவரை நீ பாதுகாத்துக்கொள்![310]

சிறு பிள்ளைகளின் மய்யித்தாக இருந்தால் பின்வரும் துஆவை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ اجْعَلْهُ لَنَا فَرَطاً وَّسَلَفًا وَّأَجْرًا

309. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: அபூ தாவூத், எண்: 2786
310. அறிவிப்பாளர்: அவ்ஃப் இப்னு மாலிக் ﵁, நூல்: முஸ்லிம், எண்: 963

அல்லாஹ்வே! இவரை ஃபரத், ஸலஃப் மற்றும் அஜ்ராக எங்களுக்கு ஆக்கி வை![311]

'ஃபரத்' என்றால், இவ்வுலகத்திலிருந்து நமக்கு முன் செல்லும் நன்மை, அதை நாம் மறுமையில் பெற்றுக் கொள்வோம். 'ஸலஃப்' என்றால், மறுமைக்காக நாம் செய்யும் நல்ல செயல்கள். 'அஜ்ர்' என்றால் நற்கூலி, நல்ல அமல்களுக்கு அல்லாஹ் வழங்கும் பிரதிபலன்.

5). பிறகு தக்பீர் கூறி சிறிது நேரம் மவுனமாக இருந்து வலது பக்கம் மட்டும் ஸலாம் கொடுப்பார். இரு புறமும் ஸலாம் கொடுத்தாலும் தவறில்லை. நான்காவது தக்பீருக்கு பிறகு ஏதாவது சில சிறிய துஆக்கள் ஓதினால் அதுவும் நல்லதுதான்.

اَللّٰهُمَّ لَا تَحْرِمْنَا أَجْرَهُ وَلَا تُضِلَّنَا بَعْدَهُ

அல்லாஹ்வே! இவரின் நற்கூலியை நாங்கள் இழக்கும்படி

311. அறிவிப்பாளர்: ஹசன் பசரி ﷺ, நூல்: முசன்னஃப் அப்துர் ரஸ்ஸாக், எண்: 6589, ஹதீஸ் முர்ஸல்.

மேற்கூறப்பட்ட துஆவுடன், பின்வரும் இந்த துஆவையும் ஓதலாம்.

اَللّٰهُمَّ أَعِذْهُ مِنْ عَذَابِ الْقَبْرِ اَللّٰهُمَّ اجْعَلْهُ فَرَطاً وَّذُخْرًا لِّوَالِدَيْهِ وَشَفِيْعًا مُّجَابًا اَللّٰهُمَّ ثَقِّلْ بِهِ مَوَازِيْنَهُمَا وَأَعْظِمْ بِهِ أُجُوْرَهُمَا وَأَلْحِقْهُ بِصَالِحِ الْمُؤْمِنِيْنَ وَاجْعَلْهُ فِيْ كَفَالَةِ إِبْرَاهِيْمَ وَقِهِ بِرَحْمَتِكَ عَذَابَ الْجَحِيْمِ وَأَبْدِلْهُ دَارًا خَيْرًا مِّنْ دَارِهِ وَأَهْلًا خَيْرًا مِّنْ أَهْلِهِ اَللّٰهُمَّ اغْفِرْ لِأَسْلَافِنَا وَأَفْرَاطِنَا وَمَنْ سَبَقَنَا بِالْإِيْمَانِ

"அல்லாஹ்வே இவரைக் கப்ருடைய வேதனையை விட்டு பாதுகாத்துக் கொள்! அல்லாஹ்வே இவரை, இவரது பெற்றோருக்கு முன்செல்லும் நன்மையாகவும், சேமிப்பாகவும், சிபாரிசு செய்பவராகவும், சிபாரிசு அங்கீகரிக்கப்பட்டவராகவும் ஆக்கி வை! அல்லாஹ்வே... இவர் மூலம் இவரது பெற்றோர்களின் தராசுகளைக் கனக்க வை! இவரைக் கொண்டு அவர்களது நன்மைகளை அதிகப்படுத்து! நல்ல முஃமின்களுடன் இவரைச் சேர்த்து வை! இவரை நபி இப்ராஹீமுடைய பராமரிப்பில் வை! உனது கருணையைக் கொண்டு நரக வேதனையைவிட்டும் இவரைப் பாதுகாத்துக் கொள்! இவருக்கு இவருடைய வீட்டைவிடச் சிறந்த வீட்டைத் தா! இவரது குடும்பத்தைவிடச் சிறந்த குடும்பத்தைத் தா! அல்லாஹ்வே... எங்களில் முன் சென்ற பெரியோரையும், சிறியோரையும், (ஈமானால்) நம்பிக்கையால் எங்களுக்கு முந்திச் சென்றோரையும் மன்னித்துவிடு!' (என்று கூறினால் அதுவும் மிக ஏற்றமானதே.) (அல்முக்னி)

செய்துவிடாதே! இவருக்குப் பின் எங்களை வழிகெடுத்து விடாதே!

இது போன்ற துஆக்களை ஓதலாம்.

**கவனிக்க:** ஒருவர் ஜனாஸா தொழுகையில் தாமதமாக கலந்து கொண்டால் இமாம் தொழுது முடித்து ஸலாம் கொடுத்தபின்னர் தனக்கு தவறிய தக்பீர்களை கூறி தனது தொழுகையை பூர்த்தி செய்வார்.

ஒருவருக்கு முற்றிலுமாக ஜனாஸா தொழுகை உடைய ஜமாஅத் தவறிவிட்டது. இந்த நிலையில் மய்யித் அடக்கம் செய்யப்படாமல் இருந்தால் அவர் தனியாக அந்த மய்யித்திற்கு முன்பு ஜனாஸா தொழுகை தொழுதுகொள்ளலாம். மய்யித் அடக்கம் செய்யப்பட்டு விட்டால் அடக்கம் செய்யப்பட்ட கப்ருக்கு அருகில் சென்று ஜனாஸா தொழுகையை அவர் தொழுதுகொள்ளலாம்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ امْرَأَةً سَوْدَاءَ كَانَتْ تَقُمُّ الْمَسْجِدَ أَوْ شَابًّا فَفَقَدَهَا رَسُولُ اللّٰهِ ﷺ فَسَأَلَ عَنْهَا أَوْ عَنْهُ فَقَالُوا مَاتَ قَالَ أَفَلَا كُنْتُمْ آذَنْتُمُونِي قَالَ فَكَأَنَّهُمْ صَغَّرُوا أَمْرَهَا أَوْ أَمْرَهُ فَقَالَ دُلُّونِي عَلَى قَبْرِهِ فَدَلُّوهُ فَصَلَّى عَلَيْهَا ثُمَّ قَالَ إِنَّ هٰذِهِ الْقُبُورَ مَمْلُوءَةٌ ظُلْمَةً عَلَى أَهْلِهَا وَإِنَّ اللّٰهَ عَزَّ وَجَلَّ يُنَوِّرُهَا لَهُمْ بِصَلَاتِي عَلَيْهِمْ رواه مسلم برقم ٩٥٦**

ஒரு கருப்பு நிற பெண் அல்லது ஒரு வாலிபர் மஸ்ஜிதை கூட்டி பெருக்கி சுத்தம் செய்பவராக இருந்தார். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அந்த பெண்ணை அல்லது அந்த வாலிபரை சில நாள்கள் பார்க்கவில்லை. அந்த பெண்ணை அல்லது அந்த வாலிபரைப் பற்றி நபி ﷺ அவர்கள் விசாரித்தார்கள். அவர் இறந்துவிட்டார் என்று மக்கள் கூறினார்கள். நபி ﷺ அவர்கள், எனக்கு நீங்கள் அறிவித்திருக்க வேண்டாமா என்று கூறினார்கள். அறிவிப்பாளர் கூறுகிறார்: மக்கள் அந்த பெண் உடைய விஷயத்தை அல்லது

அந்த வாலிபருடைய விஷயத்தை சிறிய விஷயமாக எடுத்துக் கொண்டார்கள். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அவருடைய கப்ரை எனக்கு காண்பித்துக் கொடுங்கள்! மக்கள் நபி ﷺ அவர்களுக்கு கப்ரை காண்பித்து கொடுத்தார்கள். நபி ﷺ அவர்கள் அவருக்கு ஜனாஸா தொழுகை தொழுதார்கள். பிறகு கூறினார்கள்; இந்த கப்ருகள் - மண்ணறைகள் அதில் உள்ளவர்களுக்கு இருள் நிறைந்ததாக இருக்கும். நான் அவர்களுக்கு தொழுவதால் (-துஆ செய்வதால்) அல்லாஹ் அவர்களுக்கு அந்த கப்ருகளை பிரகாசமாக்குவான்.[312]

வெளியூரில் ஒருவர் இறந்துவிட்டால் அவர் இறந்த செய்தி எப்போது கிடைக்கின்றதோ அப்போது அவருக்காக ஜனாஸா தொழுகை தொழுதுகொள்ளலாம், ஒரு மாதம் ஆனாலும் சரி, அல்லது அதைவிட அதிகமாக ஆனாலும் சரி!

நான்கு அல்லது அதைவிட அதிகமான மாதங்கள் பூர்த்தி அடைந்த நிலையில் ஒரு குழந்தை இறந்து பிறந்துவிட்டால் அந்த குழந்தைக்கு ஜனாஸா தொழுகை நடத்த வேண்டும்.

அதைவிட குறைவாக இருந்தால் அதற்கு ஜனாஸா தொழுகை தொழவைக்கப்படாது.

**ஏழாவது சட்டவிளக்கம்**

## ஜனாஸாவை சுமந்து செல்வது

ஜனாஸாவை தூக்குவதும் அதனுடன் அது அடக்கம் செய்யப்படுகின்ற அடக்கஸ்தலம் வரை செல்வதும் சுன்னா - நபிவழியாகும். இதற்கு அதிகமான நன்மைகள் உள்ளன.

عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ شَهِدَ الْجَنَازَةَ حَتَّى يُصَلِّيَ فَلَهُ قِيرَاطٌ وَمَنْ شَهِدَ حَتَّى تُدْفَنَ كَانَ لَهُ قِيرَاطَانِ قِيلَ وَمَا الْقِيرَاطَانِ قَالَ مِثْلُ الْجَبَلَيْنِ الْعَظِيمَيْنِ رواه البخاري برقم ١٣٢٥

---

312. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 956

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் ஜனாஸாவில் அதற்கு தொழுகை நடத்தப்படுகின்ற வரை கலந்துகொள்வாரோ அவருக்கு ஒரு கீராத் நன்மை உண்டு. யார் ஜனாஸா அடக்கம் செய்யப்படுகின்றவரை கலந்துகொள்வாரோ அவருக்கு இரண்டு கீராத் நன்மைகள் கிடைக்கும். இரண்டு கீராத் என்ன என்று (அபூ ஹுரைரா ؓ அவர்களிடம்) கேட்கப்பட்டது. அவர்கள் கூறினார்கள்: அது இரண்டு பெரிய மலைகளைப் போன்றாகும்.[313]

ஒருவரின் இறப்பு செய்தியை செவியுற்றவுடன் அவரின் ஜனாஸாவை சுமப்பதற்கும், அவருக்கு ஜனாஸா தொழுகை தொழுவதற்கும் அவரை அடக்கம் செய்வதற்கும் ஒரு முஸ்லிம் விரைந்து செல்ல வேண்டும்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ؓ قَالَ سَمِعْتُ رَسُولَ اللّٰهِ ﷺ يَقُولُ حَقُّ الْمُسْلِمِ عَلَى الْمُسْلِمِ خَمْسٌ رَدُّ السَّلَامِ وَعِيَادَةُ الْمَرِيضِ وَاتِّبَاعُ الْجَنَائِزِ وَإِجَابَةُ الدَّعْوَةِ وَتَشْمِيتُ الْعَاطِسِ رواه البخاري برقم ١٢٤٠**

அபூ ஹுரைரா ؓ அறிவிக்கின்றார்கள்: முஸ்லிம்கள் மீது முஸ்லிம்களுடைய கடமை ஐந்து இருக்கின்றன. அவை,

1. ஸலாமுக்கு பதில் சொல்வது,
2. நோயாளியை நலம் விசாரிப்பது,
3. ஜனாஸாக்களை பின்தொடர்ந்து செல்வது,
4. விருந்தின் அழைப்பை ஏற்றுக்கொள்வது,
5. தும்மியவர் அல்ஹம்து லில்லாஹ் கூறினால் அதற்கு பதில் கூறுவதாகும்.[314]

---

313. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி, எண்: 1325
314. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: புகாரி, எண்: 1240

குறிப்பாக, அந்த ஜனாஸாவை சுமப்பதற்கு யாரும் இல்லையென்றால் கண்டிப்பாக தான் அந்த ஜனாஸாவில் கலந்துகொண்டு அதற்குரிய கடமையை செய்ய வேண்டும்.

அவசியத் தேவை ஏற்பட்டால் ஜனாஸாவை வாகனத்தில் சுமந்து செல்வது தவறில்லை. அதுவும் குறிப்பாக, அடக்கஸ்தளம் மிகவும் தூரமாக இருந்தால் வாகனங்களில் எடுத்துச் செல்வது குற்றமாகாது.

இறந்தவர்களை அடக்கம் செய்வதற்காக உள்ள மக்பரா - அடக்கஸ் தளங்களில் மட்டும் இறந்தவர்களை அடக்கம் செய்ய வேண்டும். நபி ﷺ அவர்கள் தங்கள் காலத்தில் இறந்தவர்களை பக்கீஃ என்ற மக்பராவில்தான் அடக்கம் செய்தார்கள் என்று அதிகமான அறிவிப்புகள் வந்துள்ளன. ஸலஃப் - சான்றோர்களில் எவரும் பொதுவான அடக்கஸ்தளம் அல்லாத வேறு ஓர் இடத்தில் அடக்கம் செய்யப்பட்டதாக எவ்வித ஆதாரமும் இல்லை.

ஜனாஸாவை குளிப்பாட்டுவது, கஃபன் இடுவது, தொழவைப்பது, அடக்கம் செய்வது என அனைத்தையும் விரைவாக செய்ய வேண்டும்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ أَسْرِعُوا بِالْجِنَازَةِ فَإِنْ تَكُ صَالِحَةً فَخَيْرٌ تُقَدِّمُونَهَا وَإِنْ يَكُ سِوَى ذَلِكَ فَشَرٌّ تَضَعُونَهُ عَنْ رِقَابِكُمْ رواه البخاري برقم ١٣١٥**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: ஜனாஸாவின் கடமைகளை தீவிரமாக செய்யுங்கள்! அது (நல்லமல் செய்த) நல்ல ஜனாஸாவாக இருந்தால் அதற்குரிய நன்மைக்குத்தான் அதை முற்படுத்துகின்றீர்கள்! அது வேறு ஏதும் ஒன்றாக இருந்தால் அது ஒரு கெட்டதாகும், அதை உங்கள் பிடரிகளில் இருந்து நீங்கள் (சீக்கிரமாக கீழே இறக்கி) வைக்கப் போகிறீர்கள்.[315]

315. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரலி, நூல்: புகாரி, எண்: 1315

ஜனாஸாவை அடக்கம் செய்வதில் காலதாமதம் செய்வது நபிவழிக்கு மாற்றமாகும். ஓர் இடத்தில் இருந்து இன்னொரு இடத்திற்கு ஜனாஸாவை எடுத்து செல்வதும் நபிவழிக்கு மாற்றமாகும்.

ஜனாஸாவை சுமந்து செல்லும்போது விரைவாக செல்வது விரும்பத்தக்க செயலாகும். ஆனால், அதிவிரைவாக செல்வது விரும்பத்தக்கதல்ல.

அமைதியாகவும் அடக்கமாகவும் கண்ணியத்துடனும் கத்தாமலும் எந்த ஒரு வார்த்தைகளையும் சப்தமிட்டு கூறாமலும் சுமந்து செல்ல வேண்டும். சப்தமிட்டு திக்ரு செய்வது, அல்லது சப்தமிட்டு ஓதுவது கூடாது. நபி ﷺ அவர்கள் இப்படி செய்ததில்லை. யார் இவ்வாறு செய்வாரோ அவர் நபிவழிக்கு மாற்றமாக செய்கிறார்.

**பெண்கள் ஜனாஸாவுடன் செல்வது கூடாது.**

**عَنْ أُمِّ عَطِيَّةَ رضي الله عنها قَالَتْ نُهِينَا عَنِ اتِّبَاعِ الْجَنَائِزِ وَلَمْ يُعْزَمْ عَلَيْنَا رواه البخاري برقم ١٢٧٨**

உம்மு அத்தியா رضي الله عنها கூறுகிறார்கள்: ஜனாஸாவை பின்தொடர்ந்து செல்வதிலிருந்து நாங்கள் தடுக்கப்பட்டோம். ஆனால், அதுகுறித்து வலியுறுத்தி தடுக்கப்படவில்லை.[316]

ஜனாஸாவை தூக்குவதும் அதை எடுத்துச் செல்வதும் ஆண்களின் பணியாகும். ஜனாஸாவுடன் செல்பவர் ஜனாஸா பூமியில் வைக்கப்படுவதற்கு முன்னர் தான் உட்காரக்கூடாது. அது வெறுக்கப்பட்ட செயலாகும்.

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ إِذَا رَأَيْتُمْ الْجَنَازَةَ فَقُومُوا فَمَنْ تَبِعَهَا فَلَا يَقْعُدْ حَتَّى تُوضَعَ رواه البخاري برقم ١٣١٠**

316. அறிவிப்பாளர்: உம்மு அத்தியா رضي الله عنها, நூல்: புகாரி, எண்: 1278

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: நீங்கள் ஜனாஸாவைப் பார்த்தால் எழுந்து நில்லுங்கள்! யார் அந்த ஜனாஸாவை பின்தொடர்ந்து செல்வாரோ, அந்த ஜனாஸா வைக்கப்படுகின்ற வரை அவர் உட்கார வேண்டாம்.[317]

**எட்டாவது சட்டவிளக்கம்**

## மய்யித்தை அடக்கம் செய்வது, கப்ருடைய அமைப்பு, மற்றும் அதில் உள்ள சுன்னத்துகள்.

கப்ரு ஆழமாக தோண்டப்பட வேண்டும். விசாலமாக இருக்க வேண்டும். கப்ருக்குள் கிப்லாவின் திசையில் பக்கவாட்டில் ஒரு பகுதி தோண்ட வேண்டும். அப்படி முடியவில்லை என்றால் கப்ருக்கு நடுவில் மய்யித்துடைய அளவிற்கு ஒரு குழி தோண்ட வேண்டும். நடுக்குழி தோண்டுவதை விட பக்கவாட்டில் தோண்டுவதுதான் சிறப்பாகும்.

**عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنه قَالَ قَالَ النَّبِيُّ ﷺ اللَّحْدُ لَنَا وَالشَّقُّ لِغَيْرِنَا رواه الترمذي برقم ٩٦٦**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: பக்கவாட்டில் தோண்டுவது நமக்குள்ளதாகும். நடுவில் தோண்டுவது மற்றவர்களுக்காகும்.[318]

குழியின் பக்கவாட்டில் உள்ளப் பகுதியில் மய்யித்தை அதன் வலது பக்கத்தில் கிப்லாவை முன்னோக்கி வைக்க வேண்டும். அந்த பக்கவாட்டு பகுதியை கல்லைக்கொண்டும் களிமண்ணைக்கொண்டும் அடைக்க வேண்டும். பிறகு குழியில் மண்ணை அள்ளிப்போட வேண்டும். பூமியின் மட்டத்தை விட ஒரு ஜான் உயரம் ஒட்டகத்திமிலைப் போன்று கப்ரை உயர்த்தி வைக்க வேண்டும்.

இவ்வாறுதான் நபி ﷺ அவர்களுடைய கப்ரும் அவர்களின் இரு தோழர்களின் கப்ரும் அமைக்கப்பட்டுள்ளது.

---

317. அறிவிப்பாளர்: அபூ சயீது அல்குத்ரி رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1310
318. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنه, நூல்: திர்மிதி, எண்: 966

இதன் மூலம் கப்ரு இருப்பதை அறியமுடியும்; மக்கள் அதை கவனித்துச் செல்வார்கள்; அவமரியாதை செய்யப்படுவதிலிருந்து கப்ர் பாதுகாக்கப்படும்.

கப்ரை சுற்றி சிறு கற்களை வரிசையாக வைப்பது தவறில்லை. அதன் மூலம் கப்ரின் சுற்றளவை அறிந்துகொள்ள முடியும். ஆனால், கப்ருக்கு மேல் கட்டிடம் கட்டுவதும் கப்ரை சுண்ணாம்பால் பூசுவதும் கப்ரின் மீது அமர்வதும் ஹராம் -தடுக்கப்பட்ட செயலாகும்.

**கப்ருகளுக்கு மேல் எழுதுவது வெறுக்கப்பட்ட செயலாகும்**

عَنْ جَابِرٍ ﷺ قَالَ نَهَى رَسُولُ اللهِ ﷺ أَنْ يُجَصَّصَ الْقَبْرُ وَأَنْ يُقْعَدَ عَلَيْهِ وَأَنْ يُبْنَى عَلَيْهِ رواه مسلم برقم ٩٧٠

கப்ருகள் சுண்ணாம்புகளால் பூசப்படுவதையும் அவற்றின் மீது உட்காருவதையும் அவற்றின் மீது (-அவற்றை சுற்றி) கட்டிடம் கட்டப்படுவதையும் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தடுத்தார்கள்.[319]

இமாம் திர்மிதி ﵀ அவர்கள் மேற்கூறப்பட்ட நபிமொழியை பின்வருமாறு அறிவிக்கின்றார்கள்:

عَنْ جَابِرٍ ﷺ قَالَ نَهَى النَّبِيُّ ﷺ أَنْ تُجَصَّصَ الْقُبُورُ وَأَنْ يُكْتَبَ عَلَيْهَا وَأَنْ يُبْنَى عَلَيْهَا وَأَنْ تُوطَأَ رواه الترمذي برقم

கப்ருகள் சுண்ணாம்புகளால் பூசப்படுவதையும் அவற்றின் மீது எழுதுவதையும் அவற்றின் மீது (-அவற்றை சுற்றி) கட்டிடம் கட்டப்படுவதையும் இன்னும் அவை மிதிக்கப்படுவதையும் நபி ﷺ அவர்கள் தடுத்தார்கள்.[320]

இவ்வாறான செயல்கள் ஷிர்க் -இணைவைத்தலுக்கு வழிவகுத்து

319. அறிவிப்பாளர்: ஜாபிர் ؓ, நூல்: முஸ்லிம், எண்: 970
320. அறிவிப்பாளர்: ஜாபிர் ؓ, நூல்: திர்மிதி, எண்: 972

விடும். பொதுமக்கள் கப்ருகளின் மீது அளவு கடந்து மரியாதை செய்ய ஆரம்பிப்பார்கள். அந்த கப்ருகள் மீது நாட்டம் கொள்ள ஆரம்பித்து விடுவார்கள். இது போன்ற செயல்கள்தான் மக்கள் ஏமாறுவதற்கும் கப்ருகள் மீது ஆழ்ந்த பற்று வைப்பதற்கும் காரணங்களாக ஆகிவிடுன்றன.

கப்ருகள் மீது நடப்பது, அவற்றின் மீது உட்காருவது இன்னும் அவற்றுக்கு அருகில் தொழுவது வெறுக்கப்பட்ட செயல்களாகும்.

**عَنْ أَبِي مَرْثَدٍ ﵁ الْغَنَوِيِّ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ لَا تَجْلِسُوا عَلَى الْقُبُورِ وَلَا تُصَلُّوا إِلَيْهَا رواه الترمذي برقم ٩٧٢**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: கப்ருகள் மீது உட்காராதீர்கள்! அவற்றுக்கு அருகில் தொழாதீர்கள்! (அல்லது அவற்றை முன்னோக்கி தொழாதீர்கள்!)[321]

கப்ருகளில் விளக்குகள் எரிப்பதும் அவற்றை உள்ளடக்கி மஸ்ஜிது கட்டுவதும் கப்ருக்கு அருகில் தொழுவதும் அல்லது கப்ரை முன்னோக்கி தொழுவதும் ஹராம் -தடுக்கப்பட்ட செயல்களாகும்.

விளக்குகள் எரிப்பது மாற்றார்களின் பழக்கமாகும். இதில் செல்வத்தை விரயம் செய்வதும் இருக்கின்றது.

**عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ قَالَ رَسُولُ اللهِ ﷺ فِي مَرَضِهِ الَّذِي لَمْ يَقُمْ مِنْهُ لَعَنَ اللهُ الْيَهُودَ وَالنَّصَارَى اتَّخَذُوا قُبُورَ أَنْبِيَائِهِمْ مَسَاجِدَ لَوْلَا ذٰلِكَ أُبْرِزَ قَبْرُهُ غَيْرَ أَنَّهُ خَشِيَ أَنْ يُتَّخَذَ مَسْجِدًا رواه البخاري برقم ١٣٩٠**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தாம் நோய்வாய்பட்ட இறுதி தருணத்தில் கூறினார்கள்: யூதர்களையும் கிறிஸ்தவர்களையும்

321. ஜனாஸா தொழுகை தவறவிட்டவர்கள் மட்டும் கப்ருக்கு அருகில் ஜனாஸா தொழுகையை நிறைவேற்றலாம். பார்க்க: பக்கம் 245

அல்லாஹ் சபிப்பானாக! அவர்கள் தங்கள் நபிமார்களின் கப்ருகளை மஸ்ஜிதுகளாக மாற்றிக்கொண்டார்கள். பிறகு, ஆயிஷா ﵂ அவர்கள் கூறினார்கள்: இது மட்டும் இல்லையென்றால் நபி ﷺ அவர்களுடைய கப்ரு மக்கள் பார்க்கும்படி அமைக்கப்பட்டிருக்கும். என்றாலும், தனது கப்ரு மஸ்ஜிதாக மாற்றப்படுவதை நபி ﷺ அவர்கள் பயந்தார்கள்.[322]

கப்ருகளுக்கு மேல் நடந்து செல்வது, அவற்றுக்கு மேல் உட்காருவது, அவற்றை செருப்புக் கால்களோடு மிதிப்பது இவை எல்லாம் ஹராம் - தடுக்கப்பட்ட பாவமான செயல்களாகும்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَأَنْ يَجْلِسَ أَحَدُكُمْ عَلَى جَمْرَةٍ فَتُحْرِقَ ثِيَابَهُ فَتَخْلُصَ إِلَى جِلْدِهِ خَيْرٌ لَهُ مِنْ أَنْ يَجْلِسَ عَلَى قَبْرٍ رواه مسلم برقم ٩٧١**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் ஒரு நெருப்பு கங்கின் மீது அமர்ந்து அது அவருடைய ஆடையை எரித்து, அவருடைய தோல்வரை வந்துவிடுவது, அவர் ஒரு கப்ரின் மீது அமர்வதை விட அவருக்கு சிறந்ததாகும்.[323]

மய்யித்தை அடக்கம் செய்த பின்னர் அதற்காக துஆ கேட்பது விரும்பத்தக்க செயலாகும். நபி ﷺ அவர்கள் அவ்வாறு செய்திருக்கின்றார்கள்.[324]

**عَنْ عُثْمَانَ بْنِ عَفَّانَ ﵁ قَالَ كَانَ النَّبِيُّ ﷺ إِذَا فَرَغَ مِنْ دَفْنِ الْمَيِّتِ وَقَفَ عَلَيْهِ فَقَالَ اسْتَغْفِرُوا لِأَخِيكُمْ وَسَلُوا لَهُ بِالتَّثْبِيتِ فَإِنَّهُ الْآنَ يُسْأَلُ رواه أبو داود ٢٨٠٤**

322. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: புகாரி, எண்: 1390

323. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 971

324. அதாவது, ஒவ்வொருவரும் தனித்தனியாக துஆ கேட்க வேண்டும். ஒருவர் துஆ கேட்க மற்றவர்கள் ஆமீன் சொல்வது நபிவழியல்ல.

மய்யித்தை அடக்கம் செய்து முடித்துவிட்டால் கப்ருக்கு அருகில் நபி ﷺ அவர்கள் நின்று விடுவார்கள். மேலும், கூறுவார்கள்: உங்கள் சகோதரருக்காக பாவமன்னிப்புக் கேளுங்கள்! அல்லாஹ் அவரை உறுதிப்படுத்துமாறு அல்லாஹ்விடம் வேண்டுங்கள்! நிச்சயமாக அவர் இப்போது கேள்வி கேட்கப்படுகின்றார்.[325]

கப்ருக்கு அருகில் நின்றுகொண்டு ஃபாத்திஹா ஓதுவது, அல்லது குர்ஆனில் எதையும் ஓதுவது பித்அத் வெறுக்கப்பட்ட அனாச்சாரமாகும். இவை நபி ﷺ அவர்களும் அவர்களுடைய தோழர்களும் செய்யாத புதுமையான செயல்களாகும்.

**عَنْ عَائِشَةَ رضي الله عنها أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ مَنْ عَمِلَ عَمَلًا لَيْسَ عَلَيْهِ أَمْرُنَا فَهُوَ رَدٌّ رواه مسلم برقم ١٧١٨**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் நாம் கட்டளையிடாத (-நாம் அங்கீகரிக்காத) ஒரு செயலை செய்வாரோ அது மறுக்கப்பட்டதாகும்.[326]

**ஒன்பதாவது சட்டவிளக்கம்**

## تعزية - தஃஸியா ஆறுதல் கூறுவது

இறந்தவரின் வீட்டாருக்கு **تعزية** - தஃஸியா ஆறுதல் கூறுவதுடைய சட்டமும் அதன் முறையும்.

தஃஸியா என்றால் சோதனைக்கு ஆளானவர்களை சந்தித்து அவர்களுக்கு ஆறுதல் கூறுவதும், அவர்களுக்கு மன உறுதியைத் தரும்படியான நல்ல வார்த்தைகளை கூறுவதுமாகும்.

ஒரு வீட்டில் மரணம் நிகழ்ந்துவிட்டால் அந்த வீட்டில் உள்ளவர்கள் கவலையிலும் துக்கத்திலும் இருப்பார்கள். அவர்களை சந்தித்து

325. அறிவிப்பாளர்: உஸ்மான் இப்னு அஃப்பான் رضي الله عنه, நூல்: அபூ தாவூத், எண்: 2804
326. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: முஸ்லிம், எண்: 1718

அவர்களுக்காக நல்ல துஆக்கள் கேட்கவேண்டும். பொறுமையாக இருப்பதிலும் சோதனைகளை தாங்கிக்கொண்டு நன்மைகளை ஆதரவு வைப்பதிலும் உள்ள சிறப்புகளை விளக்குகின்ற குர்ஆன் வசனங்களையும் நபிமொழிகளையும் அவர்களுக்கு நினைவூட்ட வேண்டும். அல்லாஹ்வின் விதியை பொருந்திக்கொள்ளும்படியான மன நிலையை அவர்களுக்கு ஏற்படுத்த வேண்டும்.

இந்தளவு செய்வதற்கு ஒருவருக்கு கல்வி ஞானம் இல்லை என்றால் அவருக்கு தெரிந்த நல்ல அழகான வார்த்தைகளை கூறி அவர்களுக்கு ஆறுதல் கூற வேண்டும். அப்போது மார்க்கத்தை மீறி ஏதும் கூறிவிடக்கூடாது; மார்க்கத்திற்கு முரணான எந்த வார்த்தைகளையும் உபயோகித்து விடக்கூடாது.

**عَنْ أُسَامَةَ بْنِ زَيْدٍ ﵄ قَالَ كُنَّا عِنْدَ النَّبِيِّ ﷺ إِذْ جَاءَهُ رَسُولُ إِحْدَى بَنَاتِهِ يَدْعُوهُ إِلَى ابْنِهَا فِي الْمَوْتِ فَقَالَ النَّبِيُّ ﷺ ارْجِعْ إِلَيْهَا فَأَخْبِرْهَا أَنَّ لِلَّهِ مَا أَخَذَ وَلَهُ مَا أَعْطَى وَكُلُّ شَيْءٍ عِنْدَهُ بِأَجَلٍ مُسَمًّى فَمُرْهَا فَلْتَصْبِرْ وَلْتَحْتَسِبْ رواه البخاري برقم ٧٣٧٧**

உஸாமா இப்னு ஸைது ﵄ கூறுகிறார்கள்: நாங்கள் நபி ﷺ அவர்களுடன் இருந்தோம். அப்போது நபி ﷺ அவர்களுடைய மகள்களில் ஒருவருடைய தூதுவர் நபி ﷺ அவர்களிடம் வந்தார். அவர் நபி ﷺ அவர்களை அந்த மகளின் மகனை காண்பதற்கு அழைத்தார். அந்த மகன் மரணத் தருவாயில் இருந்தார். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: நீர் அந்த மகளிடம் திரும்பச் செல்வீராக! அவருக்கு சொல்வீராக! “நிச்சயமாக அல்லாஹ்விற்கே உரியது, அவன் எடுத்ததெல்லாம். அவனுக்கே உரியது, அவன் கொடுத்ததெல்லாம். எல்லாம் அவனிடம் குறிப்பிட்ட ஒரு தவணையில் நடக்கின்றது. ஆகவே, “அவர் (-மகள்) பொறுமையாக இருக்கட்டும், நன்மையை ஆதரவு வைக்கட்டும்!” என்று அவருக்கு கூறுவீராக![327]

327. நூல்: புகாரி, எண்: 7377

இந்த நபிமொழியில் கூறப்பட்ட வார்த்தைகள் ஆறுதல் கூறுவதற்கு மிகப் பொருத்தமான அழகிய வார்த்தைகளாகும்.

ஆறுதல் கூறும்போது மார்க்கத்தில் எவ்வித ஆதாரமுமற்ற காரியங்களை செய்வதும், சொல்வதும் கூடாது. இன்று மக்களுக்கு மத்தியில் பல அனாச்சாரங்கள் பரவிக்கிடக்கின்றன. அவற்றை கண்டிப்பாக தவிர்க்க வேண்டும்.

அவற்றில் சில:

1). அதற்காக ஒரு சபையை ஏற்பாடு செய்வது, அங்கு விளக்குகள் ஏற்றி, நாற்காலிகள் போட்டு, குர்ஆன் ஓதுபவர்களை வரவழைத்து குர்ஆன் ஓத ஏற்பாடு செய்வது.

2). ஆறுதல் கூற வருபவர்களுக்காக இறந்தவரின் வீட்டார்கள் விருந்து ஏற்பாடு செய்வது.

عَنْ جَرِيرِ بْنِ عَبْدِ اللهِ الْبَجَلِيِّ ﷺ قَالَ كُنَّا نَرَى الِاجْتِمَاعَ إِلَى أَهْلِ الْمَيِّتِ وَصَنْعَةَ الطَّعَامِ مِنْ النِّيَاحَةِ رواه ابن ماجة برقم ١٦٠١

ஜரீர் இப்னு அப்துல்லாஹ் அல்பஜலி ﷺ கூறுகிறார்கள்: இறந்தவரின் குடும்பத்தாரிடம் சென்று அங்கு ஒன்று கூடுவதையும், அங்கு உணவு செய்யப்படுவதையும் ஒப்பாரி வைப்பதை சேர்ந்த செயல்களாகவே நாங்கள் கருதி வந்தோம்.[328]

3). ஒருமுறைக்கு மேலாக சென்று ஆறுதல் கூறுவது.

ஆறுதல் கூறுவதற்காக சிலர் பலமுறை செல்கின்ற வழக்கம் உள்ளவர்களாக இருக்கின்றனர். ஒருமுறை சென்று ஆறுதல் கூறுவதற்குத்தான் ஆதாரம் உள்ளது.

ஆனால், பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆறுதலும் உபதேசமும் நினைவூட்டலும் தேவைப்பட்டால் ஒன்றுக்கு மேல் பல முறை சென்று

328. நூல்: இப்னு மாஜா, எண்: 1601

ஆறுதல் கூறுவது குற்றமல்ல. ஆறுதல் கூறுகிறேன் என்ற பெயரில் வேறு நோக்கங்களுக்காக பல முறை இறந்தவரின் உறவினர்களிடம் செல்வது பொருத்தமான செயல் அல்ல. நபி ﷺ அவர்களும் அப்படி செய்யவில்லை. அவர்களுடைய தோழர்களும் செய்யவில்லை.

சுன்னா - நபிவழி என்னவென்றால் இறந்தவரின் குடும்பத்தாருக்காக அவருடைய உறவினர்களும் அண்டை வீட்டார்களும்தான் உணவு ஏற்பாடு செய்யவேண்டும்.*

**عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ جَعْفَرٍ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ اصْنَعُوا لِآلِ جَعْفَرٍ طَعَامًا فَإِنَّهُ قَدْ أَتَاهُمْ أَمْرٌ شَغَلَهُمْ رواه أبو داود برقم ٢٧٢٥**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஜஅஃபரின் குடும்பத்தாருக்கு உணவு செய்து அனுப்புங்கள்! ஏனெனில், அவர்களுக்கு இப்போது அவர்களின் கவனத்தை திருப்பக்கூடிய செய்தி வந்துவிட்டது.[329]

இறந்தவரை நினைத்து கவலைப்படுவது அல்லது ஒப்பாரி இல்லாமல் கண் கலங்கி அழுவது தவறு இல்லை. இயல்பாக அழுகை வந்தால் அது குற்றமாகாது. வேண்டுமென்று அழுகையை வரவழைத்து வலுக்கட்டாயமாக அழுவது தடுக்கப்பட்டதாகும்.

**عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رضي الله عنه قَالَ دَخَلْنَا مَعَ رَسُولِ اللّٰهِ ﷺ عَلَى أَبِي سَيْفٍ الْقَيْنِ وَكَانَ ظِئْرًا لِإِبْرَاهِيمَ عَلَيْهِ السَّلَام فَأَخَذَ رَسُولُ اللّٰهِ ﷺ إِبْرَاهِيمَ فَقَبَّلَهُ وَشَمَّهُ ثُمَّ دَخَلْنَا عَلَيْهِ بَعْدَ ذٰلِكَ وَإِبْرَاهِيمُ يَجُودُ بِنَفْسِهِ فَجَعَلَتْ عَيْنَا رَسُولِ اللّٰهِ ﷺ تَذْرِفَانِ فَقَالَ لَهُ عَبْدُ الرَّحْمَنِ بْنُ عَوْفٍ رضي الله عنه وَأَنْتَ**

329. ஜஃபர் அவர்களின் மகனார் அப்துல்லாஹ் رضي الله عنه, நூல்: அபூ தாவூத், எண்: 2725 (அதாவது, ஜஅஃபர் அவர்களின் மரண செய்தி வந்ததை நபி ﷺ அவர்கள் இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்.)

يَا رَسُولَ اللهِ فَقَالَ يَا ابْنَ عَوْفٍ إِنَّهَا رَحْمَةٌ ثُمَّ أَتْبَعَهَا بِأُخْرَى فَقَالَ ﷺ إِنَّ الْعَيْنَ تَدْمَعُ وَالْقَلْبَ يَحْزَنُ وَلَا نَقُولُ إِلَّا مَا يَرْضَى رَبُّنَا وَإِنَّا بِفِرَاقِكَ يَا إِبْرَاهِيمُ لَمَحْزُونُونَ رواه البخاري برقم ١٣٠٣

அனஸ் இப்னு மாலிக் ؓ கூறுகிறார்கள்: நாங்கள் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடன் இரும்பு வேலை செய்யக்கூடிய அபூ சைஃப் என்ற கொல்லனிடம் சென்றோம். அங்குதான் நபி ﷺ அவர்களின் மகனார் இப்ராஹீம் பால்குடித்துக் கொண்டிருந்தார். அவர் இப்ராஹீமுடைய பால்குடி தந்தை ஆவார். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இப்ராஹீமை தூக்கி முத்தமிட்டு முகர்ந்தார்கள். பிறகு, நாங்கள் அங்கு உள்ளே நுழைந்தோம். இப்ராஹீம் உடைய உயிர் பிரிந்துகொண்டிருந்தது. ரஸூலுல்லாஹ் உடைய இரு கண்களும் கண்ணீர் சிந்த ஆரம்பித்தன. அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ؓ கேட்டார், "அல்லாஹ்வின் தூதரே! நீங்களா (அழுகின்றீர்கள்)? நபி ﷺ அவர்கள் பதில் கூறினார்கள்: அவ்ஃப் உடைய மகனாரே! நிச்சயமாக இது இரக்கமாகும். (-இரக்கத்தால் வரக்கூடிய அழுகையாகும்.) அப்துர் ரஹ்மான் மேலும் ஏதோ கூறினார்: அதற்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "நிச்சயமாக கண் கலங்குகிறது. உள்ளம் கவலைப்படுகின்றது. ஆனால், எங்கள் இறைவன் விரும்பாததை நாங்கள் கூற மாட்டோம். (பிறகு, தனது மகனைப் பார்த்துக் கூறினார்கள்:) இப்ராஹீமே! உமது பிரிவால் நிச்சயமாக நாங்கள் கவலையில் இருக்கின்றோம்."[330]

அழுகையும் கவலையும் அல்லாஹ்வின் விதியின் மீது அதிருப்தியை வெளிப்படுத்தும் விதமாக இருக்கக்கூடாது; அல்லாஹ்வை குறை கூறுவதாக இருக்கக்கூடாது.

ஒப்பாரி வைப்பதும் ஒப்பாரி வைக்கத் தூண்டுவதும் கன்னங்களில் அடித்துக் கொள்வதும் சட்டைகளைக் கிழித்துக்கொள்வதும் ஹராம் - பாவமான செயல்களாகும்.

330. நூல்: புகாரி, எண்: 1303

عَنْ عَبْدِ اللّٰهِ ﵁ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ لَيْسَ مِنَّا مَنْ لَطَمَ الْخُدُودَ وَشَقَّ الْجُيُوبَ وَدَعَا بِدَعْوَى الْجَاهِلِيَّةِ رواه البخاري برقم ١٢٩٤

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் கன்னங்களில் அறைந்து கொள்வாரோ, சட்டைகளைக் கிழித்துக்கொள்வாரோ, அறியாமைக்கால கோஷங்களை எழுப்புவாரோ அவர் நம்மை சேர்ந்தவர் அல்ல.[331]

அறியாமைக்கால கோஷம் என்றால், எனக்கு வந்த அழிவே! எனக்கு ஏற்பட்ட நாசமே! என்பது போன்ற வார்த்தைகளை கூறுவதாகும்.

عَنْ أَبِي مَالِكٍ الْأَشْعَرِيِّ ﵁ قَالَ قَالَ رَسُولِ اللّٰهِ ﷺ النَّائِحَةُ إِذَا لَمْ تَتُبْ قَبْلَ مَوْتِهَا تُقَامُ يَوْمَ الْقِيَامَةِ وَعَلَيْهَا سِرْبَالٌ مِنْ قَطِرَانٍ وَدِرْعٌ مِنْ جَرَبٍ رَواه مسلم عن أَبِي مَالِكٍ الْأَشْعَرِيِّ برقم ٩٣٤

ஒப்பாரி வைத்து அழுபவள் தான் மரணிப்பதற்கு முன்னர் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கேட்டு திருந்தவில்லை என்றால் நாளை மறுமையில் அவள் கொண்டு வரப்படும்போது அவள் மீது கொதிக்கின்ற தாரினால் (அல்லது கொதிக்கின்ற எண்ணையினால்) ஆன ஆடை இருக்கும். (கடுமையான) சொறி சிரங்கு அவள் மீது இரும்பு கவச ஆடையைப் போன்று ஆகிவிடும்.[332]

--------------

331. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ﵁, நூல்: புகாரி, எண்: 1294
332. அறிவிப்பாளர்: அபூ மாலிக் அல்அஷ்அரி ﵁, நூல்: முஸ்லிம், எண்: 934

ஜனாஸா தொழுகை

**தொழுகையின் முதல் இருப்பில் தஷஹ்ஹுத் மற்றும் பின்வரும் ஸலவாத் ஓதவேண்டும்.**

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰى أَزْوَاجِهِ وَذُرِّيَّتِهِ كَمَا صَلَّيْتَ عَلٰى آلِ إِبْرَاهِيْمَ وَبَارِكْ عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰى أَزْوَاجِهِ وَذُرِّيَّتِهِ كَمَا بَارَكْتَ عَلٰى آلِ إِبْرَاهِيْمَ إِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ

அல்லாஹ்வே! இப்ராஹீமின் குடும்பத்தார் மீது நீ விசேஷமாக அருள் புரிந்தது போன்று, முஹம்மதின் மீதும் அவரது மனைவியர் மீதும் அவரது வழித்தோன்றல்கள் மீதும் விசேஷமான அருளைப் பொழி! இப்ராஹீமின் குடும்பத்தார் மீது நீ பரக்கத் செய்தது போன்று, முஹம்மதின் மீதும் அவரது மனைவியர் மீதும் அவரது வழித்தோன்றல்கள் மீதும் பரக்கத் செய்! நிச்சயமாக நீ புகழ்மிக்கவன்! கண்ணியத்திற்குரியவன்!

(ஸஹீஹுல் புகாரி 3370)

**தொழுகையின் இறுதி அமர்வில் அத்தஹிய்யாத் மற்றும் ஸலவாத்துடன் பின்வரும் துஆக்களையும் ஓதவேண்டும்**

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ وَأَعُوْذُ بِكَ مِنْ فِتْنَةِ الْمَسِيْحِ الدَّجَّالِ وَأَعُوْذُ بِكَ مِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْمَأْثَمِ وَالْمَغْرَمِ

அல்லாஹ்வே! உன்னிடம் 'கப்ரு'டைய வேதனையை விட்டு நிச்சயமாக நான் பாதுகாவல் தேடுகிறேன். மேலும், உன்னிடம் 'தஜ்ஜாலு'டைய குழப்பத்தை விட்டு பாதுகாவல் தேடுகிறேன். உன்னிடம் வாழ்வு மற்றும் மரணத்தின் குழப்பத்தை விட்டு பாதுகாவல் தேடுகிறேன். அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னிடம் பாவத்தை விட்டும் கடனை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன். (ஸஹீஹுல் புகாரி 832)

اَللّٰهُمَّ إِنِّيْ ظَلَمْتُ نَفْسِيْ ظُلْمًا كَثِيْرًا وَّلَا يَغْفِرُ الذُّنُوْبَ إِلَّا أَنْتَ فَاغْفِرْ لِيْ مَغْفِرَةً مِّنْ عِنْدِكَ وَارْحَمْنِيْ إِنَّكَ أَنْتَ الْغَفُوْرُ الرَّحِيْمُ

அல்லாஹ்வே! நிச்சயமாக நான் எனக்கு அதிகமாக அநீதி இழைத்துக் கொண்டேன்; உன்னைத்தவிர பாவங்களை மன்னிப்பவன் வேறு யாருமில்லை; உன் புறத்தி-ருந்து எனக்கு விசேஷமான மன்னிப்பை வழங்கு! எனக்குக் கருணை காட்டு! நிச்சயமாக நீதான் மிக்க மன்னிப்பாளன்; நிகரற்ற அன்புடையவன். (ஸஹீஹுல் புகாரி 834)

---------------